# இந்திய கம்யூனிஸ்ட் இயக்க முன்னோடிகள்



ஆர். பட்டாபிராமன்

# இந்திய கம்யூனிச இயக்க முன்னோடிகள்
(Fore Runners of Communist Movement of India)

1. தோழர் பி சி ஜோஷி
2. தோழர் பி டி ரணதிவே
3. தோழர் எஸ் ஏ டாங்கே
4. தோழர் அஜாய்கோஷ்
5. தோழர் ராஜேஸ்வரராவ்
6. தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாட்
7. தோழர் ஹிரன் முகர்ஜி
8. தோழர் ஜகன்னாத் சர்கார்
9. தோழர் எம் என் ராய்

## கம்யூனிச இயக்க முன்னோடிகள்

விடுதலை இயக்க காலத்தில் சோவியத் புரட்சியின் தாக்கத்தில் வெளிநாடுகளில் சென்ற புரட்சிகரவாதிகள், இந்திய இளைஞர்கள் இங்கும் விடுதலைக்கு பின்னர் சோவியத்வகைப்பட்ட சோசலிச ஆட்சி என்கிற கனவை வைத்திருந்தனர். அதற்கு காங்கிரஸ் பேரியக்கமும், காந்தியும் வாகனமா என்பதில் அவர்கள் கொள்கை, நடைமுறை தெளிவுகளை போதுமான அளவு பெறமுடியாமல் போனது. சோவியத், பிரிட்டிஷ் வகைப்பட்ட சொல்லிக்கொடுப்புகளுக்கும், இந்தியாவில் யதார்த்த வெளியில் அவர்கள் உணர்ந்ததற்கும் ஏராள இடைவெளிகளை அவர்கள் கண்டனர். காங்கிரஸ், காந்தி என்பதுடன் சோசலிஸ்ட்கள் - இடதுசாரிகள் என பல்வேறு போக்குகளுடன் ராய், போஸ், ஜேபி-லோகியா முரண்பாடுகளை அவர்கள் பார்த்தனர். கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ளும் பணியாற்றிய இளைஞர்கள் தங்கள் மத்தியிலும் கருத்து போரிட்டுக்கொண்டனர்.

ஏறத்தாழ 90 ஆண்டுகளுக்கு மேலான அனுபவங்களுடன் அரசியல் பயணம் நடத்திவரும் கம்யூனிஸ்ட் கட்சியின் முன்னோடி தலைவர்கள் பற்றிய சில குறிப்புகள் இங்கு கட்டுரைகளாக தரப்பட்டுள்ளன. கடந்த சில மாதங்களில் அவ்வப்போது எழுதப்பட்ட கட்டுரைகள் தொகுப்பாக இங்கு தரப்படுகிறது இதில் தோழர்கள் சுந்தரையா, ஜோதிபாசு, சர்தேசாய், அதிகாரி, முசாபர், காட்டே போன்ற பலர் இடம் பெறவில்லை. தொடர்ந்து முன்னோடிகளை அவர்களது வெற்றிகளை, தடுக்கி தடுமாறிய இடங்களை அனுபவத்திற்காக எடுத்துக் கொள்வது இந்திய அரசியல் பயிலும் மாணவர்களுக்கு அவசியமானதாக இருக்கும். படிக்கவும் கருத்துக்களை செழுமைப்படுத்தவும் வேண்டுகிறேன்.

20-5-17 ஆர்.பட்டாபிராமன்

## P C ஜோஷி



ஜோஷி தனது 28ஆம் வயதிலேயே இந்திய கம்யூனிஸ்ட்அரசியல் இயக்க தலைமை பொறுப்பிற்கு வந்தவர். கட்சியின் பொதுச்செயலர் பொறுப்பை துணிச்சலுடன் எடுத்துக் கொண்டவர். நூற்றுக்கும் குறைவாக இருந்த உறுப்பினர்களின் எண்ணிக்கையை விடுதலையின் நெருக்கத்தின் போது 80 ஆயிரமாக உயர்த்தியவர். பன்முகத் தன்மை கொண்ட பல்வேறு பிரிவுகளுடன் விவாதித்து நெருக்கமாக விழைந்தவர். எழுத்தாளர், கலைஞர், கவிஞர், அறிவாளிகள், விஞ்ஞானிகள் என தோழமை கொண்டவர். நாட்டின் விடுதலை குறித்த பார்வை உட்கட்சி சச்சரவுகளால் தனது முதன்மை இடத்தை பறி கொடுத்தவர். அவரது தேசிய முன்னணி என்கிற அரசியல் முன்னெடுப்பு அன்றுள்ள சூழலில் விவாதங்களை கிளப்பியது.

ஜோஷி அல்மோரா எனும் இமாலய அடிவாரத்தில் எப்ரல் 14, 1907ல் பிறந்தவர். முழுப்பெயர் பூரண சந்திர ஜோஷி. தந்தையார் பண்டிட் ஹர் நந்தன் ஜோஷி தலைமை ஆசிரியராக இருந்தவர். தந்தை தண்ணீரில் மூழ்கி இறந்தார். தாயார் மாலதிதேவி. ஜோஷியின் 10வது வயதில் நோய்வாய்ப்பட்டு இறந்தார்.

அன்றுள்ள சூழலில் மற்ற அனைவரையும் போல் பள்ளிகளில் காந்தி குறித்த பேச்சறிந்தார் ஜோஷி. சுயராஜ்யம் என்ற முழக்கம் பாலகன் ஜோஷியிடம் விடுதலை தாகத்தை எற்படுத்தியது. மீரட் மாவட்டம் ஹபூரில் தனது மெட்ரிக் கல்வியை 1920 ல் முடிக்கிறார். இண்டர்மீடியட்டில் சமஸ்கிருதத்தில் தங்க

மெடலை பெறுகிறார். 1924ல் அலகாபாத் பலகலை கழகத்தில் பொருளாதாரம், ஆங்கிலத்தில் பட்டம் பெறுகிறார். 1928க்குள் MA LLB ஆகிறார்.

அலகாபாத் நகரம் மதன்மோகன் மாளவியா தாக்கத்திலும் மோதிலால் நேரு தாக்கத்திலும் இருந்த நேரமது. மோதிலால் பக்கம் நிற்பவராக ஜோஷி மாறுகிறார்.. கதர் ஆடையுடன் நவஜவான் பாரத்சபா உறுப்பினராகிறார். ஜவஹர்லால் நேரு தலைமையில் செயல்பட்ட அலகாபாத் இளைஞர் கழக உறுப்பினராகிறார். ஆனந்தபவன் ஈர்ப்பு மையமாகிறது. 1928 ஆம் ஆண்டு கல்கத்தா காங்கிரஸ் கூட்டத்தில் இந்து-முஸ்லிம் பிரச்சினைகளில் நேருவின் நிலைபாட்டில் ஜோஷி அதிருப்தியுற்றார். அல்மோர மாவட்டம் சார்ந்த அப்தர் அலி என்கிற தொழிற்சங்க தலைவர் மூலம் அவருக்கு ரஜினி பாமித்ததின் "நவீன இந்தியா" எம்.என்.ராயின் இந்திய அரசியலின் எதிர்காலம் போன்ற எழுத்துக்கள் கிட்டின. எம்.என் ராய் மீது மரியாதை ஏற்பட்டது. தோழர் ரஜினி பாமிதத் எங்கள் வழிகாட்டியானார் என ஜோஷி பின்னர் குறிப்பிடுகிறார். லேபர் மன்த்லி இதழும் கிடைக்கிறது.

மீரத்தில் செப் 1928ல் விவசாய தொழிலாளர் கட்சியுடன் தனது தொடர்பை ஏற்படுத்திக்கொள்கிறார் ஜோஷி. அதன் இணைச்செயலராகிறார். சர்தேசாய், பரத்வாஜ் போன்றவர்களின் தோழமையும் கிட்டுகிறது. பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சியின் மீதான மரியாதை உயர்கிறது. அங்கிருந்து அனுப்பப்பட்ட பிலிப் ஸ்பிராட், பென்பிராட்லியுடன் விவாதங்கள் நடைபெறுகின்றன. பிலிப் கேம்பிரிட்ஜ் பட்டதாரி. பிராட்லி பொறியியல் தொழிலாளி பகுதியிலிருந்து கட்சிக்கு வந்தவர். கட்சி அமைப்பை கட்டுவது குறித்த பயிற்சியை அவர்கள் தந்தனர். காந்தி குறித்த எதிர்மறை கருத்துக்களே தரப்பட்டுவந்தது.

பிரிட்டிஷார் 1929ல் தொழிற்தகராறு சட்டம் மூலம் ஒடுக்குமுறைகளை கட்டவிழ்த்தனர். 1929 மார்ச்சில் போராடிய அனைத்து முக்கிய தலைவர்கள் டாங்கே,காட்டே, மிராஜ்கர், அதிகாரி, முசாபர், தாரணி, பிராட்லி, ஸ்பிராட் என 31 தோழர்கள் விசாரணை கைதிகளாகினர். 22 வயதான ஜோஷியும் விடுதியிலிருந்து தூக்கி வரப்பட்டார். மீரத் சதிவழக்கு என பின்னர் இது வரலாற்றில் இடம்பெற்றது. மோதிலால் தலைமையில் தோழர்கள் பாதுகாப்பு கமிட்டி ஒன்றை காங்கிரஸ் அமைத்தது. காந்தி நேரிடையாக வந்து சிறையில் தோழர்களை சந்தித்தார். சிறையை மார்க்சிய கல்விக் கூடமாக தோழர்கள் மாற்றினர். அனைவரும் தங்களை சாதியற்றவர்கள் என பதிவுசெய்து கொண்டனர். ஏகாதிபத்திய எதிர்ப்பு கண்டன உரைகளை வழக்கு விசாரணயின்போது வெளிப்படுத்தினர். சோசலிச புரட்சி என பேசினர்.

ஹிரன்முகர்ஜி ஆங்கில புலமையை அனைவரும் அறிவர். ஜோஷி மிக நேர்த்தியாக ஆங்கிலத்தில் ஆவணங்கள் உருவாக்குவதில் தேர்ச்சியை காண்பித்தார் என ஹிரன் பதிவிடுகிறார். சிறையில் மிக பணிவுடன், இணக்கமாக நடப்பவராக ஜோஷியிருந்தார். அவரின் தோட்டப்பயிற்சி பாராட்டை பெற்றது. 1933ல் வெளிவந்த பின்னர் தொடர்ந்து ஜோஷி கட்சி வேலைகளில் ஈடுபட்டார். டெக்ஸ்டைல் தொழிலாளர் போராட்டம் மீண்டும் இரு ஆண்டுகள் சிறைக்கு அவரை அனுப்பியது. இம்முறை துணிவெளுத்தல், தோட்டவேலைகள் தரப்பட்டன.

தோழர்கள் ரணதிவே போன்றவர்கள் தந்த தீவிர முழக்கங்களால் கட்சியில் பிரிவினை ஏற்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சியே மிக ஆரம்பநிலையில்தான் இருந்தது. அதில் போல்ஸ்விக் என பேசியதில் மேலும் பலவீனம் ஏற்பட்டது. அகிலத்தின் 7வது மாநாடு 1935ல் காங்கிரஸ் ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கம் என்ற புரிதலுக்கு வந்தது. அய்க்கிய முன்னணி தந்திர பார்வையில் பென்பிராட்லி தீசீஸ் பிப்ரவரி 1936 இம்ப்ரிகார் இதழில் வெளியிடப்பட்டது. காங்கிரசுடன் இணைந்தா என்ற தயக்கம் நெருடல் இங்கிருந்த இளம் கம்யூனிஸ்ட்களுக்கு இருந்தது. ரஜினிபாமிதத் பல்வேறு குழுக்களுடன் விவாதித்து அனைத்திந்திய ஒருங்கிணப்பை வலியுறுத்தினார். கட்சி மையம் ஒன்றை பலப்படுத்தி செயல்பட முடிவானது. தோழர் ஜோஷியிடம் பொதுச்செயலர் பொறுப்பு கொடுக்கப்பட்டது. சர்வதேச இயக்கத்தலைமை வழிகாட்டலுடன் இவை யாவும் செய்யப்பட்டன.

மிஷல் காரி என்கிற ஐ சி எஸ் மற்றும் தோழர் மிஷல் ஸ்காட் உதவியுடன் கல்கத்தாவில் மையம் ஒன்று அமைக்கப்படுகிறது. ஜோஷி, அஜாய், பரத்வாஜ் சந்திப்புடன் சூரத்தில் ஜூன் 1936ல் ஜோஷி பொதுச்செயலராக அறிவிக்கப்படுகிறார். மேற்கு பகுதிக்கு அஜாய், வடக்கிற்கு பரத்வாஜ், தென்பகுதிக்கு காட்டே பொறுப்பாக்கப்படுகின்றனர். 1936ல் முற்போக்கு எழுத்தாளர் அமைப்பு ஒன்றும் உருவாக்கப்படுகிறது. AISF என்கிற மாணவர் அமைப்பு அமைக்கப்படுகிறது. 1935ல் பாரிசில் நடந்த சர்வதேச எழுத்தாளர் மாநாட்டின் தாக்கம் இங்கும் ஏற்பட்டது. பாசிச கலாச்சாரத்திற்கு எதிரான குரலை அங்கு கார்க்கி, மால்ரக்ஸ், ஈ எம் பாஸ்டர் எதிரொலித்தனர். 1938ல் விவசாயி- கவிஞர் கூட்டு மாநாடு என்ற புதுமை பரிதாபாத்தில் நடந்த்து.1945ல் உருது எழுத்தாளர் மாநாடு ஒன்று அய்தராபாத்தில் சரோஜினிதேவி நாயுடு தலைமையில் நடைபெற்றது. இவ்வனைத்திலும் உத்வேக பங்களிப்பை நல்கினார் ஜோஷி.

ஜமின்தாரி ஒழிப்பு என்ற முழக்கத்தில் கிசான் சபாக்கள் உருவான காலமும் இதுதான். National Front பத்திரிக்கையும் துவங்கப்பட்டது. ஜோஷியுடன் டாக்டர் அதிகாரி கல்கத்தாவில் செயல்பட்டுவந்தார். ஜோஷி, அதிகாரி, பரத்வாஜ் , அஜாய் பத்திரிக்கையின் ஆசிரியர் குழுவில் செயல்பட்டனர். 1938ல் கட்சியின் மையம்

பம்பாய்க்கு மாற்றப்பட்டது. தேசிய காங்கிரசும் தொழிலாளிவர்க்கமும் என்ற பிரசுரத்தை கட்சி வெளியிட்டது. அரசியல் போராட்டங்களில் பங்கேற்பீர் என்ற வேண்டுகோளும் விடப்பட்டது. சுபாஷ்போஸ் காங்கிரஸ் தலைவராக வேண்டும் என கட்சி நிலை எடுத்தது.

தோழர் ஜோஷ்யின் தனிசிறப்பு மணிக்கணக்காக இளைஞர்களுடன் தனிஉரையாடல்களை மேற்கொள்வது- அதன் மூலம் தோழர்களை ஈர்ப்பது என்பதாக இருந்தது. 1942 வெள்ளையனே வெளியேறு இயக்கத்தின் போது கட்சி பல விமர்சனங்களை சந்தித்தது. வங்க பஞ்சத்தில் மக்கள் பணியாற்றி கட்சி தன்னை மீட்டெடுத்துக் கொள்ள வேண்டும் என பெரும் களப்பணிக்கு ஜோஷி திட்டமிட்டு கட்சித்தொண்டர்களை இறக்கினார். பஞ்சத்தின்போது ஒருகோடி மக்கள் ஏதோ ஒருவகையில் பாதிக்கப்பட்டிருந்தனர். தெருவெல்லாம் பிணங்கள் என்ற நிலை. பல்லாயிரக்கணக்கான பெண்கள் அன்றாட வாழ்க்கைக்கே விபச்சாரிகள் ஆக்கப்பட்ட சூழல் இருந்தது. பெண்கள் சுயபாதுகாப்பு அமைப்பை ஒன்றை நிறுவி ஏராள இளம் பெண்களை காத்திட , மீட்டெடுக்க இயக்கம் ஒன்றிற்கு ஜோஷி வழிகாட்டினார். கைவிடப்பட்ட பல்லாயிரக்கணக்கான மக்களின் பசியாற்றிட ஆயிரக்கணக்கில் உணவுகூடங்கள் தேவைப்பட்டன. கட்சி நூற்றுக்கணக்கன உணவுகூடங்கள் அமைத்திட ஜோஷி வழிகாட்டினார். தாமே நேரில் சென்று செயல்படும் தோழர்களை உற்சாகப்படுத்தினார்.

ஜப்பான் பாசிச எதிர்ப்பு முழக்கங்களுடன் விடுதலையை கோரும் பல்வேறு கலை நிகழ்ச்சிகளை ஜோஷி அமைக்க செய்தார். வங்கம் வீழ்ந்தால் இந்தியா வாழாது என்ற முழக்கத்துடன் வங்க நிலைமைகளை தேசிய பிரச்சனையாக்கினார். தேசிய அரசாங்கம் என்ற முழக்கத்தை எம் என் ராய் ஆதரவாளர்கள் பேசிவந்தனர். ஜோஷியும் கல்கத்தாவில் நிலைமைகளை சீராக்கிட தேசிய அரசாங்கம் என்றார். டாக்டர் ஷியாமபிரசாத் போன்றவர் உதவட்டும் என்றார். அந்த அளவிற்கு வங்க மீட்பு என்பதில் அக்கறை செலுத்தினார்.

1943ல் இந்திய மக்கள் நாடக மன்றம் என்கிற இப்டா உருவாக்கப்பட்டது. கட்சி சொல்லத்தகுந்த அளவில் உறுப்பினர்களை பெற்றது. முழுநேர புரட்சியாளர்கள் என்ற பதிவில் முழுநேர பணியாளர்கள் 2000 இருந்தனர். தொழிற்சங்கம், கிசான் சபா, மாணவர் இயக்கம், மாதர் அமைப்புகளில் கட்சி செல்வாக்கு பெற்றது. கட்சியின் பத்திரிக்கைகள், பிரசுரங்கள் 11 மொழிகளில் வெளிவந்தன. அடிக்கப்பட்ட ஆயிரக்கணக்கன கட்சி வெளியீடுகள் தேங்கி நிற்காமல் விற்கப்பட்டன. அனைத்திந்திய அரசியலில் விவாத இடம் ஒன்று கட்சிக்கு கிடைக்கப்பெற்றது. அனைத்திந்திய அமைப்பு வடிவமும் கிடைத்தது. தோழர்களை கட்சிக்கு ஈர்ப்பதில் ஜோஷியின் திறமை பாராட்டுக்குரியதாக இருந்தது. அறிவுஜீவிகள், கவிஞர், கலைஞர்

என பலரும் தயக்கமின்றி அவருடன் விவாத உறவுகளை மரியாதையை வைத்திருந்தனர்.

1941 கையூர் தியாகிகளின் பேரன்பில் நெகிழ்ந்தார் ஜோஷி. கையூர் போராட்டத்தில் 60 தோழர்கள் மீது வழக்கு- நால்வருக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருந்தது. சாவைக்கண்டு சோராமல் அப்பு, அபுபக்கர், சிறுகண்டன், குணாம்பு ஆகிய தோழர்கள் ஜோஷியை பார்க்க விருப்பம் தெரிவித்தனர். அவர்களுக்கு மலையாளம் மட்டுமே தெரியும் , தோழர் ஜோஷி பார்க்க வந்தார். அவர்களை பற்றி மிகப்பெருமையுடன் உரையாடினார். தோழர் கிருஷ்ணன் பிள்ளை மொழிபெயர்த்தார். மகத்தான கடமைக்கான உயிர்த்தியாகம் வீணாகாது என ஜோஷி தெரிவித்தவுடன் கட்சி பொதுச்செயலர் மூலம் தங்களுக்கு மாபெரும் அங்கீகரிப்பை தந்துவிட்டதாக அத்தோழர்கள் மனதிலிருந்து நன்றி தெரிவித்தனர். காவிய நிகழ்வு போல் இக்காட்சி அமைந்தது. கம்யூனிஸ்ட் கட்சியும் ஜோஷியும் வாழ்க என சொல்லி அத்தோழர்கள் தூக்கில் ஏறினர்.

ஜோஷிக்கு மற்றொரு சிறந்த பொறுமைக்குணமும் இருந்தது. நாம் கூட்டத்தில் பேசும்போது யாராவது கவனிக்காமல் பேசிக்கொண்டிருந்தால், நமக்கு கோபம் வரலாம்- சோர்வு ஏற்படும்- கவனம் சிதறலாம். ஆனால் ஜோஷி அதை நாம் சரியாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்பார். நாம் பேசுவது அவர்களை தொடவில்லை என புரிந்து கொள்வோம் என்பார். அவரது கூட்டங்கள் பலநேரங்களில் தடை பெற்றிருக்கிறது. பாட்னா, பெகுசராய் சுற்றுப்பயணத்தில் அவருக்கு இவ்வனுபவம் ஏற்பட்டது. கட்சி ஒழிக. ஜோஷி ஒழிக முழக்கங்களை அவர் கேட்டார். ஜோஷி மிக சிறந்த பேச்சாளர் என கருதப்படவில்லை. விளக்கபாணியில் உரையாடல் செய்பவராக இருந்தார். அவர் தனது பயணத்தை மூன்றாம் பெட்டிகளில்தான் செய்து வந்தார்.

இரண்டாம் உலகபோர் சூழலில் கட்சித்தலைவர்கள் சிறையிலிருந்தனர். தியோலி சிறையில் தோழர்கள் டாங்கே, ரணதிவே, அஜாய் ஆகியோருக்கு மக்கள் யுத்தம் என்கிற ஆவணம் கிடைக்கப்பெற்றது. காங்கிரசின் யுத்த எதிர்ப்பு நிலைப்பாட்டை தாக்கியும், சோவியத்தை காப்பது என்ற பொருளிலும் அறிக்கை ஒன்று தயாரிக்கபட்டது. முன்பு பிரிட்டிஷ் தலைவர்கள் தேச உணர்விற்கு மிக எதிராக போகவேண்டியதில்லை என்ற அறிவுரையை ஜோஷி, அதிகாரி இருவரிடமும் தந்திருந்தனர். ஆனால் சோவியத் யுத்த களத்திற்கு வந்தவுடன் மக்கள் யுத்த முழக்கம் வந்தது.

தோழர் ரஜினி பாமிதத்திற்கு அடுத்து கட்சி கொள்கை நிலைகளில் டாக்டர் அதிகாரியை ஜோஷி பொதுவாக மதித்து வந்தார். அதிகாரி சொல்லும் போது தட்ட முடியாது என்ற நிலையை ஜோஷி எடுத்தார். ஹன்ஸ்ராஜ் என்ற பெயரில்

அவ்வறிக்கை ஜோஷியால் Forward to Freedom வெளியிடப்பட்டது. தேச ஒற்றுமை, பாதுகாப்பு, தேச அரசாங்கம் என்ற முழக்கம் தரப்பட்டது. விடுதலைப்போரில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும் அதன் செயல்பாடுகளும் என்ற பிரசுரத்தை ஜோஷி எழுதினார். அதற்கு பிரிட்டிஷ் கட்சியின் செயலர் ஹாரிபொலிட் முன்னுரை எழுதி அப்பிரசுரம் லண்டனில் வெளியிடப்பட்டது. ஜப்பானின் பேராபத்து அதில் சுட்டிக்காட்டப்பட்ட்து. யுத்த்த்தில் நடுநிலை இல்லை என்பது தெளிவாக்கப்பட்ட்து.

கட்சி எடுத்த நிலைப்பட்டிற்கு காங்கிரசின் வலது பட்டேல் பிரிவும், காங்கிரஸ் சோசலிஸ்ட் இடது ஜெயபிரகாஷ் பிரிவும் கடும் கண்டனங்களை எழுப்பின. காந்தியை ஜோஷி நேரிடையாக சந்தித்து தங்கள் நிலைபாட்டை விளக்கினார். பின்னர் நடந்த கடித போக்குவரத்துகள் காந்தி- ஜோசி கடிதங்கள் என வெளியாயின. காந்தியை தேசத்தந்தை என ஜோஷி விளித்தார். காந்தியும் உங்களைப் போன்றவர்களை நான் இழக்க விரும்பவில்லை என பேசினார். காங்கிரஸ் ராம்கர் மாநாட்டின்போது கூட பரத்வாஜ் போன்ற தோழர்கள் கைதாவதிலிருந்து தப்பிட காந்தியுடன் ஒரே காரில் பயணிக்க முடிந்தது. வெள்ளையனே வெளியேறு தீர்மானம் வந்தபோது டாக்டர் கே எம் அஷ்ரப் போன்ற கம்யூனிஸ்ட் தலைவர்கள் எதிர்த்து கலகம் ஏதும் செய்யவில்லை. ஆனால் காங்கிரஸ் தலைமை தங்கள் அமைப்பில் செயலாற்றிய கம்யூனிஸ்ட்கள் மீது சார்ஜ்சீட் கொடுத்தது-. நீக்கவேண்டும் என்று பேசியது. ஆனால் அரசியல் பெருந்தன்மையுடன் ஜோஷி தலைமை காங்கிரசை ஒடுக்கி தலைவர்களை சிறையில் வாட வைப்பது பிரிட்டிஷ் நலன்களுக்குகூட உகந்ததல்ல என்ற நேரிய அறிக்கையை தந்தார்.

கம்யூனிஸ்ட்கள் மீதான காங்கிரஸ் குற்றசாட்டுகளுக்கு பதில் என்கிற ஆவணத்தை கடும் உழைப்பை நல்கி ஜோஷி தயாரித்தார். காங்கிரஸ் காரிய கமிட்டிக்கு தருவதற்காகவே தயாரிக்கப்பட்ட ஆவணமது. 1945ல் PPH வெளியீடாக வந்தது. காங்கிரசும் லீகும் சேர்ந்து செயலாற்ற வேண்டும் என்ற கருத்தை ஜோஷி தொடர்ந்து சொல்லி வந்தார். They Must Meet, They Must Meet Again என்கிற அழுத்தம் தரக்கூடிய பிரசுரங்கங்களை கொணர்ந்தார். காந்தி- ஜின்னவைத்தான் அவர்கள் என ஜோஷி குறிப்பிட்டார். அதேபோல் அக்டோபர் 1945ல் காங்கிரஸ் லீக் கம்யூனிஸ்ட் தேசிய முன்னணி என பேசினார். தெபகா, தெலங்கானா எழுச்சிகளில் கட்சி முக்கிய பாத்திரமாற்றியது. தெலங்கனா பகுதி போராட்டத்திற்கு ஆயுதங்கள் பெற்று அனுப்புவதில் அவர் பெரும் பங்காற்றினார். 1946 தொழிலாளர் இயக்கங்கள் பெருகின.

லீக் பாகிஸ்தான் கோரிக்கையை உறுதியாக வற்புறுத்தி வந்தது. 1946 ஜூனில் பிரிட்டிஷ் திட்டம் எதிர்ப்போம் என்றது கட்சி. வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் அரசியல் சட்ட அசெம்பிளி என்றது. டாக்டர் அதிகாரி லெனினிய

வெளிச்சத்தில் பாகிஸ்தான் சுயநிர்ணய உரிமைக்கு ஆதரவு ஆவணம் என்றார். ஜோஷி தயக்கம் எடுபடவில்லை. ரஜினிபாமிதத்தின் அறிவுரைக்கு பின்னர் பாகிஸ்தான் கோரிக்கையை சுயநிர்ணய பின்னணியில் பார்த்ததும் அதற்கு லெனினை துணைக்கு அழைத்துக்கொண்டதும் தவறு என புரிந்துகொள்ளப்பட்ட்து. இதை ஜோஷி பின்னாட்களில் தெளிவுபடுத்தினார்.

மவுண்ட்பாட்டன் தனது திட்டத்துடன் மார்ச் 1947ல் இந்தியா வருகிறார். காங்கிரசுடன் உறவுகளை சரி செய்திட கட்சிக்கு அறிவுறுத்தல் வருகிறது. கட்சி இந்து முஸ்லீம் ஒற்றுமை முழக்கத்தை பலப்படுத்த துவங்கியது. விடுதலை சமயத்தில் நாட்டின் பிரிவினையாலும் தொடர் வகுப்புவாத கலவரங்களாலும் நாட்டின் ஆன்மா பாதிக்கப்படுகிறது. நாடு அலைக்கழிக்கப்படுகிறது.

காந்தி, நேருவுடன் சோசலிஸ்ட், கம்யூனிஸ்ட் அய்க்கிய முன்னணி என்கிறார் ஜோஷி. கட்சிக்குள் இந்தப்பாதை மீது விமர்சனம் எழுகிறது. நேரு சீனாவின் சியாங்காய் ஷேக்குடன் ஒப்பிடப்படுகிறார். தெலங்கானா ஏனான் என்ற ஒப்பீடு வருகிறது. இந்திய சுதந்திரம் போலி என கருத்துக்கள் முன்வருகின்றன. ரணதிவே, அதிகாரி இவ்விமர்சனங்களை முன்வைக்கின்றனர். அய்ரோப்பாவிலிருந்த டாங்கே பெல்கிரேடில் அகிலத்தின் பிரதிநிதி எட்வர்ட் கர்டெல்ஞ் என்பாரை சந்திக்கிறார். காங்கிரஸ் எதிர்ப்பும் போராட்டமும் அறிவுறுத்தப்படுகின்றன.. நாடு திரும்பிய டாங்கே இந்த வழிகாட்டலை பொலிட்ப்யூரோவில் வைக்கிறார். ஜோஷி பெரும் விமர்சனங்களுக்கு ஆளாகிறார்.

கட்சியின் பெரும்பான்மை ஜோஷியை நிராகரிக்கிறது. பொதுச்செயலரிலிருந்து ஜோஷி வெளியேறுகிறார். தோழர் ரணதிவே பொறுப்பேற்று பிப்ரவரி 1948 கல்கத்தா காங்கிரசில் பொதுச்செயலராகிறார். ஜோஷி தனிமைப்படுவது தவிர்க்க முடியாததாகிறது. சுயவிமர்சனம் வைத்துக்கொள்ளவேண்டும் என்பது அப்போது கட்டாயமாக இருந்தது . தலைவர்கள் அதை அனுசரிக்கவும் செய்தனர். ஆரம்பத்தில் சுந்தரையா போன்றவர் ஜோஷி பக்கம் நின்றாலும் பெரும்பான்மைக்கு முன் யாரும் நிற்கமுடியாது என்பது பொதுவான சூழல் நிலவியது. கட்சி ஆயுதம் தாங்கிய எழுச்சி என பேசியது. நகரங்களில் வேலைநிறுத்தம் கிராமங்களில் போராட்டங்கள் என்று வழிகாட்டப்பட்டது. புரட்சி மிக அருகாமையில் போன்ற சித்தரிப்புகள் வந்தன. விடுதலை நேரத்தில் ஏறத்தாழ வெகுஜன கட்சி 80 ஆயிரம் உறுப்பினர்கள் என்ற நிலையிலிருந்த கட்சி சரியத்துவங்கியது. இந்திய பூர்ஷ்வாக்கள் முழுமையாக ஏகாதிபத்திய பக்கம் என்பதை ஏற்கமுடியாது என்றார் ஜோஷி. சீர்திருத்த அபாயம் என 1949ல் ஜோஷியை கட்சியிலிருந்து தலைமை நீக்கியது.

. ஜோஷி பேராசிரியர் ஜே டி பெர்னால் மூலம் கட்சியின் தவறான பாதை குறித்தும் தனது நிலைப்பாட்டை குறித்தும் பிரிட்டிஷ் கட்சிக்கு எடுத்துரைக்க செய்தார். ரணதிவே மீது விமர்சனம் எழுந்தது ஆந்திர தோழர்கள் சீனப்பாதை என ராஜேஷ்வரராவ் தலைமையில் பேசினர். பின்னர் மூன்று பி ஆவணம் என டாங்கே, அதிகாரி, ஜோஷி முன்வைத்தனர். ஜோஷிக்கு அனைத்திலும் கருத்து வேறுபாடு இருந்தது. ராஜேஸ்வரராவிற்கு பின்னர் அஜாய் பொதுச்செயலர் பொறுப்பேற்றார். ஜோஷி மீண்டும் 1951 ஜூனில் கட்சிக்குள் சேர்க்கப்பட்டர். கட்சி ரணதிவேவை சுயவிமர்சன நிர்பந்தத்திற்கு உள்ளாக்கியபோது தனது அனுபவம் அவருக்கு வேண்டாம் என பேசினார் ஜோஷி. கட்சி தோழர்களை தனிமைப்படுத்துவதுபோல் நடப்பது சரியல்ல என்றும் கருதினார்.

ஜோஷி அலகாபாத் திரும்பி India Today என்கிற மாதப்பத்திரிக்கையை துவங்கினார். ரஜினிபாமிதத் எழுதிய புகழ்வாய்ந்த புத்தக தலைப்பு அது. இந்தியா சீனா சோவியத் கூட்டு அவசியம் என அதில் எழுதினார். முதல் பொதுத்தேர்தல் முடிந்தவுடன் காங்கிரசின் வெற்றியை குறைத்து மதிப்பிடவேண்டாம் என எச்சரித்தார். கட்சிக்கு வெளியே சிறந்தவர்கள் இருக்கின்றனர். அவர்களை கண்டறிந்து தோழமை கொள்வது அவசியம் என்றார். 1952 டிசம்பரில் வியன்னாவிற்கு சமாதான கவுன்சில் மாநாட்டிற்கு சென்றார். பாமிதத் அவரை பொறுமையுடன் இருக்க வேண்டிக்கொண்டார். அஜாய் சரி செய்வார் என்றார். மாற்றங்களை கொணர்வார் என்றார்.

நேருவின் 5 ஆண்டுதிட்டம், சீன-ருஷ்ய உறவுகள், நேரு குறித்து நேர்மறையான அணுகுமுறை அஜாய்- டாங்கேவிடம் ஏற்படவில்லை என ஜோஷி கருதினார். 1956 பாலக்காடு காங்கிரசில் விடுதலை குறித்த பார்வை அதன் முக்கியத்துவம் உணரப்பட்டது. ஜோஷியையும் ரணதிவேயையும் சமப்படுத்தி கயிற்றின் மேல் நடக்கும் வேலையை அஜாய் செய்யவேண்டியிருந்தது என்பதை ஜோஷியே ஏற்றுக்கொண்டார். எந்தவித வறட்டுத்தனமும் வெகுஜன கட்சிக்கு உதவாது என்பதில் ஜோஷி அழுத்தம் தந்தார். 1968 பேட்டி ஒன்றில் நமது செக்டேரியன் அணுகுமுறையால் நாம் கேரளா ஆட்சியை இழந்தோம் என கருத்து தெரிவித்தார்.

1958 அமிர்தசரஸ் காங்கிரசில் அவர் மத்திய கமிட்டிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு டெல்லி வந்தார். 1962வரை நியுஏஜ் ஆசிரியராக செயல்பட்டார். அவரால் டெல்லி தனிமையை பழக்கமாக மாற்றிக்கொள்ள முடியவில்லை. சீன யுத்தத்தின்போது கட்சிக்குள் வேறுபாடுகள் அதிகமாயின. டாங்கே பிரிட்டிஷ் ஏஜெண்ட் என தாக்கப்பட்டார். டாங்கே பதவி விலகி ஒற்றுமைக்கு உதவலாம் என்ற கருத்து ஜோஷியிடம் இருந்தது. கட்சி உடைவு என்பது பலருக்கு அளித்த வருத்தம்போல் ஜோஷிக்கும் வேதனையை தந்தது. 40 ஆண்டுகள் தவப்பணி வீண் போனது என

கருதினார். கட்சியைவிட்டு வெளியேறியவர்களில் சிலர் அதிதீவிர இடதுதன்மை கொண்டவர்கள் அல்லர், அவர்களுக்கு டாங்கே எதிர்ப்பு இருந்தது அவ்வளவுதான் என ஜோஷி பேசிவந்தார். உடைவிற்கு பின்னரும் கட்சி டிசம்பர் 1964ல் டாங்கேவை சேர்மனாக தேர்ந்தெடுத்தது. டாங்கே சேர்மன் ஆவது சரியல்ல என ஜோஷி கருதினார். அவர் தனக்கு மத்திய பொறுப்பு ஏதும் வேண்டாம் என மறுத்துவிட்டார்.

உ.பி மாநிலமையத்திற்கு தனது உறுப்பினரை மாற்றிக்கொண்டு அவர் சென்றார். அவரது கட்சிப்பணிகளில் சுணக்கம் ஏற்பட்டது. உடல்நிலையும் பாதிக்கப்பட்டது. தனது வாழ்நாட்களை இனி ஆய்வுகளில் கழிக்கலாம் என ஜவஹர்லால் பல்கலைகழக வளாகத்தை தேர்ந்தெடுத்து பெரும்பான்மை நேரத்தை செலவழித்தார். கேரளாவின் புகழ்வாய்ந்த சிந்தனையாளர்களில் ஒருவராக கருதப்பட்ட தோழர் தாமோதரனுடன் இணைந்து ஜே என் யு வில் இடதுசாரி ஆவண காப்பகம் நிறுவிட பாடுபட்டார். இதற்காக பெர்லின், மாஸ்கோ என தேடிச் சென்றார். இந்தியாவில் பல்வேறு நண்பர்களுடன் தொடர்பு கொண்டு ஆவணகாப்பிற்கான தொண்டினை செய்தார். 1857 முதல்விடுதலைப்போர் குறித்த கட்டுரைகளை கொணர்ந்தார்.

தோழர் ஜோஷியின் துணைவியார் தன்னளவில் புகழ் வாய்ந்த கல்பனா தத்தா என்பார். விடுதலை புரட்சியாளர். . கல்பனாதத் இன்றுள்ள பங்களாதேஷ் பகுதியில் உள்ள ஸ்ரீபூர், சிட்டகாங்கில் ஜூலை 27, 1913ல் பிறந்தவர். 1929ல் மெட்ரிக் முடித்தவுடன் மாணவர் இயக்கத்தில் இணைந்து சூர்யாசென் புரட்சிகர செயல்பாடுகளுக்கு துணையாக நின்றவர். அவர்கள் மே 19, 1933ல் சிட்டகாங் ஆயுத கிடங்கு கொள்ளை வழக்கில் கைதாகின்றனர். சென், தாரகேஷ்வர்தஸ்திதார், கல்பனாவிற்கு மரணதண்டனை விதிக்கப்படுகிறது, அப்போது கல்பனாவிற்கு வயது 20. ரவீந்திரநாத் தாகூர் போன்றவர்கள் தலையிடுகின்றனர். கல்பனாவிற்கு தண்டனை குறைக்கப்பட்டு, பின்னர் 1939ல் அவர் விடுதலையாகிறார். கம்யூனிஸ்ட் கட்சியில் இணைந்து பிரிட்டிஷ் எதிர்ப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார். கட்சி வகுப்பு ஒன்றிற்கு அவர் 1942ல் வந்தார். ஜோஷியிடம் நட்பு ஏற்பட்டு இருவரும் 1943 ஆகஸ்டில் மணம் புரிகின்றனர். கட்சி அலுவலகத்தில் ரணதிவேவும், முசாபரும் மணமக்கள் சார்பில் இருந்து பிஸ்கட்-தேநீர் செலவில் திருமணம் நடந்தேறியது. கட்சியில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் காலத்தில் கணவர் ஜோஷிக்கு ஆறுதலைதரும் துணையாக நின்றார். Indian Statistical துறையில் சில காலம் பணிபுரிந்தார். தனது இறுதி காலத்தில் பத்திரிக்கைகளில் பணிபுரிந்த தம் மகன் சந்த்ஜோஷி, மருமகள் மானி சட்டர்ஜியுடன் இருந்தார். பிப்ரவரி 8, 1995ல் அவர் இயற்கை எய்தினார். 15

ஆண்டுகளுக்கு முன்னதாக தோழர் பி சி ஜோஷி நவம்பர் 9, 1980ல் மறைந்திருந்தார்.

ஜோஷியின் மனிதநேய தோழமை குறித்து அவருடன் நெருக்கமாக பழகிய தோழர்கள் பதிவு செய்துள்ளனர். பம்பாய் கம்யூன் வாழ்வில் லீலா சுந்தரையா பொறுப்பில் தோழர்களுக்கான உணவுக்கூடம் துவங்கியது, இளம் மொகித் கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கையை வைத்துக் கொண்டு புரிந்து கொள்ள போராடியதுவரை ஜோஷி நகைச்சுவை உணர்வுடன் தோழமை பாராட்டியவற்றின் பதிவுகள் உள்ளன.

1934ல் 50 உறுப்பினர்கள் அதுவும் உதிரியாக என்று பிபன் சந்திரா தனது கட்டுரை ஒன்றில் தெரிவிக்கிறார். 1943ல் இது 17000 ஆக முதல் மாநாட்டின்போது உயர்ந்தது. விடுதலை காலத்தில் 80000 தாண்டியது. புகழ்வாய்ந்த இந்தியர்களான பி சி மகலனாபிஸ், டி டி கோசாம்பி. ராகுல்ஜி, பால்ராஜ் சஹானி, பி என் கங்குலி, கியான் சந்த், சம்பு மகராஜ் போன்றவர்கள் ஜோஷியிடம் அன்பு பாராட்டிய பெரியோர்களில் சிலர். People's Democarcy ல் ஜோஷி நூற்றாண்டின் போது ஜோஷியின் பங்களிப்பை சுட்டிக்காட்டி தோழர் பிரகாஷ் காரத் கட்டுரை ஒன்றை எழுதினார். ஜோஷியை நாங்கள் எதிர்த்தோம் என்றாலும் கம்யூனிஸ்ட் கட்சியை கட்டிய முன்னோடிகளுள் ஜோஷி முக்கியமானவர். அவர் பங்களிப்பை மறப்பது வரலாற்றுக்கு புறம்பானது- மார்க்சியத்திற்கும் புறம்பானது என்று அதில் அவர் குறிப்பிடுகிறார்.

கம்யூனிஸ்ட் இயக்கம் போன்ற சர்வதேச கோட்பாடுகளைகொண்ட இயக்கங்கள் நேஷனலிசம் என்பதை பூர்ஷ்வா கருத்துருவம் என குறுக்கிவிடக்கூடாது என்பதிலே ஜோஷிக்கு அளப்பரிய பங்களிப்பு இருந்தது. காந்தி பற்றிய புரிதலில் அவரது பார்வையை கட்சியின் பார்வையை வரலாற்றாய்வாளர் பிபின் சந்திரபால் குறையாக விமர்சிக்கிறார். பாமிதத் வழியாக காந்தியை அவர்கள் கண்டனர். பாமிதத்தின் ஆய்வுகள் அரைகுறையாக இருந்தன என்பது பிபின் வைத்த விமர்சனமாக இருந்தது. நேருவின் மறைவு முதலாண்டு நினைவில் Nehru Legacy- A self Critical Communist Evolution என்ற கட்டுரையை ஜோஷி எழுதினார்

பாலக்காடு காங்கிரசின்போது ராஜேஸ்வர்ராவ்,பவானிசென், சோமநாத் லாகிரி, ரவிநாரயண் ரெட்டி போன்றவர்கள் ஜோஷி நிலைப்பட்டிற்கு நெருக்கமாக இருந்தனர். கட்சியின் கொள்கை நிலையில் திருப்புமுனையாக அமைந்த 1958 அமிர்தசரஸ் காங்கிரசில் ஜோஷி முக்கிய பங்காற்றினார். 1977-78 படிண்டாவிற்கு அவர் வந்தபோது பலரும் அவரிடம் நேயத்தை காட்டினர். கம்யூனிஸ்ட் கட்சியை

அதன் குழந்தை நிலையிலிருந்து தேசிய பருவத்திற்கு உயர்த்தியவர் ஜோஷி என்ற பெருமிதத்தை அவரது நூற்றாண்டின்போது பலரும் தெரிவித்தனர்,.

Ref:

1.P.C. Joshi : A Political Journey , by Bipan Chandra

2.P.C. Joshi: A Biography Gargi Chakravartty

3. Joshi Centenary Articles in PD, Mainstream

# தோழர் பி டி ரணதிவே (B T Ranadive)



இந்தியாவில் முதலாளித்துவம் தூக்கி எறியப்பட்டு சோசலிசம் மலரவேண்டும் என்று மார்க்சியத்தின் மீது நம்பிக்கை வைத்து வாழ்நாள் முழுதும் போராடியவர்களில் தலையானவர் தோழர் பி டி ரணதிவே.. மும்பாய் தாதர் பகுதியில் டிசம்பர் 19, 1904ல் பிறந்தவர் . அவரின் முழுப்பெயர் பாலசந்திர திரிம்பக ரணதிவே. தந்தை திரிம்பக் மொரேஷ்வர் ரணதிவே வருமானத்துறையில் பணிபுரிந்தார். தாயார் யசோதா. புகழ்பெற்ற அகல்யா ரங்கனேகர் உட்பட ரணதிவேவிற்கு 4 சகோதரிகள், மூன்று சகோதரர்கள். தந்தையார் கோகலே ஈர்ப்புடையவர். சமய நல்லிணக்க சபாவில் இருந்தவர்.

ரணதிவேவிற்கு பள்ளி நாட்களில் புத்தகம் படிக்கும் பழக்கம் ஏற்பட்டது. திலகர், காந்தி குறித்த பேச்சுகள் மாணவர் மத்தியில் இருந்தன. 1921ல் புகழ்வாய்ந்த புனேவின் பெர்குசான் கல்லூரியில் சேருகிறார். அடுத்த ஆண்டு டாங்கே போன்றவர்கள் படித்த வில்சன் கல்லூரி பம்பாயில் சேர்கிறார். வரலாறு, பொருளாதாரத்தில் பட்டம் பெற்று முதுகலையும் சேர்கிறார். காந்தி மீது ஈர்ப்பு இருந்தாலும் சௌரி சௌரா நிகழ்வில் காந்தி திடிரென போராட்டத்தை விலக்கிக்கொண்டது குறித்த விமர்சனம் ரணதிவேயிடம் அப்போதே இருந்தது. தனது MAவில் Gold Medalistஆக அவர் வெளிவந்தார். டாக்டர் ஆய்விற்கு “இந்தியாவில் ஜனத்தொகை” என்பதை எடுத்துக்கொண்டார்.

புகழ்வாய்ந்த மார்க்சிய அறிஞர் டாக்டர் அதிகாரி பி டி ஆரின் உறவினர். ஜெர்மனியில் வேதியல் டாக்டர் பட்டம் பெற ஆய்வு மாணவராக அங்கு சென்றவர். ஜெர்மனியில் அவருக்கு மார்க்சியம்- கம்யூனிஸ்ட் கட்சி நூல்கள் கிடைக்கப் பெற்றன. சிலவற்றை அவர் இந்தியாவிற்கும் இரகசியமாக அனுப்பிக் கொண்டிருந்தார். ரணதிவேவிற்கு ரஜினிபாமிதத்தின் லேபர் மன்த்லி கிடைக்கத் துவங்கியது. லெனின் நூல்களை வாங்க முடிந்தது. இந்தியாவில் கம்யூனிஸ்ட்கட்சியுடன் தொடர்பு ஏற்பட்டு 1928ல் அவர் அதில் உறுப்பினராகிறார். கிராந்தி என்கிற மராத்தி வாரப்பத்திரிக்கைக்கும் ஆசிரியராகிறார். 1929 கிரினிகாம்கார் சங்க வேலைநிறுத்தம், ரயில்வே வேலைநிறுத்தங்களில் முன்

நிற்கிறார். ரயில்வே சங்கத் தலைவராகிறார். வேலைநிறுத்தங்கள் காரணமாக வழக்கிற்கு உள்ளாகி ஒராண்டு சிறையில் வாடுகிறார்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட ராயல் கமிஷன் என்கிற விட்லி கமிஷனை பகிஷ்கரிக்கவேண்டும் என்ற நிலையை நேரு எடுத்தார். பிடிஆர் போன்றவர்கள் நேரு நிலைப்பாட்டை ஆதரிக்கிறார்கள். என் எம் ஜோஷி, திவான் சமன்லால் போன்றவர்களை (AITUCஆரம்பகால தலைவர்கள்) அதன் உறுப்பினர்கள் என அரசாங்கம் அறிவிக்கிறது. இதனால் கருத்து வேறுபாடுகள் உருவாகி அவர்கள் AITUCலிருந்து வெளியேறுகின்றனர்.

1931ல் ஒர்க்கர்ஸ் வீக்லி என்ற ஆங்கில பத்திரிக்கைக்கு ரணதிவே ஆசிரியர் பொறுப்பேற்கிறார். அந்த ஆண்டில் ஏ ஐ டி யு சி யில் சுபாஷ்சந்திர போசுடன் கருத்து வேறுபாடு எழுந்து கம்யூனிஸ்ட்கள் வெளியேறுகின்றனர். 1934வரை தனியாக ரெட் யூனியன் நடத்துகின்றனர். பம்பாயில் நடந்த பொதுக்கூட்டத்தில் காந்தி பேசிய மேடையிலேயே ஏறி பகத்சிங்கை காப்பாற்றுவது எனும் பிரச்சனையில் காந்தி துரோகம் செய்துவிட்டார் என விமர்சித்து பி டி ஆர் பேசுகிறார்.

கம்யூனிஸ்ட் கட்சியைவிட போல்ஷ்விக் கட்சிதான் பொருத்தமானது, அதனை அமைக்கவேண்டும் என கருதி பிடிஆர் போல்ஸ்விக் கட்சி அமைக்கிறார். சீனா, பிரிட்டன், ஜெர்மனி கட்சித்தலைவர்கள் இந்தியாவில் கம்யூனிஸ்ட்கள் ஒன்றுபட்டு செயலாற்ற வேண்டுகோள் விடுத்தனர் . 1934ல் கம்யூனிஸ்ட் கட்சி தனது அகில இந்திய மையம் ஒன்றை துவங்கி செயல்பட ஆரம்பித்தது. ரணதிவே அதில் மத்திய கமிட்டி உறுப்பினராகிறார்.

கிரினிகாம்கார் சங்க நடவடிக்கைகளால் டாகடர் அதிகாரியும் ரணதிவேவும் கைதாகி 2 ஆண்டுகள் சிறை வைக்கப்படுகின்றனர். மார்க்சியத்தை ஆழமாக கற்பதற்கு அவரது சிறைவாசம் உதவியது. சிறையிலிருந்து வெளிவந்த பின்னரும் போராட்டங்களில் முன்நின்றார். 1938ல் டெக்ஸ்டைல் தொழிலாளர் வேலைநிறுத்தம் அம்பேத்கார் ஆதரவுடன் நடந்தது. அதில் ரணதிவே முக்கிய பங்காற்றினர். தொழிலாளர் மத்தியில் பணியாற்றிவந்த விமல் சர்தேசாயை ரணதிவே மகிழ்வுடன் திருமணம் செய்துகொள்கிறார்.

1939 செப்டம்பர் இரண்டாவது உலக யுத்தக் காலத்தில் கட்சி பத்திரிக்கைகள் தடை செய்யப்படுகின்றன, பி டி ஆர் உட்பட தலைவர்கள் கைது செய்யப்படுகின்றனர். ராஜஸ்தான் தியோலி சிறையில் அவர்கள் அடைக்கப்படுகின்றனர். 1942 வெள்ளையனே வெளியேறு போரட்டத்தை காந்தி அறிவிக்கின்றார். யுத்தத்தில் சோவியத் பங்கேற்ற சூழலில் மக்கள் யுத்தம், ஹிட்லர் தலைமையிலான பாசிசம்

வீழ்த்தப்படவேண்டும் என்ற பார்வையில் கம்யூனிஸ்ட்கள் இந்தியாவில் செயல்பட்டனர். காந்தி அறைகூவலில் கட்சி பங்கேற்கவில்லை. இதனை சோசலிஸ்ட்கள் முழுமையாக பயன்படுத்திக்கொண்டு போராட்ட நாயகர்களாக தங்களை உயர்த்திக் கொண்டனர். ரணதிவே உட்பட கம்யூனிஸ்ட் இளம் தலைவர்கள் தங்கள் மீது வீசப்பட்ட அவதூறுகளுக்கு பதிலை தந்து கொண்டிருந்தனர்.

கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் காங்கிரஸ் 1943 மே மாதம் பம்பாயில் நடந்தது. 1935 முதலே பி சி ஜோசி பொதுச்செயலர் பொறுப்பில் பணியாற்றிவந்தார். Working Class and National Defence- Report on Production என்கிற ஆவணத்தை தோழர் ரணதிவே எழுதி இக்காங்கிரசில் முன்வைத்தார், பின்னர் PPH வெளியீடாக அது வந்தது. வங்க பஞ்சம், தெபகா, வார்லி, புன்னப்புரா, ரின் போராட்டங்களில் பி டி ஆர் தனது பங்களிப்பை நல்கி கொண்டிருந்தார். ஆகஸ்ட் 1947 இந்திய விடுதலை அறிவிப்பிற்கு பின்னர் கட்சி சீர்திருத்த பாதையில் போவதாக ரணதிவே கருதினார். எதிர்த்து போராட துவங்கினார். ஜோஷி மீது கடும் விமர்சனங்கள் வைக்கப்பட்டன.

கல்கத்தாவில் 1948 இரண்டாவது கட்சி காங்கிரசில் ரணதிவே பொதுச்செயலராகிறார். இக்காலத்தில் யதார்த்தத்திற்கு புறம்பாக இடது அதிதீவிர தவறுகளை அவர் செய்ததாக கடுமையான விமர்சனத்திற்கு உள்ளானார். ரணதிவே மாவோவைக்கூட பிற்போக்குவாதி என விமர்சித்த காலமது. ரணதிவேயின் ருஷ்ய பாதை, ராஜேஸ்வரராவின் சீனப்பாதை என்ற விவாதங்கள் கட்சிக்குள் எழுகிறது. ரணதிவே பொதுச்செயலர் பொறுப்பிலிருந்து நீக்கப்படுகிறார். தவறை ஏற்றுக்கொண்டு,என் முகத்திரையை நானே அகற்றிக் கொள்கிறேன் என அவர் சுய விமர்சன அறிக்கை வைத்துக்கொண்டார். பின்னாட்களில் CPIML கட்சியின் லிபெரேஷன் பத்திரிக்கை இதனை வெளியிட்டது.

தோழர் ரணதிவே சாதரண நிலை உறுப்பினராக கட்சியில் பொறுமையுடன் தொடர்ந்தார். சீனப்பாதை என்கிற ஆவணத்தை சீனாவிற்கு மொகித்சென் எடுத்து செல்கிறார். சீனத்தலைமை அதை அங்கீகரித்து உதவும் என ராஜேஸ்வரராவ் உள்ளிட்ட ஆந்திர தீசீஸ் தோழர்கள் அக்காலத்தில் நம்பியிருக்கலாம். டாங்கே காட்டே அஜாய் ஆகிய மூவரும் இணைந்து 3 பி (Three P) ஆவணம் தருகிறார்கள். பிரச்சனைகளை தீர்ப்பதற்காக டாங்கே, அஜாய், ராஜேஸ்வர், பசவபுன்னையா ஆகிய நால்வர் டீம் மாஸ்கோ சென்று ஸ்டாலினை சந்தித்து வழிகாட்டுதல் பெறுகின்றனர். இச்சந்திப்பு பிப்ரவரி 1951ல் நடந்ததாக ருஷ்ய ஆவணங்களிலிருந்து தெரிய வருகிறது. மெயின்ஸ்டீரிம் நிகில் சக்கரவர்த்தி இத்தோழர்கள் கப்பலில்

செல்வதற்கான ஏற்பாடுகளை செய்ததாக மொகித்சென் தனது பதிவில் தெரிவிக்கிறார். பின்னர் அஜாய் பொதுச்செயலராகிறார்.

பொருளாதார நெருக்கடி குறித்தும், 5 ஆண்டு திட்டங்கள் குறித்தும் ரணதிவே எழுதிய கட்டுரைகள் பாராட்டை பெற்றன. அவர் மகராஷ்ட்ரா கமிட்டிக்கு செயலராக பொறுப்பேற்கிறார். நான்காவது கட்சி காங்கிரசில் அவர் மத்திய கமிட்டிக்கு தேர்வு பெற்று தேசிய பொறுப்புகளுக்கு மீண்டும் உயர்த்தப்படுகிறார். நியுஏஜ் ஆசிரிய பொறுப்பேற்று டெல்லியில் பணிபுரியத் துவங்குகிறார். 1958 அமிர்தசரஸ் காங்கிரஸ், 1961 விஜயவாடா காங்கிரசில் கட்சியில் நடந்த பெரும் விவாதங்களில் தோழர் ரணதிவே முக்கிய பங்காற்றுபவராக விளங்கினார். விஜயவாடாவில் மாற்று ஆவணத்தை முன்வைத்தார். டாங்கே தலைமையிலான திருத்தல்வாதிகளை முறியடிப்போம்- ஆனால் கட்சிக்குள் இருந்து போராடலாம் என்ற கருத்தை டம்டம் சிறையிலிருந்து ஜோதிபாசு அக்டோபர் 1963ல் கடிதம் மூலம் தெரிவிக்கிறார். பின்னர் வெளியிடப்பட்ட கட்சி ஆவணங்களில் பாசுவின் கடிதத்தை பார்க்க முடிந்ததாக பிரண்ட்லைன் கட்டுரையில் ஏ ஜி நூரணி தெரிவித்தார்.

இந்திய சீன யுத்தத்தின்போது கருத்து வேறுபாடுகள் தீவிரமாயின. தேசியகவுன்சில் கூட்டத்திலிருந்து பி டி ஆர் உள்ளிட்ட 32 தலைவர்கள் வெளியேறி தெனாலியில் கூடி CPIM கட்சியை உருவாக்கினர். தோழர்கள் நம்பூதிரி, ராமமூர்த்தி ,கோபாலன், ரணதிவே, சுர்ஜித், சுந்தரையா, பசவபுன்னையா, பிரோமோத் தாஸ், ஜோதிபாசு ஆகிய 9 மூத்த தலைவர்கள் CPM மார்க்சிஸ்ட் கட்சியின் பொலிட்ப்யுரோவிற்கு தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

AITUCல் தொடர்ந்து ஏற்பட்ட பிரச்சனைகளால் 32 ஜெனரல் கவுன்சில் உறுப்பினர்கள் வெளியேறி 1970ல் கோவாவில்கூடி CITU தொழிற்சங்கம் அமைத்தனர். கல்கத்தாவில் கூடிய மாநாட்டில் தோழர் ரணதிவே தலைவராகவும், தோழர் ராமமூர்த்தி செயலராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். CPIM, CITU இரண்டு அமைப்புகளிலும் மிக முக்கிய பங்களிப்பாளராக தலைமை பாத்திர தகுதியுடன் தோழர் பி டி ஆர் செயல்பட துவங்கினார்.

இந்திரா அம்மையார் ஆட்சி, எமர்ஜென்சி, ஜே பி போராட்டங்கள், ஜனதா அனுபவங்களுக்கு பின்னர் இரு கம்யூனிஸ்ட் கட்சிகளும் தங்கள் தங்கள் கட்சி காங்கிரசில் கூடி 1978ன் துவக்கத்தில் இடதுசாரி ஜனநாயக மாற்று என்ற ஒத்த அரசியல் நிலைப்பாட்டிற்கு வந்தனர். இக்காலங்களில் CPI- CPM மத்தியில் தங்கள் பத்திரிக்கைகளில் பெரும் விவாதங்களை நடத்திக்கொண்டனர். தயவற்ற விமர்சனங்கள் ஒருவர் கொள்கை நிலைப்பாடுகளை மற்றவர் தாக்கி கடுமையாக

நடைபெற்ற ஆண்டுகள் அவை. ருஷ்யா- சீன அனுபவங்கள், நக்சலைட்டுகள் பிரிந்து போதல் போன்ற அனுபவங்களும் கிடைக்கப்பெற்றன. கேரளா, மேற்குவங்க ஆட்சி அனுபவங்கள், மத்திய ஆட்சியில் பங்கு பெறுவது குறித்த விவாதங்கள்,CPI பங்கேற்ற அனுபவங்கள் என பல நடந்தேறின.

தோழர் பி டி ஆர் பீப்பிள்ஸ் டெமாக்ரசி, சோசியல் சயின்டிஸ்ட், மார்க்சிஸ்ட் பத்திரிக்கைகளில் இளைஞர்களுக்கும் புதியவர்களுக்கும் கற்பிக்கும் வண்ணம் ஆழமான கட்டுரைகளை எழுதிவந்தார். CITU மாத இதழில் அவர் எழுதிய பல புகழ்வாய்ந்த கட்டுரைகள் மூன்று வால்யூம்களாக தொகுக்கப்பட்டு கொணரப்பட்டன. வேலையின்மை, விலைஉயர்வு, பொதுத்துறைகள், இந்திய பொருளாதாரம், அரசின் அவ்வப்போதைய கொள்கைகள், தொழிற்சங்க ஒற்றுமை, மத்திய சங்கங்கள் இணைந்து கான்பெடெரேஷன் அமைப்பது, தொழிலாளரும் அரசியலும். மத நல்லிணக்கம் என பல்வேறு அமசங்களில் அவர் எழுதியவை தொகுக்கப்பட்டுள்ளன. தொழிற்சங்கத் தலைவர்கள் படித்து தெரிந்து கொள்ளவேண்டிய சிறந்த தொகுப்பு அவை. P&T தோழர்களுக்கு சில கேள்விகள் எனக்கூட ஓரிரு கட்டுரைகள் இருந்தன. உழைக்கும் பெண்களுக்கு தனி மாநாடுகள் என்பதில் அவர் வழிகாட்டியாக இருந்தார். மத்திய மாநில பொதுத்துறை போராட்டங்களுக்கு வழிகாட்டினார். தொழிற்சங்க இயக்கத்தில் தொழிலாளர்கள் Guest போல் நடந்து கொள்ளக்கூடாது- நடத்தப்படவும் கூடாது என்பதை அவர் தொடர்ந்து வலியுறுத்தியவர்.

Euro communism, இந்தியாவில் நிலம் சாதி பிரச்சனைகள், சோவியத் புரட்சி, மார்க்ஸும் தொழிற்சங்கமும், விடுதலை போராட்டத்தில் கம்யூனிஸ்ட்கள் போன்ற அவரது ஆக்கங்கள் இடதுசாரிகள் மத்தியில் அதிகமாக வாசிக்கப்பட்டன. மார்க்ஸ் - மார்க்சியம் குறித்த எளிய ஆழமான அவரது கட்டுரைகளும் தொகுக்கப்பட்டு புத்தகமாக வந்தது. அவர் 1958ல் டாங்கே குறித்தும், சர்வோதயாவும் கம்யூனிசமும் பற்றி புத்தகங்கள் எழுதியதாக அறிகிறோம். வறட்டுத்தனமாக இடது நிலையிலிருந்து பேசியவர் என்ற விமர்சனம் ரணதிவே மீது இப்போதும் இருந்து வருகிறது. நவீன வரலாற்று ஆய்வாளர் ராமசந்திர குஹா போன்றவர்கள் பொருத்தமான கட்டத்திற்கு பொருத்தமான ஆய்வுகளை அற்புதமாக தந்தவர் ரணதிவே என கட்சிக்காரர்கள் எழுதுவதை கடுமையாக விமர்சித்தார். பி டி ஆர் யாந்திரிகமாகவே விஷயங்களை எழுதியதாகவும் காரில்லோ குறித்துக்கூட அவர் எழுதியதை ஏற்கமுடியாது எனவும் எழுதினார். இதற்கு தோழர் பிரகாஷ் காரத் தகுந்த பதிலையும் தந்திருந்தார்.

நோய்வாய்பட்ட நிலையில் தோழர் ரணதிவே பம்பாயில் ஏப்ரல் 6 1990ல் மறைந்தார். தனது வாழ்நாளில் இந்தியாவில் சோசலிச புரட்சி சாத்தியமில்லாமல்

போனதே என்ற வருத்தத்தை அவர் பதிவு செய்பவராகவே இருந்தார். இந்தியாவில் மார்க்சிய இயக்க முன்னோடி என்கிற தன்மையில் ரணதிவே வரலாறாக நிற்கிறார்.

# தோழர் டாங்கே (DANGE)



S. A. Dange

காந்தியும் லெனினும் என்ற புத்தகத்தை அதற்கு முன்னர் எவரும் சிந்தித்திடாத முறையில் மாணவராக இருந்த டாங்கே 1921 மார்ச்சில் எழுதி ஏப்ரலில் வெளியிடுகிறார். வெளி உலகிற்கு இதன் மூலம் டாங்கே தெரிய வருகிறார். மார்க்ஸ்- லெனின் குறித்து ஓரளவிற்கு அறியத் துவங்கிய புரட்சிகர எண்ணம் கொண்ட இளைஞன் ஒருவன் எழுதிய முதல் ஆக்கம் என பின்னாட்களில் டாக்டர் அதிகாரி இதை பதிவு செய்கிறார்.

திலகரின் மறைவிற்கு பின்னர் காங்கிரசில் காந்தியின் பாத்திரம் முன்னுக்கு வருகிறது. கொண்டாடப்படும் தலைவராக தனது செயலால் அவர் பரிணமிக்க துவங்குகிறார். திலகரிடம் நெருக்கமாக பழகி வந்த டாங்கே போன்றவர்களுக்கு திலகரா காந்தியா என புதிய சிக்கல் எழுகிறது.. டாங்கேவிற்கு சோவியத், லெனின் குறித்த செய்திகள் கிடைக்கப் பெற்றமையால் காந்தியா லெனினா கருத்தாக்கம் குறித்து சிந்தித்து அப்புத்தகத்தை அவர் வெளிக்கொணர்கிறார்.

டாங்கேவின் தந்தை அம்ரித் ரகுநாத்டாங்கே. .டாங்கேவின் பெயர் ஸ்ரீபாட் அம்ரித் டாங்கே. அக்டோபர் 10, 1899ல் பிறக்கிறார். 1991ல் அவர் மறைகிறார். 70 ஆண்டுகளுக்கான பொதுவாழ்வை அந்த அந்த காலங்களில் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களின் அடிப்படையில் அடைந்ததை இழக்கிறோமே என்ற கவலை ஏதுமின்றி தான் நினத்தவைகளுக்காக ஏற்கப்பட்டபோதும், ஏற்கப்படாத நிலையிலும் கருத்துப் போராட்டம் நடத்தி நிறைவாக வாழ்ந்து மறைந்தவர் டாங்கே.

பஞ்சபூமியாக இருந்த அகமதுநகர் அவரது தாயின் மாவட்டம். காய்கறி வியாபாரம் செய்துவந்த தாயின் சகோதரி வளர்ப்பில் நாசிக்கில் பள்ளிப்படிப்பை காண்கிறார். அங்கு ரயில்வே தொழிலாளர் சூழல் மனதில் படிகிறது. தாயின்

சகோதரியான சித்தியுடன் பிரிட்டிஷ் ராணுவ பகுதிகளுக்கு செல்ல வாய்ப்பு நேரும். அவர்களின் மிடுக்கு ஒழுங்கை கண்ணுறும் வாய்ப்பு கிடைக்கிறது. திலகர், சாவர்க்கர், துப்பாக்கி என தகவல்களால் நிறையும் நகராக நாசிக் இருந்தது. தில்கரின் கேசரி பத்திரிக்கை செய்திகள் மாணவர்களையும் எட்டின. பின்னர் பம்பாய் பெயர்ந்து டாங்கே படிப்பை தொடர்கிறார். 1917 என்கிற வரலாற்றின் திருப்புமுனை ஆண்டில் வில்சன் கல்லூரியில் நுழைகிறார். ஆர் எஸ் நிம்ப்கர் தோழனாகிறார். The young collegiate பத்ரிக்கையை அவர்கள் துவங்குகிறார்கள். கட்டாய பைபிள் எதிர்த்து போராடுகிறார்கள். ஆங்கில இலக்கிய கழகம் போலவே மராத்தி இலக்கிய கழகம் என்பதற்காக கல்லூரி புறக்கணிப்பு போராட்டம் நடக்கிறது. கல்லூரி நிர்வாகம் டாங்கே உள்ளிட்டவர்களை நீக்குகிறது.

இந்தியாவிற்கு சுய ஆட்சி தராத நிலையில் போருக்கு ஆட்களை எடுக்காதே என திலகர் போராடி வந்தார். ரயில்வே, அஞ்சல் ஊழியர் போராட்டங்களுக்கு ஆதரவு நல்கி எழுதி வந்தார். அக்டோபர் புரட்சியை வரவேற்றும் எழுதினார். திலகர் தனது மாண்டலே சிறைவாசத்தின்போது எழுதிய கீதாரகஸ்யம் அப்போது பிரபலமாக இருந்தது. இளைஞர்களை கவ்வி பிடித்தது. பகத்சிங் போன்றவர்கள் கூட தனது குடும்பத்தார்க்கு எழுதி எடுத்துவர சொன்ன புத்தகத்தில் கீதா ரகஸ்யமும் ஒன்று. அப்புத்தகம் தேசிய எழுச்சிக்கு அன்று துணை நிற்பதாக கருதப்பட்ட ஒன்று. சன்யாசம் என்கிற துறவை விமர்சித்து கர்மயோகம் அதில் வலியுறுத்தப்பட்டிருந்தது. டாங்கே போன்ற மாணவர்கள் திலகர்பால் ஈர்க்கப்படுவது புரிந்து கொள்ளக்கூடிய ஒன்றே. திலகரின் மறைவிற்கு பின்னர் நடந்த நாக்பூர் 1920 டிசம்பர் காங்கிரஸ் மாநாட்டில் டாங்கே சக மாணவர்களுடன் கலந்துகொள்கிறார்.

லாலாஜியை வரவேற்க திலகர் தலைமையில் பிப்ரவரி 1920ல் பொதுக்கூட்டம் ஒன்றை டாங்கே குழாம் ஏற்பாடு செய்கிறது. டாங்கே வரவேற்புரை ஆற்றி பலரின் கவனத்தை பெறுகிறார். திலகர் டாங்கேவிடம் பம்பாய் தொழிலாளர் மத்தியில் பணிபுரிய அறிவுறுத்தினார். 1920 அக்டோபரில் AITUC உதயமாகிறது. திலகர் மறைவால் லாலாஜி தலைமை ஏற்கிறார். டாங்கே போன்றவர்கள் இதற்கு துணை நின்கின்றனர். காந்தியின் சுயராஜ்ய கருத்துக்கள் போதாது என்ற எண்ணம் டாங்கே உள்ளிட்டவர்களுக்கு உருவாகிறது. விதல்பாய் படேல் காந்தியின் திட்டங்களை புகழ்ந்து பேசிய போது படேல் கருத்தை ஏற்கமுடியாது என மறுத்து பேசிய டாங்கே அங்கிருந்து வெளியேற்றப்பட்டார். ஆனால் திலகர் பின்னர் அவரை விதல்பாய் படேலுக்கு காரியதரிசி ( செயலர்) ஆக்கினார்.

பம்பாய் பகுதி காங்கிரசில் தொழிலாளர் பிரிவில் டாங்கே பணியாற்ற துவங்கினார். கல்லூரியிலிருந்து வெளியேற்றப்பட்ட டாங்கே தேசிய தலைவர்கள்

துவக்கிய தேசிய கல்லூரியில் மாணவர்களுக்கு பாடம் எடுக்கும் விரிவுரையாளரானார். தனிப்பட்ட முறையில் பாடம் எடுத்து ஜீவனத்திற்கு ஏற்பாடு செய்துகொண்டார். திலகரின் நண்பர் லோட்வாலா என்பாரின் தொடர்பால் மார்க்சிய நூல்கள், ஆவணங்கள் அவருக்கு கிடைக்கப்பெற்றன. இந்துபிரகாஷ் எனும் மராத்தி இதழில் பணியில் சேர்ந்தார். பின்னர் ஆங்கிலத்தில் மார்க்சிய எழுத்திற்காக பத்ரிக்கை தேவை எனக் கருதி சோசலிஸ்ட் வார இதழை ஆகஸ்ட் 5, 1922ல் கொணர்ந்தார். அவைகள் சில தொகுக்கப்பட்டு டாங்கே நூல்வரிசையாக அவரது புதல்வியால் கொணரப்பட்டுள்ளது. சோசலிஸ்ட் 1922 செப்டம்பர் இதழில் இந்திய சோசலிச உழைப்பாளர் கட்சி என பேசினார். அகிலம், சோசலிச கருத்துக்கள் தாங்கிய இதழாக அது வந்து கொண்டிருந்தது. அவர் சிறையிலிருந்தபோதும் ஜோக்லேகர், ஜோஷி, பர்வதே போன்றவர்கள் தொடர்ந்து சில காலம் கொணர்ந்தனர். பிப்ரவரி 20 1924 இதழில் பம்பாயில் உழைப்பு சுரண்டலுக்கு ஆளாகி வேலை பார்த்துவந்த 227 டெலிகாம் பெண்கள் தனியார் கம்பெனியால் நீக்கப்பட்டதை முன்வைத்து முதலாளித்துவத்தின் கோர சுரண்டல் எவ்வாறு உழைப்பவர் வாழ்வை சூறையாடுகிறது என்ற கட்டுரையை சோசலிஸ்ட் வெளியிட்டிருந்தது.

கான்பூர் சதிவழக்கில் டாங்கே, முசாபர், உஸ்மானி ஆகியோர் சிறைபிடிக்கப்பட்டனர். டாங்கேவிற்கு 4 ஆண்டுகள் தண்டனை என்றனர். தனது வாதமாக டாங்கே வைத்த முழுவிவரம் சோசலிஸ்ட் 1924 ஜூலை இதழில் வெளியிடப்பட்டது. அதில் எம் என் ராய் வேறுபாடு உள்ளிட்டவை பதிவாகியுள்ளன. தான் எந்த சதியிலும் ஈடுபடவில்லை- சோசலிஸ்ட் பத்திரிகை ஆசிரியன் என்ற வகையில் அரசியல் கருத்துக்களை வெளியிட்டு வருபவன் என தன் தற்காப்பை டாங்கே முன்வைத்தார்.

மீரத் சதி வழக்கின்போது நீதிமன்றத்தில் தனது வாதத்தை டாங்கே அக் 26 1931 அன்று வைத்தார். அதன் முழுவடிவமும் அவரது தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்புகள் இரண்டில் 500 பக்க அளவில் அவரது மகள் தோழர் ரோசா தேஷ்பாண்டேவால் வெளியிடப்பட்டது.. தனக்கு சாதி ஏதுமில்லை 31 வயதாகிறது என நீதிபதி முன் நீண்ட மார்க்சிய சித்தாந்த உரையை தனது தற்காப்பு உரையாக பல மணி நேரம் முன்வைத்தார் டாங்கே. தனது போராட்ட வாழ்க்கையில் 13 ஆண்டுகளுக்கு மேல் சிறைக்கொடுமைகளை அனுபவித்தவர் அவர். ஹெல் பவுண்ட் (Hell Bound) என்ற சிறைக்கொடுமைகள் சூழல் குறித்து புத்தகம் ஒன்றையும் அவர் எழுதினார். 1929-35 ஆண்டுகளில் மீரத் வழக்கால் அவர் சிறையில் வாடுகிறார். விடுதலைக்கு பின்னர் ஆந்திரா சுற்றுப்பயணம் செய்து காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் சிலரை கம்யூனிஸ்ட் கட்சிக்கு கொணர்கிறார்.

1920 ஏஅய் டி யு சி, 1925 இந்திய கம்யூனிஸ்ட் கட்சி துவக்கம், கிரினி காம்கார் சங்கம் போன்றவற்றில் முக்கிய பங்களிப்பை டாங்கே செய்தார். கட்சியின் மத்திய கமிட்டிக்கு 1943ல் அவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அக்டோபர் 1944ல் பிரிட்டிஷ் கட்சி மாநாட்டில் பங்கேற்கிறார். 1946ல் அவர் பம்பாய் சட்டமன்ற உறுப்பினராகிறார். பஞ்சாலைத் தொழிலாளர் வேலைநிறுத்தம் காரணமாக அவர் மீண்டும் கைது செய்யப்பட்டு தியோலி சிறையில் வைக்கபடுகிறார். அங்கு அரசியல் கைதிகளை திரட்டி அவர்கள் நலனுக்காக போராடுகிறார். 1945 உலக தொழிற்சங்க சம்மேளனத்தின் துவக்க தலைவர்களுல் ஒருவராக அதனை வளர்த்தெடுப்பதில் முக்கிய பங்காற்றினார். AITUCல் 30 ஆண்டுகளுக்கு மேலாக அவர் முக்கிய பொறுப்புகளை வகித்து வழிகாட்டி வந்தார். அதன் பொதுச்செயலராக அவர் எழுதிய அறிக்கைகள் தொழிற்சங்க கல்வியாகவே அமைந்திருந்தன. அதன் தலைவராக இருந்தும் வழிநடத்தினார்.

விடுதலை தினத்தன்று அவர் மாஸ்கோவில் இருந்ததாக சில தகவல்கள் கிடைக்கின்றன. ஆகஸ்ட் 16, 1947ல் அவர் ஜடானோவ், சுஸ்லோவுடன் முக்கிய விவாதங்களில் ஈடுபட்டதாகவும் செய்திகள் வெளியாகியுள்ளன. யுத்த காலத்தில் காங்கிரசின் பிரிட்டிஷ் எதிர்ப்பு அவ்வியக்கததை பலப்படுத்தியதாகவும், கம்யூனிஸ்ட்கள் நிலைப்பாடு தங்களை பலவீனப்படுத்தியதையும் அவர் மாஸ்கோ சந்திப்பில் சுயவிமர்சனம் செய்து கொண்டதாகவும் தெரிகிறது. நேரு, ஜின்னா குறித்த சோவியத் தலைவர்கள் கேள்விக்கு இருவரும் பூர்ஷ்வாக்கள், முதலீடுகள் செய்யும் அளவிற்கு வசதி படைத்தவர்கள் என டாங்கே கூறியதாக தெரிகிறது.

கட்சியில் பி சி ஜோஷி நீக்கப்பட்டு ரணதிவே பொதுச்செயலராகிறார். 1948ல் அவர் எடுத்த அதிதீவிர இடதுசாரி கொள்கைகளால் பெரும் சரிவு ஏற்படுகிறது. ராஜேஸ்வரராவ் போன்றவர்கள் சீனப்பாதை என்பது முன் வருகிறது. பின்னர் டாங்கே, அஜாய், காட்டே மூவரின் புகழ்வாய்ந்த 3பி ஆவணம் முன்வைக்கப்படுகிரது. கட்சிக்குள் நிலவும் பல்வேறு கொள்கை மோதல்களை முறைப்படுத்த மாஸ்கோவிற்கு டாங்கே அஜாய், ராஜேஸ்வரராவ், பசவபுன்னயா குழு ஸ்டாலின் சந்திப்பிற்கு செல்கிறது. அச்சந்திப்பு குறித்த முழு மினிட்ஸ் ரெவல்யூஷனரி டெமாக்ரசி போன்ற பத்ரிக்கைகளில் ருஷ்ய மொழியிலிருந்து ஆங்கிலப்படுத்தப்பட்டு வெளியிடப்பட்டது. பிரண்ட்லைன் பிற்காலத்தில் அச்சந்திப்பு குறித்த பசவபுன்னையா பேட்டியை வெளியிட்டது. அதில் ஸ்டாலின் எவ்வாறு நடந்துகொண்டார். எவ்வளவு பேசினார். என்ன அறிவுறுத்தினார் போன்றவைகள் சொல்லப்பட்டிருந்தன.

டாங்கே 1957, 1967 ஆண்டுகளில் நாடாளுமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். நேரு, இந்திரா உட்பட அவர் பேசுவதை உன்னிப்பாக கவனித்தார்கள். சீனா யுத்தத்தின்போதும், சீன கட்சி- சோவியத் கட்சி சர்வதேச கம்யூனிஸ்ட் கட்சிகள்

மத்தியில் பிளவு வந்தபோதும் டாங்கே அவ்விவாதங்களில் முக்கிய பங்காற்றினார். பீகிங் அவரை ரிவிஷனிஸ்ட் என கடுமையாக தாக்கியது. இந்தியாவிலும் கட்சிக்குள் பெரும் சர்ச்சைகள் மூண்டு கட்சி உடைவிற்கு உள்ளானது. உடைவிற்கு முன் அஜாய் இறக்கும் தருணத்தில் நம்பூதிரி பொதுச்செயலர், டாங்கே சேர்மன் என்ற ஏற்பாடும் கட்சி உடைவை தடுக்க உதவவில்லை. 1964 ஏப்ரலில் CPM கட்சி உருவாக்கப்பட்டது. நேரு- இந்திரா ஆதரவாளர், தேசியவாதியாக டாங்கே சுருங்கிவிட்டார், எதிர்புரட்சிவாதி என கடுமையான விமர்சனங்களுக்கு அவர் உள்ளானார். கட்சி எமெர்ஜென்சியை ஆதரித்ததால் விமர்சனத்திற்கு உள்ளானது. 1977 படிண்டாவில் கூடி கட்சி கடுமையாக சுயவிமர்சனம் செய்துகொண்டது. டாங்கே முதல்முறையாக தான் மைனாரிட்டியாக உணரவேண்டிய நிலை ஏற்பட்டது. டாங்கேலைன் என ஒன்று இன்றளவிலும் அவ்வப்போது இடதுசாரி வட்டங்களில் மெயின்ஸ்டீரிம் பத்ரிக்கைகளில் பேசப்படுகிற கோட்பாடாக இருந்து வருகிறது.

CPI தனது அனுபவத்தில் பதிந்தாவிலும் ,1978 ல் CPM ஜனதா அனுபவத்தின் அடிப்படையில் ஜலந்தரிலும் இடதுசாரி ஜனநாயக மாற்று என்ற ஒத்த நிலைப்பாட்டுக்கு வந்தன. இடதுசாரி ஒற்றுமை என்ற பாதையில் பயணிக்க துவங்கின. கட்சி ஒற்றுமை என்பது அவ்வப்போது சிபி அய்யால் பேசப்பட்டாலும் சிபிஎம் திட்டம் வேறுபாடுகள் என்ற கருத்தை அழுத்தமாக சொல்லி வருகிறது.

மத்தியதர தொழிற்சங்க இயக்கங்களில் 1950-70களில் டாங்கே நிகரற்ற தலைவராக வழிகாட்டினார். வேலைநிறுத்தங்கள் துவங்குவது- தீர்வுடன் காலத்தே முடிப்பது, பேச்சுவார்த்தை எனும் கலையில் பயிற்சி பெறுவது என்பதில் அவரின் பங்கு போற்றத்தக்கதாக இருந்தது. Two Pillar Policy, Hold the Bull by Horn போன்றவை அவரிடமிருந்து பெறப்பட்டவைதான். தொலைத்தொடர்பு, பாதுகாப்பு, வங்கி இயக்கத் தலைவர்கள் பலர் அவரால் ஈர்க்கப்பட்டனர். P&T தொழிற்சங்கமான NFPTE அமைப்பின் உருவாக்கத்தின்போது அப்படிபட்ட அமைப்பை ஏற்பதா என்பதற்கு மிக நல்ல ஆலோசனை தந்த தொழிற்சங்கத் தலைவராக டாங்கே இருந்தார். ஒ பி குப்தா, ஞானையா, ஜெகன், பிரபாத்கர், பர்வானா, இன்சூரன்ஸ் தலைவர் நாச்னே, படீல் போன்றவர்களுக்கு முன்னோடி தலைவராக இருந்தவர் டாங்கே.. தோழர் குப்தாவை தபால் தந்தி இயக்கத்திற்கு அனுப்பியதில் ரணதிவே, டாங்கே பங்கு முக்கியமானது.

டாங்கே இந்திய வரலாற்றில் மிக முக்கிய பங்காற்றிய நாயகர்கள் குறித்து குறிப்பிட தகுந்த கட்டுரைகளை வழங்கியவர். மிக சிறந்த சொற்பொழிவுகளை தந்தவர். சில கட்டுரைகள் Problems of Indian Renaissance என்ற பெயரில் தொகுக்கப்பட்டு வெளியாகின. சிவாஜி, லாலாலஜ்பத், மகாத்மா காந்தி, நேருவிடத்தில் இருந்த காந்தி செல்வாக்கு, மராத்திய இலக்கியங்கள் போன்ற

கட்டுரைகளை தனது அவ்வப்போதைய அரசியல் கட்டுரைகளை தவிர அவர் எழுதினார். அம்பேத்கார் மறைந்த தருணத்தில் மிக நேர்மறையாக புத்தமதம், அம்பேத்கார் பங்களிப்புகள் குறித்து சொற்பொழிவுகள் தந்தார். AITUCன் வரலாற்றை இரத்தின சுருக்கமாக தந்தவர் டாங்கே. அவரது புகழ் வாய்ந்த ஆய்வு நூலான பண்டைய இந்தியாவில். வரலாற்று பொருள்முதல்வாதத்தை மிக யாந்திரிகமாக டாங்கே கையாண்டுள்ளார் என்ற விமர்சனம் இருக்கிறது.

டாங்கேவின் புதல்வி AICP 1980ல் துவங்குகிறார். கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட டாங்கே அதன் பொதுச்செயலராகிறார். பின்னர் மொகித்சென் போன்றவர்கள் UCPI துவங்குகிறார்கள் . Left word, NewThinking Communist போன்ற பத்ரிக்கைகள் டாங்கே, மொகித் கருத்துக்களை தாங்கி வெளிவந்துகொண்டிருந்தன. தமிழ்நாட்டில் ஜீவாமுழக்கம் என்ற பத்ரிக்கையை தோழர் தா.பாண்டியன் கொண்டுவந்தார். டாங்கே மே 22 1991ல் நோய்வாய்பட்ட நிலையில் மரணித்தார். மீரத் சதிவழக்கில் சிறையில் இருந்தபோது தண்டி யாத்திரைக்கு ஆதரவான கருத்துக்கள் காரணமாக டாங்கே கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார். பலமுறை கட்சியில் தான் சென்சூர் பெற்றதாக அவர் பதிவு செய்துள்ளார். அவரின் எழுத்துக்கள் அவரது நூற்றாண்டில் தொகுக்கப்பட்டு அவரது புதல்வியால் வெளியிடப்பட்டன. இந்திய கம்யூனிச இயக்க வரலாற்றிலும் , நாட்டின் விடுதலை வளர்ச்சி நடவடிக்கைகளிலும், தொழிற்சங்க வரலாற்றிலும் தனக்கான இடத்தை டாங்கே பிடித்தேயுள்ளார்.

(ஆதாரம்: விசார் பாரதி பிரக்காஷன் வெளியீடுகள்- டாங்கே படைப்புகள்)

# தோழர் அஜாய்கோஷ்



அஜாய்குமார் கோஷ் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச்செயலராக மிக முக்கிய தருணத்தில் 1951-1962வரை இருந்தவர். அஜாய் என்று அன்புடன் அழைக்கப்பட்ட அவர் பிப்ரவரி 20 1909 வங்கத்தில் மிகிஜம் என்கிற ஊரில் பிறந்தவர். அஜாய் என்பது அங்கு ஓடிய ஆற்றின் பெயர். தந்தை சச்சிந்திரநாத் கோஷ் கான்பூரில் டாக்டராக இருந்தார். அஜாய் கான்பூரில் தனது 14 வயதில் பகத்சிங்கை சந்திக்கிறார்.. அலகாபாத் பல்கலைகழகத்தில் வேதியியலில் பட்டம் பெறுகிறார்.

பகத்சிங்குடன் தனது உறவுகளை கல்லூரியிலிருந்து திரும்ப வந்தவுடன் அஜாய் வலுப்படுத்திக் கொள்கிறார். விவாதங்கள் மூலம் புரட்சிகர இயக்கங்களை அறிந்து கொள்கிறார். பகத்சிங் செயலாற்றிய HSRA என்கிற இந்துஸ்தான் சோசலிச புரட்சிகர கட்சியும் அவரை ஈர்க்கிறது. அதே நேரத்தில் கம்யூனிஸ்ட் கட்சி குறித்து அறியும் ஆர்வமும் அவருக்கு ஏற்படுகிறது. யாரால் எப்போது ஆயுதம் தாங்கிய புரட்சி என்பதில் அவருக்குள்ளே விவாதம் எழுகிறது.

1929 லாகூர் சதி வழக்கில் அஜாய் கைது செய்யப்படுகிறார். 60 நாட்களுக்கு மேல் போராடி ஜதின்தாஸ் உயிர்த்தியாகம் செய்திட்ட அந்த பட்டினிப் போரில் அஜாயும் பங்கேற்றார். சிறை வாழ்க்கையும் புத்தகங்கள் மூலம் கம்யூனிசம் சோவியத் புரட்சி குறித்த அறிவாற்றலும் சிறைவாழ் தோழர்களின் புரட்சிகர எண்ணங்களை வலுப்படுத்தின. இந்துஸ்தான் புரட்சிகர கட்சியில் மத்தியதர வர்க்க இளைஞர்கள் சிலரின் தனிநபர் புரட்சிகரவாத முறைகளையும் அக்கட்சி சிதைந்து போனதையும் சிறையிலிருந்த வெளிவந்த அஜாய்கோஷால் பார்க்க முடிந்தது. விடுதலைக்கான, சோசலிசத்திற்கான போராட்டத்தில் தனிநபர் பயங்கரவாதத்திற்கு மாற்று என்ன என்பதை அவர் யோசிக்க துவங்கினார்.

தோழர் எஸ் ஜி சர்தேசாய் தொடர்பும் அவருடன் தொடர்ந்து மேற்கொண்ட விவாதங்களும், கான்பூர் தொழிலாளிவர்க்க மத்தியில் பணியாற்ற துவங்கியதும் அவரை முழுநேர கம்யூனிஸ்ட் ஆக்கியது. 1933 துவங்கி 1962ல் மறையும்வரை

கட்சியின் பொறுப்புகளில் மிக முக்கிய பொதுச்செயலர் பொறுப்புவரை உயர்ந்து அவர் செயலாற்றினார். புரட்சிகர ஜனநாயகவாதி என்பதிலிருந்து கம்யூனிஸ்ட் என்கிற மாற்றம் அவரிடம் முழுமையாக நடந்தேறியது. துவக்க ஆண்டுகளில் கான்பூர் மற்றும் உத்தரபிரதேசத்தில் மாவட்ட கமிட்டிகளில் செயலாற்றி 1936ல் மத்திய கமிட்டிக்கு அவர் சென்றார்.

1935ல் பி சி ஜோஷி பொதுச்செயலர் பொறுப்பேற்றபோது காட்டே தெற்கு பகுதிக்கும், அஜாய் மேற்கு பகுதி, ஆர்.டி பரத்வாஜ் வடக்கு பகுதிக்கும் பொறுப்பாக்கப்பட்டனர்.. கம்யூனிஸ்ட் என்ற சைக்கிளோஸ்டைல் பத்திரிகையும் கொணரப்பட்டது. டிமிட்ரோவின் அய்க்கிய முன்னணிதந்திரம் உட்பட பல ஆவணங்கள் வெளியானது. கல்கத்தாவிலிருந்து பம்பாய்க்கு தலைமையகம் மாற்றப்பட்டது. தோழர்கள் தங்களிடமிருந்த சில உடைமைகளையும் விற்று அச்சகம் நிறுவினர். நேஷனல் பிரண்ட் வாரபத்திரிக்கை முதல் இதழ் பிப்ரவரி 13, 1938ல் கொணரப்பட்டது. தோழர்கள் ஜோஷி, அஜாய், ரணதிவே, டாங்கே போன்றவர்கள் ஆசிரியர் குழுவில் இருந்தனர். National Front பத்திரிக்கையில் அஜாய் பணியாற்ற துவங்கினார். கட்சியின் மிக முக்கிய வழிகாட்டியாக இருந்த டாக்டர் அதிகாரி பீஜப்பூர் சிறையிலிருந்து தப்பிட ஏற்பாடுகளை அஜாய் செய்தார் . தோழர் எம் என் ராய் எதிர்த்த கட்சி போராட்டத்தில் அஜாய் முன் நின்றார். சமஸ்தான பகுதிகளில் மக்கள் போராட்டங்களை கட்டுவதற்கு வழிகாட்டினார்.

1940ல் கைதாக்கப்பட்டு தியோலி சிறையில் அடைக்கப்பட்டார், அங்கும் புகழ்வாய்ந்த பட்டினி போராட்டத்தில் பங்கேற்றார். தனது உடலை அனைத்து துன்ப துயரங்களையும் தாங்குவதற்குரிய வகையில் கட்டுமஸ்தாக வலுவாக வைத்துக்கொள்ளவேண்டும் என்பதில் அஜாய் அக்கரை காட்டினாலும் அவர் டிபி நோயால் அவதிப்பட துவங்கினார். அஜாய் காஷ்மீர் பகுதிகளிலும், பஞ்சாபிலும் பணிபுரியட்டும் என கட்சி வழிகாட்டியது. அங்கிருந்துதான் பம்பாய் மத்திய கமிட்டி கூட்டங்களுக்கே செல்லவேண்டிய நிலையில் அஜாய் இருந்தார். அவருக்கு பளுதூக்குதல், பாக்சிங் பயிற்சி இருந்தது. சோவியத் யூனியனுக்கு தூதராக அம்பாசிடராக இருந்த டி பி தார் போன்றவர்கள் காஷ்மீரில் அஜாய் செல்வாக்கால் ஈர்க்கப்பட்டனர். காஷ்மீரில் இயக்கம் கட்டுவதில் பெரும் முயற்சிகளை அஜாய் செய்தார்.

பஞ்சாபில் பின் நாட்களில் புகழ்வாய்ந்தவர்களாக மாறிய அன்றைய கல்லூரி மாணவர்களான ரொமேஷ் சந்திரா, பெரின் போன்றவர்கள் அஜாய் செயல்பாட்டால் கவரப்பட்டவர்கள். பஞ்சாபில் இருந்தபோதுதான் 1947ல் அஜாய் லித்தோராயை மணக்கிறார். லித்தோராய் இந்தோ சோவியத் கலாச்சார கழகத்தின் தலைவராக செயல்பட்டார். 1948 கல்கத்தா காங்கிரசில் அஜாய் பொலிட்பிரோவிற்கு

தேர்ந்தெடுக்கப்படுகிறார். பின்னர் தொடர்ந்து இரண்டு ஆண்டுகள் சிறைவாழ்க்கையில் அவதிப்பட நேரிடுகிறது. தோழர் ரணதிவே தலைமையிலான இடது அதிதீவிரம் குறித்த விமர்சனங்கள் பக்கம் அஜாய் நிற்கத் துவங்கினார். கட்சிக்குள் கொள்கை மோதல் வலுப்பெறுகிறது. நிலைத்து நிற்கும் அமைதி மற்றும் மக்கள் ஜனநாயகம் போன்ற தலையங்கங்கள் வரத்துவங்கின. கட்சியின் ஆவணங்களில் புகழ்பெற்ற 3P என்கிற மூவர் ஆவணம் ஒன்றை அஜாய் டாங்கே காட்டே வழங்குகின்றனர். பிற நாடுகளில் ஏறபட்ட புரட்சியை நகல்படுத்துவது அல்ல, இந்திய நிலைமைகளுக்கேற்ற புரட்சி உருவாக்கம் என்பது வலியுறுத்தப்பட்டது. இந்த சூழலில் 1951 கல்கத்தாவில் தலைமறைவாக நடந்த மாநாட்டில் அஜாய் பொதுச்செயலராகிறார்.

இந்தியாவில் வர்க்கங்களின் தன்மை, நிலபிரபுத்துவம், பணக்கார விவசாயிகள், நேரு அரசாங்கம் போன்றவை குறித்து கட்சிக்குள் நிலவிய வேறுபாடுகளை களைந்து கொள்வதற்காக இருபிரிவாக நின்ற தலைமைத்தோழர்கள் அஜாய், டாங்கே, ராஜேஸ்வரராவ், பசவபுன்னையா ஆகியோர் ஸ்டாலினிடம் விவாதித்து ஆலோசனை பெற மாஸ்கோவிற்கு செல்கின்றனர். பிப்ரவரி 4, 6, 9 1951 நாட்களில் நடந்த விவாதங்கள் குறித்து ருஷ்ய ஸ்டெனோகிராபர் குறிப்புகள் பின்னாட்களில் கிடைக்கப்பட்டன. ருஷ்ய குறிப்புகளை விஜய் சிங் என்பவர் மொழி பெயர்த்திருந்தார். நேரு சர்க்கார் மக்கள் செல்வாக்குள்ள அரசாங்கம் என்பதை தோழர்கள் கணக்கில் கொள்ளவேண்டும் என ஸ்டாலின் தெரிவித்ததாக இக்குறிப்பில் காணப்படுகிறது.

சோவியத்தில் ஸ்டாலின் மறைவிற்கு பின்னர் ஏற்பட்ட திருப்பங்கள், உலகளாவிய கம்யூனிஸ்ட் இயக்கங்களில் ஏற்பட்ட வேறுபாடுகள், பொதுத்தேர்தலில் பங்கேற்பு, தேர்தல் மூலம் கேரளாவில் தோழர் நம்பூதிரிபாட் தலைமையில் முதல் கம்யூனிஸ்ட்களின் மாநில அரசாங்கம், மாவோயிச செல்வாக்கு பரவும் சூழல் போன்ற முக்கிய காலமாக அவரது பொதுச்செயலர் பதவிக்காலம் இருந்தது. கட்சிக்குள் ஏற்பட்ட கருத்துமோதல்கள் கட்சி உடைந்துவிடுமா என்ற அளவிற்கு செல்லும்போதெல்லாம் பல்வேறு தரப்பு தோழர்களுடன் பேசி உடைப்பை தடுப்பதில் அஜாய் பெரும் பங்காற்றினார். முதல் தேர்தலில் சோசலிஸ்ட்களைவிட அதிகமான இடங்களையும் காங்கிரசிற்கு அடுத்த பெரும் கட்சியாக கம்யூனிஸ்ட் கட்சி நாடாளுமன்றத்தில் இடம் பெற்றது.

அனைத்திந்திய சமாதான ஒருமைப்பாட்டு கழகம், ஆப்ரிக்கா- ஆசியா ஒருமைப்பாடு போன்றவற்றிற்கு ஊக்கம் தந்தவர் அஜாய். உலக கம்யூனிச இயக்கம் மத்தியில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கு நன்மதிப்பை அவர் பெற்றுத் தந்தார். பொருத்தமான ஆய்வுகளை தரக்கூடியவர் என்ற சிறப்பு அவருக்கு இருந்தது. 1960 மாஸ்கோ சர்வதேசிய மாநாட்டில் தேசிய விடுதலை போராட்ட தீர்மான கமிட்டியில் அவர்

சேர்மனாக இருந்தார். அம்மாநாட்டில் சீன கம்யூனிஸ்ட் கட்சியின் நிலைப்பாடுகளை அவர் விமர்சித்து சோவியத் கட்சியின் பங்கு பாத்திரத்தை உயர்த்திப் பிடித்தார்.

கட்சியின் கொள்கை திசைதனை வரையறுப்பதில் 1956 பாலக்காடு 4வது காங்கிரஸ், 1958 அமிர்தசரஸ் காங்கிரஸ், 1961 விஜயவாடா கட்சி மாநாடுகளில் பெரும் பங்களிப்பை அஜாய் வழங்கினார். கேரளா அமைச்சரவை எதிர்த்த போராட்டங்கள், ஆட்சிக்கலைப்பின்போது இந்திய அரசியல் அமைப்பு சட்டமும், ஜனநாயகமும் பலவீனப்படுத்தப்படுகிறது என்பதையும் நேரு மீதான விமர்சனங்களையும் தனது பிரச்சாரமாக கொண்டு சென்றார். அதே நேரத்தில் நேருவிற்கு மாற்று வளர்ந்துவரும் வலதுசாரி தலைமையல்ல என்றார். கோவா விடுதலைப் போராட்டத்திற்கு தனது வழிகாட்டுதல்களை தந்தார். பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் என்பதை விலக்கிக் கொள்வது, சோசலிச ஆட்சியிலும் எதிர்கட்சிகளும் இயங்க ஜனநாயக வாய்ப்பு போன்ற மிக முக்கிய கொள்கை தெளிவாக்கங்களை அவர் பொதுச்செயலராக இருந்த அமிர்தசரஸ் மாநாடுதான் வழிகாட்டியது. விஜயவாடா மாநாட்டில் புதிய நிலைமைகளும் கடமைகளும் என அவர் ஆற்றிய உரைக்கு சில திருத்தங்கள் வந்தபோதும் அவரது மிக முக்கிய கட்சி ஒற்றுமைக்கான உரையாக பொதுவாக அவரது உரை ஏற்கப்பட்டது.

குறுகிய பொருளாதார தீர்மானவாதம் என்பதை எதிர்த்து அவர் போராட தவறவில்லை. தேசிய ஒருமைப்பாட்டு கவுன்சிலில் 1961ல் அவர் ஆற்றிய உரை நன்மதிப்பை தந்தது. விடுதலைக்கு பின்னால் ஆன நிகழ்வுகள்- நாட்டின் எதிர்காலம் குறித்த சரியான அணுகுமுறையை தந்தது. இந்திய- சீனா எல்லை பிரச்சனைகள் குறித்து அஜாய் நேருவுடன் தொடர்ந்து விவாதித்தார். ஏகாதிபத்திய ஏவல் நாய் நேரு என்கிற வரையறைகளை அஜாய் ஏற்கவில்லை. நேரு எதிர்த்த தனிப்பட்ட தாக்குதல்கள் கட்சியிலும் பிரச்சனையானது. சீன கம்யூனிஸ்ட் கட்சி மார்க்சியத்திற்கு ஏகபோக அதிகாரம் படைத்ததுபோல் உரிமை பாராட்டுவது குறித்தும், கட்சிக்குள் பிரச்சனைகளை உருவாக்குவது குறித்தும் அவர் தனது பேட்டிகளில் தெளிவுபடுத்தினார்.

அவர் மறைவிற்கு சில ஆண்டுகளுக்கு முன்னதாகவே அவருக்கு இதய நோய் ஏற்பட்டது. அவர் உடல்நிலையை சீர்படுத்திட மாஸ்கோ செல்வது என்ற வேண்டுகோள் ஏற்கப்படவில்லை. அவர் விடுப்பில் இருந்தகாலத்தில் பொதுச்செயலராக இருந்த தோழர் ஈ.எம்.எஸ் நம்பூதிரிபாட் மூலம் அவருக்கு இம்முடிவு தெரிவிக்கப்பட்டது. அவர் தனது 53 வயதிலேயே ஜனவரி 13, 1962ல் மறைந்தார். அவரது நூற்றாண்டுவிழா 2009-10ல் நடந்தது. இளம் வயதிலேயே புரட்சிகர நடவடிக்கைகளிலும் மார்க்சிய-லெனினிய பயிற்சியிலும் தேர்ச்சியை அவரால் நிறுவ

முடிந்தது.  இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்திலும் தேச நலன் சார்ந்த இயக்கங்களிலும் அஜாய் தனது செயல் சிந்தனைகளால் உயர்ந்து நிற்கிறார்.

## தோழர் சி ராஜேஸ்வர ராவ்



இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தில் அதன் கட்சி பொதுச்செயலராக 25 ஆண்டுகள் தொடர்ந்து இருந்து களப்பணியில் பயணித்த முன்னோடி கம்யூனிச போராளி தோழர் சி ஆர். அனைவராலும் ராஜேஸ்வர ராவ் அப்படித்தான் அழைக்கப்பட்டு வந்தார். ஆந்திர இயக்கத்திலிருந்து தேசிய – சர்வதேச அரசியல் வானில் வளர்ந்தவர். நிலத்தில் எப்போதும் உறுதியாக கால்பதித்து விவசாய இயக்கங்களுடன் வாழ்ந்தவர். தெலங்கான இயக்கப் போராளி. காடுகளில் தோழர்களுடன் நின்று கொரில்லா போர்முறையை முன்னெடுத்தவர். தவறுகள் என உணர்ந்த உடனேயே தன்னை திருத்திக்கொள்ள தயங்காமல் இருந்தவர். சக தோழர்களுடன் கரிசனமாக இருந்து அவர்களின் நலன்களில் அக்கறை காட்டியவர். எளிமையின் இலக்கணமாக இருந்தவர்.

விடுதலை போராட்ட சூழல், சோவியத் புரட்சி, மார்க்சிய- லெனிய தாக்கம் அவரிடத்தும் ஏற்பட்டது. சாதாரண உழைக்கும் மக்கள் விடிவிற்கு உடனடியாக புரட்சி என்கிற வேகம் அப்போதிருந்த அனைத்து கம்யூனிஸ்ட் இளைஞர்களுக்கும் இருந்ததுபோல்தான் சி ஆருக்கும் இருந்தது. ஆந்திர கம்யூனிஸ்ட்கள் - சி ஆர் போன்றவர் எங்களைப் போல காங்கிரஸ், காங்கிரஸ் சோசலிஸ்ட் இயக்கத்திலிருந்து கம்யூனிஸ்ட் கட்சிக்குள் வராமல் நேரிடையாக வந்தவர்கள் என்ற பதிவை இ எம் எஸ் அவர்கள் ஒருமுறை செய்திருந்தார். ஆனால் சிஆரும் காங்கிரஸ் சத்தியாக்கிரகிதான் என ஜவஹர்லால் பல்கலை பேராசிரியரான சேஷாத்ரி தனது கட்டுரையில் குறிப்பிடுகிறார். காங்கிரஸ் சோசலிச மாநாடுகளில் சி ஆர் பங்கேற்ற குறிப்பு ஏதுமில்லை.

சுந்தரையா அவர்கள் தான் காங்கிரஸ் காந்தி செல்வாக்கில் இருந்த நேரத்தில், பனாரஸ் பல்கலை நண்பர்கள் மார்க்சியம், ஆயுதம் தாங்கிய போராட்டங்கள் குறித்து தன்னிடம் விவாதித்ததாக எழுதியிருக்கிறார். சி ஆர் அவர்களுக்கு பனாரஸ் பல்கலை கழக காலத்தில்தான் மார்க்சிய தொடர்பு, கம்யூனிஸ்ட்கள் தொடர்பு ஏற்படுகிறது.

நூற்றுக்கணக்கான மாணவர்களை திரட்டி மார்க்சிய வகுப்புகள் ஏற்பாடு செய்பவராகவும் அவர்களுக்கு வழிகாட்டுபவராகவும் சி ஆர் இருந்தார். பின்னர் மருத்துவ படிப்பை தொடர்வதற்காக அவர் அங்கிருந்து சென்றாலும் முழுநேர அரசியல் ஈர்ப்பால் மருத்துவ படிப்பிலிருந்து வெளியேறினார்.

சி ஆர் கிருஷ்ணா மாவட்டம் மங்களபுரம் எனும் ஊரில் 1914 ஜூன் 6 அன்று ராஜேஸ்வர ராவ் பிறந்தார். மசூலிபட்டினம் ஆரம்ப கல்விக்கான இடமானது. நிலச்சுவான்தார் குடும்பமது. பின்னாட்களில் தனது சொத்தை முழுமையாக கட்சிக்கு கொடுத்தவர் சி ஆர். ஊரில் விவசாயிகளை திரட்டி தனது உறவுக்கார சல்லப்பள்ளி ஜமீன் எதிர்த்து போராடுகிறார். குதிரைப்படை தாக்குதலை அவர் எதிர்கொள்கிறார். அவரின் முதல் பெரும் களப்போர் அது . ஆந்திரா விவசாயிகள் சென்னை நோக்கி 1500 மைல்கள் பயணம் என்ற போராட்டத்தை நடத்தினர். அதில் தலைமையேற்ற ஒருவரான ராமலிங்கையா என்பவருடன் சி ஆர் தொடர்புகளை வைத்திருந்தார்.

1934ல் ஆந்திராவில் கம்யூனிஸ்ட் குழு அமைக்கப்படுகிறது. முதல் மாநாடு காக்கிநாடாவில் நடக்கிறது. நரசிம்மமூர்த்தி என்பார் செயலராகிறார். மசூலிப்பட்டினத்தில் 1937ல் இளைஞர் மாநாடு ஒன்றை சி ஆர் நடத்துகிறார். கோட்டப்பட்டினம் எனும் பகுதியில் பெண்கள் உட்பட நூற்றுக்கும் மேற்பட்ட தோழர்களுக்கு மார்க்சிய கல்விமுகாம் ஒன்றை அமைக்கிறார். நவசக்தி, பிரஜா சக்தி பத்ரிக்கைகள் பலருக்கு அறிமுகப்படுத்தப்படுகின்றன. அய்தராபத் நிஜாம் பகுதியில் கட்சி கமிட்டி ஒன்றை சி ஆர் போன்றவர்கள் முன்கையெடுத்து 1938ல் அமைக்கின்றனர். ரவிநாரயண்ரெட்டி பேருதவியாக இருக்கிறார். அப்பகுதியில் தோழர்கள் சுந்தரையா, சி ஆர் பங்கேற்கும் மார்க்சிய முகாம்கள் காம்ரேட்ஸ் அசோசியேஷன் என்ற பெயரில் நடத்தப்படுகின்றன.

விஜயவாடாவில் 1938 ல் நடந்த ஆந்திரா கட்சி மாநாட்டில் சி ஆர் மாநில குழுவிற்கு வருகிறார். 1943ல் மாநில செயலர் பொறுப்பேற்கிறார். தலைமறைவாக கட்சிப்பணி என்பதுதான் அப்போதிருந்த நிலை. 1942க்கு பின்னர் நிலைமைகள் சற்று மேம்படுகின்றன. வெளிப்படையான பணி மேற்கொள்ளப்படுகிறது. அகில இந்திய கட்சி ஜோஷி தலைமையை நிராகரித்து 1948ல் ரணதிவேவை பொதுச்செயலராக்குகிறது. ஆந்திர தோழர்கள் தங்களுக்கு ஏற்பட்ட நிஜாம் எதிர்ப்பு ஆயுதப்போராட்டங்கள் அனுபவத்தில் நேரு ஆட்சியை தூக்கி எறிய தெலங்கான வழி எங்கள் வழி முழக்கத்தை அங்கு வைக்கின்றனர். பின்னர் அதை வலியுறுத்தும் ஆவணங்களை சீனப்பாதை என்கிற பெயரில் கொணர்கின்றனர். ரணதிவே சோவியத் பாதை என்கிறார். கட்சி போராட்ட அறைகூவல் விடுக்கிறது, கட்சியில் சரிவு ஏற்படுகிறது. கட்சி சி ஆரை பொதுச் செயலராக்குகிறது. தோழர்கள் டாங்கே, காட்டே, அஜாய் இணைந்த ஆவணம் சீனா, சோவியத் இரண்டுமல்ல என பேசியது.

அக்காலங்களில் கட்சியில் ஒவ்வொருவருக்கும் புனைப்பெயர் ஒன்று இருக்கும். சி ஆர் அவர்கள் ராம் என்ற பெயரில் அழைக்கப்பட்டார்.

1949 ரயில்வே வேலைநிறுத்தம் கடுமையான அடக்குமுறைகளை சந்தித்தது. பம்பாய் சிறைக்கைதிகள் போராட்டத்தை குட்டி முதலாளித்துவ பார்வையில் அதிகாரி, அஜாய், காட்டே, டாங்கே துரோகம் செய்துவிட்டதாக பெரும் விமர்சனத்தை ரணதிவே பொலிட்ப்யூரோ சார்பில் செய்திருந்தார். ஆந்திரா தோழர்கள் "centralisation is possible of achievement only when the members at large feel this authority as fundamentally efficient instrument in their common activity and struggle. Otherwise it will appear as bureaucracy and struggle".. whatever came out from the mouth and pen of the General secretary became marxism என்கிற விமர்சனத்தை தோழர் ரணதிவே மீது வைத்தது. ராஜேஸ்வரராவை பொறுத்த்வரை அவர் தவறுகளுக்கு பொறுப்பில்லை. ஆனாலும் பொலிட்ப்யூரோ உடன் சமரசம் செய்தது தவறு என்ற சுட்டிக்காட்டலும் அதில் இருந்தது. ரணதிவேவின் அதிதீவிரவாத பாதை எதிர்த்து சி ஆர் போராடிக்கொண்டிருந்தார். ஆனால் அவர் மையத்தில் இல்லை என்பதும் சொல்லப்பட்டிருந்தது.

1951ல் கட்சிக்குள் இருக்கும் கருத்துவேறுபாடுகளை களைந்து ஆலோசனை பெற்றிட சிஆர் , பசவபுன்னையா, டாங்கே அஜாய் நால்வர்குழு மாஸ்கோ செல்கிறது. அங்கு ஸ்டாலின் சந்திப்பும் நிகழ்கிறது. அஜாய் பொதுச்செயலர் ஆகிறார். மதுரை கட்சி காங்கிரசில் பொலிட் ப்யூரோ உறுப்பினராக சி ஆர் ஆகிறார். பாண்டுங் மாநாட்டிற்கு சீனா அழைக்கப்படமாட்டாது என்ற கருத்தை சி ஆர் வைத்திருந்ததாகவும், அழைக்கப்பட்டால் தனது நிலைப்பாட்டை மாற்றி சரி செய்து கொள்வதாகவும் தோழர் கே எல் மகேந்திராவுடன் உரையாடல் ஒன்றில் சி ஆர் தெரிவிக்கிறார். அதே போல் தனது நிலையை மாற்றிக்கொண்டதாக மகேந்திரா குறிப்பிடுகிறார். பாலக்காடு காங்கிரசில் ஜோஷி, டாங்கே, சி ஆர் , பவானிசென் இணைந்து ஆவணம் வைக்கின்றனர்.

1950களில் இந்தியசோசலிஸ்ட்கள் கம்யூனிஸ்ட்களை கடுமையாக அம்பலபடுத்துவதாக கருதியும் அவர்கள் கோமிண்டார்ண் , சோவியத் சொற்படி கீழ்படிந்து நடப்பவர்கள் என்பதை நிரூபிக்கவும் கம்யூனிஸ்ட் கட்சி தலைமறைவு கால, இரகசிய ஆவணங்கள் சிலவற்றை வெளிக்கொணர்ந்தனர். ஆனால் அவர்கள் மக்களிடம் விதைக்க நினைத்த சந்தேக பார்வை நிராகரிக்கப்பட்டதை தேர்தல்கள் உணர்த்தின. மினுமசானி. வி பி கார்னிக் போன்றவர்கள் இதை திறம்பட தங்கள் வெளியீடுகள் மூலம் செய்து வந்தனர்.

இந்த காலத்தில் தோழர் ரஜினிபாமிதத் தோழர்கள் ரணதிவே மற்றும் டாங்கே இருவரையும் விமர்சித்திருந்தார். ஒருவர் ஒய்ட் டெரர் என்பதை அறியாமல் அதை பேசிக்கொண்டிருக்கிறார் என்றும் மற்றவரான டாங்கே டிட்டோயிசத்தை அதிகமாக பின்பற்றுவதாக தெரிகிறது என்ற முறையில் விமர்சனம் இருந்தது. "Armed Struggle which is the higher form of struggle, must bear a mass character. Any resort to armed action by individuals or small groups is only terrorism" என்பதையும் பாமிதத் குறிப்பிட்டிருந்தார். நேரு சர்க்கார் பெருமுதலாளித்துவ சர்க்கார்தான். இதன் பொருள் எப்போதும் அமெரிக்க ஏகாதிபத்திய நலன்களுடன் ஒத்துபோவதது என புரிந்து கொள்ளக்கூடாது எனவும் அவர் குறிப்பிட்டார். Leadership of the working class will be realised not merely through the leadership of the Communist party but above all through the direct action of the working class itself in support of the demands and struggles of peasantry என்பது மதுரைக்கு முன்னர் Tactical Line 1953ல் (நால்வர் கமிஷன் மாஸ்கோ சென்று வந்த பின்னர்) இடம் பெற்றது

அமிர்த்சரஸ் 1958 மாநாடு பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் என்பதற்கு பதிலாக பாட்டாளிகள் தலைமையில் என அதை மாற்றிக் கொண்டது. தாங்கள் ஆட்சிக்கு வந்தால் எதிர்கட்சிகள் செயல்பட அனுமதிக்கப்படும் என்பதும் தெளிவு படுத்தப்படுகிறது. நம்பூதிரிபாத் அவர்கள் தலைமையில் கேரளத்தில் ஆட்சி என்ற அனுபவம், அதை வாழவிடாது நீக்கிட நடக்கும் போராட்டம் என்ற பின்னணியில் விவாதம் அக்கட்சி காங்கிரசில் நிலவியது. சோவியத்- சீன கட்சிகளின் அனுபவத்திலிருந்து மாறுபட்ட புதிய சோதனையாக இதை புரிந்து கொள்ளலாம்.

1961 விஜயவாடா காங்கிரசிலும் கட்சிக்குள் பெரும் கருத்து வேறுபாடுகள் நிலவின. தோழர்கள் அஜாய், டாங்கே, சி ஆர், பவானிசென் போன்றவர் கருத்தொருமித்து வைத்த ஆவணம், தோழர்கள் பசவபுன்னையா, ரணதிவே, ராமமூர்த்தி போன்றவர்கள் வைத்த ஆவணம், இவை இரண்டுக்கும் மாற்றாக இ எம் எஸ் தனித்து வைத்த ஆவணம் என மூன்று ஆவண விவாதங்கள் எழுந்தன. நள்ளிரவை தாண்டி மணி இரண்டை நெருங்கியும் விவாதங்கள் நடந்துகொண்டே இருந்ததாகவும் தோழர் ஜோதிபாசு தலையிட்டு அஜாய் வைத்த ஆவணத்தை ஏற்க முடியாவிட்டாலும் அவரது உரை ஏற்க தகுந்ததாக இருக்கிறது என கருத்து வெளியிட அஜாய் உரையே தீர்மானமாக ஏற்கப்பட்டது. இந்த பதிவை தனது நினைவு குறிப்பில் மகேந்திரா எழுதியிருக்கிறார். அஜாய் மறைவிற்கு பின்னர் கட்சி உடையாமல் தற்காலிகமாக தடுக்கப்படுகிறது, தோழர் டாங்கே சேர்மனாக, இ எம் எஸ் பொதுச்செயலராக தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அந்த ஏற்பாடு நிற்கவில்லை. சீன யுத்தம், கட்சி பிளவிற்கு சீனகட்சி விடுத்த பகிரங்க அறைகூவல், டாங்கே கடிதம் போன்றவை பெரும் பிரச்சனைகளாகின.

கட்சி பிளவை 1964ல் சந்திக்கிறது. சி பி எம் கட்சி உதயமாகிறது. அவ்வாண்டு பம்பாயில் நடந்த சி பி அய் கட்சி மாநாட்டில் தோழர் சி ஆர் பொதுச்செயலராக தேர்ந்தெடுக்கப்படுகிறார். தொடர்ந்து 25 ஆண்டுகள் மிக பொறுமையாக அப்பொறுப்பில் செயல்படுகிறார். மிக முக்கிய அரசியல் திருப்பங்களுக்கேற்ப அரசியல் திசைவழியை அவரது தலைமையில் கட்சி கண்டறிய வேண்டியிருந்தது. 1942 வெள்ளையனே வெளியேறு போராட்ட நிலைப்பாட்டிற்கு பின்னர் மிக முக்கிய விமர்சனமாக கட்சி சந்திக்க வேண்டிய நிலை எமர்ஜென்சி காலத்தில் ஏற்பட்டது. கட்சியை மீட்டெடுப்பது என்கிற போராட்டத்தை தோழர்கள் உதவியுடன் சி ஆர் நடத்தினார். 1977 பதிந்தாவில் கட்சி தன்னை தயக்கமின்றி விமர்சித்துக்கொண்டு மீட்டுக்கொணடது. டாங்கே, மொகித்சென் போன்ற ஜாம்பவான்களின் விமர்சனங்களை எதிர்கொள்ளவேண்டியிருந்தது. முதலாளிவர்க்க செல்வாக்கில் செயல்படும் காங்கிரஸ்- ஜனதா போன்ற கட்சிகளை முறியடிக்க வேண்டுமெனில் இடதுசாரி ஜனநாயக மாற்று என்பது ஏற்கப்பட்டது. தோழர் சி ஆர் வலியுறுத்திய Class Independence நிலைப்பாட்டை மொகித்சென் கடுமையாக தனது சுயசரிதையில் விமர்சிக்கிறார்.

இந்தக் காலத்தில் இரு கம்யூனிஸ்ட் கட்சிகள் அரசியல் நெருக்கத்திற்காக பெரும் முயற்சிகளை செய்தவர் சி ஆர். லிங் பத்ரிக்கைஆசிரியர் இல்லத்தில் இ எம் எஸ் சந்திப்பிற்கான ஏற்பாடு செய்யப்பட்டது. ஆறுமுறையாவது என் வீட்டிற்கு வந்து தொடர்ந்து அரசியல் நிலைப்பாடுகளை சி ஆர் விவாதித்தார், கட்சியை ஒன்றுபடுத்துவது என்பதில் பெரும் தாக்கத்துடன் இருந்தார் என்பதை தோழர் இ எம் எஸ் அவர்கள் தயக்கமின்றி பதிவு செய்திருக்கிறார். இச்சந்திப்புகள் குறித்து சி பி எம் உடன் ரகசிய உடன்பாடு என்ற தாக்குதலை டாங்கே போன்றவர்கள் தந்தனர்.

தோழர் சி ஆர் அவர்கள் விவசாய தொழிலாளர் இயக்கம், பெண்கள் இயக்க தோழர்களுக்கு தொடர்ந்த வழிகாட்டல்களை செய்தது குறித்து கீதாமுகர்ஜி போன்றவர்கள் எழுதுகின்றனர். அவர் எளிமையானவர் ஆனால் அஞ்சா நெஞ்சம் கொண்டவர் என்பதற்கான பதிவை சி பி எம் கட்சியின் அனுமந்தராவ் பதிவில் நாம் காணலாம். ஆந்திராவில் வெள்ளயனே வெளியேறு போராட்டம் முடிந்த பின்னர் கட்சி கூட்டம் நடந்து கொண்டிருக்கும் போது கட்சி பெண்களை கேலி பேச வந்த கும்பல் ஒன்றை அவரே வெளியில் வந்து நின்று கற்களால் தாக்கி அப்புறப்படுத்தினார்.

தெலங்கான போராட்டா காலத்தில் சுந்தரையா, சி ஆர், ரவிநாரயண் ரெட்டி, அருட்ல ராமசந்திர ரெட்டி போன்றவர்களின் பங்களிப்பு பலராலும் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஏறத்தாழ 16000 சதுரமைல் பரப்பில் 3000 கிராமப்பகுதியில் பல்லாயிரம் மக்களை திரட்டி நிஜாம் ராணுவம் ரசாக்குகள் போலீஸ் நிலபிரபுக்கள் அடக்குமுறை எதிர்த்த தீரம் செறிந்த போராட்டமாக தெலங்கான பார்க்கப்படுகிறது. ஆரம்பத்தில் கம்புகளும், கற்களும்தான் ஆயுதம். பின்னர் வெடிமருந்து துப்பாக்கி, கொரில்லா போர்முறை என

அப்போராட்டம் தீவிரமானது. நிலங்களை பகிர்ந்து அளித்தல், நிஜாமை முறியடித்தல் என திசை கொண்டது. பம்பாய்கிரானிக்கில், கே எம் முன்ஷி போன்றவர்கள் கம்யூனிஸ்ட்களுக்கு களங்கம் கற்பிகும் வகையில் செய்திகள் வெளியிட்டனர். நிஜாம் அரசு கட்சியை தடை செய்தது. கட்சி தொண்டர்கள் மற்றும் வெகுமக்களை நிஜாம் அரசு கொன்றது. மக்கள் போராட்டமும், விடுதலைக்கு பின்னர் காங்கிரசின் சமஸ்தான இணைப்பு நிலைப்பாடும் உறுதியானது. இந்திய ராணுவம் கொண்டு அய்தராபாத்தை மீட்பது நடைபெற்றது. அப்போதும் கட்சி தடையில் இருந்தது.

சுந்தரையா போன்றவர்கள் தொடர்ந்து ஆயுதப்போராட்டம் என்றனர். ராமசந்திர ரெட்டி, கமலாதேவி போன்றவர்கள் ஏற்க மறுத்துவிட்டனர். ரணதிவே அவர்கள் 'மக்கள் அய்தராபாத் நமது நிலை' என்ற கட்டுரை ஒன்றை பீப்பிள்ஸ் ஏஜ் பத்ரிக்கையில் எழுதினார். நிஜாம் போன்ற நிலபிரபுத்துவ சக்திகள் தனி அய்தராபாத் என்கிறது- முதலாளித்துவ காங்கிரஸ் இந்தியாவுடன் இணைப்பு என்கிறது. கம்யூனிஸ்ட்களாகிய நாமோ 'மக்கள் அய்த்ராபாத்' என நிற்போம் என்றார் பிடிஆர் . இப்பதிவையும் மகேந்திரா நினைவு குறிப்பில் பார்க்க முடிகிறது. நிஜாம் வெளியேற்றத்திற்கு பின்னர் தெலங்கான போராட்டம் விலக்கிக் கொள்ளப்படவில்லையெனில் பகிரங்கமாக விலக்கி கொள்வதற்கான அறிக்கையை வெளியிடுவேன் என்றார் அஜாய்கோஷ். ரவிநாரயண்ரெட்டி போன்றவர்கள் விலக்கி கொள்ளப்பட்டதாக அறிவித்திருந்தனர். இதனை கட்சி கடுமையாக விமர்சித்தது.

1970-71ல் நில மீட்பு போராட்டங்களை திட்டமிட்டு கட்சியின் பெரும் தலைவர்களே போராட்டத்தில் நின்று தலைமை தாங்கினர். பவானிசென்னுடன் இந்திய விவசாய அரங்கம் குறித்த ஆவணங்களை மிக பொறுப்புடன் சி ஆர் தயாரித்ததாக அறிகிறோம். விவசாய பொருளாதாரம்- கட்சி கடமைகள் என்ற அவரது உரை மிக முக்கியமானது என அவருடன் பனாரஸ்ஸில் ஒன்றாக இருந்த ரஸ்டம் குறிப்பிடுகிறார்.

தோழர் பரதன் சி ஆருடன் இருந்த உறவுகள் குறித்து எழுதியுள்ளார். சி ஆர் தன்னை சித்தாந்தவாதி என காட்டிக்கொண்டதில்லை. காதுகொடுத்து கேட்பார். விவசாய பின்புலத்துடனே அவர் எளிமையாக நடந்துகொள்வார். இந்த நாட்டின் மதசார்பற்ற தன்மையை உயர்த்தி பிடிக்க அவர் பாடுபட்டார் என குறிப்பிடுகிறார். பஞ்சாப், அஸ்ஸாம், அயோத்தியா நிகழ்வுகளின்போது நேரிடையாக சென்று மக்களுடன் உரையாடி உண்மையை கண்டறிய அவர் விரும்பினார். மக்கள் நியாயமான போராட்ட குரலை முன்னெடுத்தார். அனைத்துதரப்பு மக்கள் ஒற்றுமைக்கு நின்றார் என பரதன் பதிவு செய்துள்ளார்..

மருத்துவ கல்லூரி காலத்தில் சிஆர் கப்பல்கட்டுமான தொழிலாளர்களை திரட்டினார். அய்தராபாத் தொழிற்சங்க காங்கிரசை 1946ல் உருவாக்க உதவினார்.

ஆயுதம் தாங்கிய போராட்ட காலத்தில் அவர் மலைவாழ் மக்களுடன் தங்கியிருந்தார். போலீசாரிடமிருந்து அவர்கள் தரும் சிக்னல் மூலமாகவே அவர் தப்பிவந்தார். இரண்டாவது காங்கிரசில் ஜோஷி நீக்கப்படவிதம் குறித்து நம்பூதிரிபாட் அவர்களுக்கு இருந்தது போலவே சி ஆருக்கும் விமர்சனம் இருந்தது. நம்பூதிரி, சி ஆர், பசவபுன்னையா ஆகியோர் அப்போது ஒரே டென்னில் (den) சேர்ந்து இருந்ததாக இ எம் எஸ் குறிப்பிடுகிறார்.

மார்க்சிய சிந்தனைகளை வளமான இந்திய சிந்தனை, கலாச்சார அம்சங்களுடன் இணைந்து புரிந்து கொள்ள வற்புறுத்திவந்தார். இக்கட்டுரையாளருக்கு (பட்டாபிக்கு) 1980களின் மத்தியில் அவருடன் மூன்று நாட்கள் உடனிருந்து உதவிட வாய்ப்பு கிடைத்தது. ஆங்கில நாளிதழ் செய்திகளை அவர் விவாதிப்பார். இளைஞனாக பேசிய அரைகுறை அம்சங்களை பொருட்படுத்தாமல் நியுஏஜ்க்கு எழுது என்றார். தோழர் ஞானையாவுடன் மகாபாரதம் பார்க்கவே இல்லம் வந்தார். சோவியத்தில் தரமற்ற பொருட்கள் விநியோகிக்கப்படுகின்றன என தனது அனுபவத்தை அங்கு நடந்த அனைத்து தொழிற்சங்க கருத்தரங்கில் பகிர்ந்து கொண்டார்.

டாங்கே வெளியேற்றப்பட்ட நிலையில் கட்சி மீண்டும் உடைந்துவிடாமல் காப்பதில் சிஆர் பெரும் பங்காற்றினார். ஏப்ரல் 1990 தேசிய கவுன்சிலில் அவர் பொதுச்செயலர் பொறுப்பை துறந்தார். அய்தராபாதில் சென்று தங்கி உடல்நிலை ஒத்துழைக்கும்வரை படித்து வந்தார். ராமானுஜர் பற்றி படித்துவிட்டு முன்பே தெரிந்து கொள்ளாமல் போய்விட்டேனே என சொன்னதாக சேஷாத்ரி அவர்கள்: குறிப்பிடுகிறார். உடல்நல குறைவு ஏற்பட்டு அவர் ஏப்ரல் 9, 1994ல் மறைகிறார்.

மகத்தான இந்திய புதல்வனாக, உலக மக்களின் தோழனாக, விவசாய கிராமப்புற எளிமையுடன் கம்பீர நெடிய உருவம் கொண்டு வாழ்ந்த தோழர் சி ஆர் நினைவுகளில் செல்வாக்குடன் இருந்து வருகிறார்.

Ref:


Tribute to CR

Telangana Struggle- Arutla Ramachandra Reddy

Remniscences K L Mahendra

CR -Balakrishna

Mainstreaam, Frontline, Revoultionary Democracy Articles

## தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாட் (E M S Namboodripad)



நம்பூதிரிபாடும் மினுமசானியும் நாகபுரியிலிருந்து காங்கிரஸ் சோசலிஸ்ட் செயற்குழுவை முடித்துவிட்டு ஆந்திரா திரும்பினர். அங்கு காங்கிரஸ் சோசலிஸ்ட்களின் கூட்டம் நடந்துகொண்டிருந்தது. அதில் கம்யூனிஸ்ட் கட்சியை சார்ந்த தோழர் பசவபுன்னையா மசானியை கேள்விக்கணைகளால் துளைத்துக்கொண்டிருந்தார். அப்போது நம்பூதிரி காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியில் இருந்தார். 1935அக்டோபரில் காங்கிரஸ் கமிட்டி சென்னையில் நடந்தபோது ராயிஸ்ட்கள், காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் கம்யூனிஸ்ட்கள் என அனைவரும் ராடிகல் மாநாடு ஒன்றை நடத்தினர். அதில் கிருஷ்ணன்பிள்ளை, நம்பூதிரி, சுந்தரையா போன்றவர்கள் பங்கேற்றனர். அப்போதுதான் நம்பூதிரி அவர்களுக்கு கம்யூனிஸ்ட்களுடன் விவாத தொடர்பு ஏற்படுகிறது. இத்தொடர்பு குறித்து பின்னர் அவர் ஜெயபிரகாஷ் அவர்களிடம் பகிர்ந்து கொள்கிறார். ஆனாலும் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் என்பதில் ரகசியம் காக்கப்படவேண்டும் என்பதால் அவ்வாறு ஆனதை அவர் தெரிவிக்கவில்லை டாக்டர் ஹரிதேவ் சர்மாவிற்கு அளித்த பேட்டியில் இஎம்எஸ் மேற்கூறிய நினைவை பகிர்ந்துகொள்கிறார்.

கேரளாவில் செயலாற்றிய தான் காங்கிரசிலிருந்து காங்கிரஸ் சோசலிஸ்ட்டிற்கு பின்னர் கம்யூனிஸ்ட் கட்சிக்கு நடைமுறை அனுபவம் விவாதங்கள் வாயிலாகவே மாறிவந்தேன் என்பார் நம்பூதிரிபாட். 1938ல் காங்கிரஸ் சோசலிஸ்ட் மாநாட்டிற்கு சென்றுவந்த கிருஷ்ணன் பிள்ளை அங்கு நடந்த விவாதங்களை எடுத்துரைத்தார். கேரளா காங்கிரஸ் சோசலிஸ்ட்களில் பெரும்பாலோர் 1939 இறுதியில் கம்யூனிஸ்ட் கட்சிக்கு செல்வது என முடிவெடுத்தோம் என்கிறார் நம்பூதிரிபாட் .

அன்றைய சோவியத்யூனியன் அனைவரின் ஈர்ப்புக்குரியதாக இருந்தது. சோசலிஸ்ட்களின் பத்ரிக்கை பிரபாதம் என்பதில் உலகம் சோவியத் மாடலை பின்பற்றாவிட்டால் மனித நாகரிகம் அழிந்துவிடும் என நம்பூதிரி அவர்கள் எழுதினார். அறிவியல் சிந்தனையில் இயக்கவியல் மூலம் மனிதனை, சமுகத்தின் எதிர்காலத்தை கட்டுப்படுத்தலாம் என்றார்.. 1952ல் National question in Kerala என்பதை அவர் எழுதினார். தனது நம்பூதிரி சாதிய சூழல், திராவிடர் என்கிற இனவாதம், மலையாளி என்கிற மொழிசார்ந்த அடையாளம் என அனைத்தையும் அவர் எதிர்கொள்ளவேண்டியிருந்தது.

இளங்குளம் வேத மரபை சார்ந்த குடும்பமது. மேற்குமலபார் பகுதியில் மிகப்பெரும் நிலச்சுவான்தாரர்களாக அத்யன் நம்பூதிரிகள் இருந்தனர். வேதபாராயணங்களும் சம்ஸ்கிருத கல்வியும் நிறைந்த சூழல். நம்பூதிரி நல கழகத்தில் பணியாற்றியவரில் சிலர் ஆங்கில கல்வி அவசியம் என கருதினர். அங்கிருந்த முற்போக்கானவர்களின் முயற்சியால் ஆங்கில பள்ளி சூழல், கல்லூரி செல்ல வாய்ப்பு நம்பூதிரி அவர்களுக்கு ஏற்படுகிறது. ஏகாதிபத்திய எதிர்ப்பு விடுதலைவேட்கை சிந்தனையாலும், சோவியத் புரட்சி மார்க்ஸ்- லெனின் தாக்கத்தாலும் இந்தியாவில் கம்யூனிச இயக்கம் தனது உருவாக்கத்தையும் வளர்ச்சியையும் காணத் துவங்கியது. கேரளாவில் அன்று விடுதலை தாகம் கொண்டவர்கள் காங்கிரஸ் இயக்கம், காங்கிரஸ் சோசலிச இயக்கம் ,கம்யூனிச இயக்கம் என தனது அமைப்புரீதியான மாற்றங்களை கண்டனர்.

இளங்குளம் மன சங்கரன் நம்பூதிரிபாட் என்பது அவரது முழுப்பெயர். ஜூன் 14, 1909ல் பெரிந்தலமன்னா தாலுகாவில் பிறந்தார். அவரை வீட்டில் செல்லமாக குஞ்சு என அழைத்தனர் அவர் வாழ்நாளில் மிகவும் நேசித்த தாயார் பெயர் விஷ்ணுதத் அந்தர்ஜனம். சிறுவயதிலேயே காலமான அவரது தந்தை பெயர் பரமேஸ்வரன் நம்பூதிரிபாட். ஆங்கில கல்வி கற்பிக்கும் கூடத்திற்கு இடம் அவரது மாமா ஒருவரால் வழங்கப்பட்டது. மரபில் ஊறிப்போன நம்பூதிரி சமுகத்தினர் இதை எதிர்த்தனர். ஆங்கிலம் ஆபாசம் என்ற பிரச்சாரம் இருந்தது. ஆரம்பத்தில் வீட்டில் தனிஆசிரியர் மூலம் கல்வி, ஆசிரியர் இல்லத்தில் தங்கி கல்வி- பிறகுதான் முறையான பள்ளிக்கல்விக்கு தான் அனுப்பப்பட்டதாக தெரிவிக்கிறார் இ எம் எஸ்.. அங்குதான் பல சாதி மாணவர்களுடன் பழகும் முதல் வாய்ப்பு ஏற்பட்டதாகவும் தெரிவிக்கிறார். வள்ளுவநாடு பகுதியில் ஹோம்ரூல்- அன்னிபெசண்ட், திலகர் பற்றிய பேச்சுக்கள் இருந்தன. கேசவமேனன் அவர்கள் எழுதிய கோகலே, திலகர், காந்தி புத்தகங்கள் கிடைக்கப்பெற்றன. காந்தியிடத்தில் இ எம் எஸ் அவர்களுக்கு ஈர்ப்பு ஏற்பட்டது. .

சிவில் ஒத்துழையாமை இயக்கத்தில் சில நம்பூதிரிமார்களும் பங்கேற்றனர். அவர்கள் சாதி பிரஷ்டம் செய்யப்பட்டனர். கிலாபத் இயக்க சூழலில் தமிழகத்தில்

ஆசிரியர் நண்பர்களுடன் திருச்சி, பழனி, ராமேஸ்வரம் யாத்திரை வந்தததாக இஎம்எஸ் எழுதியுள்ளார். மாத்ருபூமி, யோகஷேமம், கைராளி இலக்கிய பத்ரிக்கை கிடைக்கிறது. விவேகானந்தர் எழுத்துக்கள் பரிச்சயமாகின்றன. 1923ல் காந்தி திருச்சூர் வந்தபோது ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவராக தானும் காணச்சென்றதாக இ எம் எஸ் தெரிவிக்கிறார். அதே ஆண்டில் தனது 15 வயதில் நம்பூதிரிநலகழக செயலராகிறார். அவரின் முதல் பொதுப்பணி அங்கு துவங்கியதாக தெரிவிக்கிறார். பள்ளி விடுமுறையில் காங்கிரஸ் கூட்டங்களில் பங்கேற்கிறார். அங்கு நடந்த ஆங்கில விவாதங்களை புரிந்து கொள்ள முடியவில்லை. முழுவிடுதலை ஏற்புடையதாக இருந்தாலும் , குடும்ப சூழல் காரணமாக குத்தகைதாரர் உரிமை விஷயத்தில் எடுக்கப்பட்ட தீர்மானத்தை அன்று அவரால் ஏற்க இயலவில்லை . சைமன் கமிஷன் போராட்டத்தில் தான் பங்கேற்க முடியாமல் போனது குறித்து வருந்துகிறார்.

1929ல் அவர் திருச்சூர் செயிண்ட் தாமஸ் கல்லூரியில் சேர்கிறார். சி அச்சுதமேனன், அலெக்சாண்டர் போன்றவர்கள் கல்லூரி நண்பர்கள் . கல்லூரி நூலகம் மூலம் பெர்னார்ட்ஷா, எச் ஜி வெல்ஸ், ஹரால்ட் லாங்கே புத்தகங்கள் அறிமுகமாகின்றன. லாங்கேவின் சோசலிசம்- கம்யூனிச உரையாடல் அவருக்கு அறிமுகமாகிறது. நேரிடையாக மார்க்ஸ்- லெனின் புத்தகங்கங்கள் கிடைக்கப் பெறவில்லை. பாசுபதம், யோகசேமம் பத்ரிக்கைகளில் பிரஞ்சு புரட்சி- நம்பூதிரி சமுகம் குறித்து கட்டுரைகள் எழுத துவங்குகிறார். மலபாருக்கு ராஜாஜியும், ஜமன்லால் பஜாஜ் அவர்களும் வந்துள்ளதை அறிந்து கல்லூரியில் பேசவைக்க முயற்சிக்கின்றனர். அது முடியாத நிலையில் அவர்களை நம்பூதிரி உட்பட நண்பர்கள் சந்திக்கின்றனர். இந்தி பயில ராஜாஜி அறிவுரை தந்ததாக இ எம் எஸ் குறிப்பிடுகிறார்.

'சாதியை கேட்காதே- சொல்லாதே' நாரயணகுரு தாக்கம், அய்யப்பன் அவர்களின் சமபோஜன இயக்கம் போன்றவற்றின் சூழலில் 'உன்னி நம்பூதிரி' முற்போக்கு மாற்றங்களை விழையும் இதழாக வருகிறது. 1930களில் நம்பூதிரி சமுகத்தில் பெண்கள் விடுதலையை முன்வைக்கும் நாடகங்களில் இ எம் எஸ் பங்கேற்கிறார். வீடுகளில்கூட இந்நாடகங்கள் விவாதமானது. குடுமி களைதல்-கிராப் வைத்தல், பெண்கள் நகை அணிதல் போன்றவைகூட அச்சமுகத்தில் இயக்கமாக பரவின.

1932ல் நேருவின் தாக்கத்தில் அவரது வாழ்க்கை வரலாறு ஒன்றை இ எம் எஸ் எழுதி வெளியிடுகிறார். சட்டமறுப்பு இயக்கத்தில் கைதாகி வேலூர் சிறைக்கு அனுப்பப்படுகிறார். அங்கு ராஜாஜி, சத்தியமூர்த்தி,, பட்டாபி சீதாரமைய்யா, ஆந்திர கேசரி பிரகாசம், தொழிற்சங்க தலைவர்கள் முகுந்தலால் சர்க்கார், வி வி கிரியின் நண்பர் ராமலிங்கம் போன்றவர்களுடன் விவாத தொடர்பு ஏற்படுகிறது.

பட்டாபிசீதாரமையயாவிடம் உருது கற்க வாய்ப்பு ஏற்படுகிறது. சத்தியமூர்த்தி பூணூல் ஒன்றை கொடுத்து நம்பூதிரியை அணிய சொன்னதாகவும், மரியாதை நிமித்தம் தான் அதை பெற்றுக்கொண்டாலும் அணியவில்லை என்ற பதிவை தருகிறார் இ எம் எஸ். 1934ல் காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் பாட்னாவில் மாநாடு நடத்துகின்றனர் என்பதை அறிந்து இ எம் எஸ் அதற்கு அனுப்பப்படுகிறார். கேரளாகமிட்டிக்கு கிருஷ்ணன்பிள்ளை செயலராகிறார். கம்யூனிஸ்ட்கட்சி தலைமறைவாக செயல்பட்ட காலத்தில் சுந்தரையா, அமீர்ஹதர்கான் தாக்கத்தில் அவர் கட்சி உறுப்பினராகிறார்... இ எம் எஸ் காங்கிரஸ் சோசலிச மாநாடுகள் குறித்தும், சோசலிஸ்ட்கள்- கம்யூனிஸ்ட்கள் வேறுபாடுகள் குறித்தும் தனது கட்டுரைகளில் பின்னாட்களில் விளக்கமாக எழுதியுள்ளார். 1939களில் நம்பூதிரி அவர்களின் குடும்பசொத்தை அரசாங்கம் பறிமுதல் செய்து அவரது துணைவியாரை நடுத்தெருவில் நிறுத்தியது. 1942ல் திரும்ப பெற்ற சொத்தை விற்று கடன் அடைத்ததுபோக கட்சி பத்திரிக்கை தேசாபிமானி துவங்க ரூ 70 ஆயிரம் தந்து தான் சொத்து ஏதுமற்றவராக மாறியதையும் நம்பூதிரி குறிப்பிடுகிறார்.

ஜெயபிரகாஷ் நாரயண் எழுதி வெளிவந்த 'Why Socialism' கேரளாவில் நம்பூதிரி போன்றவர்கள் மத்தியில் தாக்கத்தை ஏற்படுத்தின. அதை பாடபுத்தகம் போல கொண்டாடினோம் என இ எம் எஸ் பதிவு செய்கிறார். அதேபோல் ஜேபியின் கேரளா வருகை, கலந்துரையாடல் போன்றவை இத்தோழர்களை தொழிற்சங்கம், விவசாய அரங்கங்களின்பாற் வேலை செய்ய வைத்தது. 'வலதுசாரி படேல்' போன்றவர்கள் பர்தோலியை உருவாக்கும்போது, நாம் ஏன் சோசலிச பர்தோலிகளை உருவாக்கக்கூடாது என ஜேபி வினவினார் என்ற பதிவையும் நம்பூதிரி தருகிறார். விவசாயிகள் இணையான அரசாங்கங்களை உருவாக்கவேண்டும் என்றார் ஜேபி. ஜேபி மசானியால் மட்டுமே நாங்கள் சோசலிஸ்ட்களாக இல்லை. ஏகேஜி, கிருஷ்ணபிள்ளை, இ எம் எஸ் அவரவர் அளவிலேயே சோசலிஸ்ட்களாக மாற முடிந்தது என்ற கருத்தையும் இ எம் எஸ் வெளிப்படுத்தியிருந்தார்...

1931ல் திருவனந்தபுரத்தில் பொன்னாரா ஸ்ரீதர், குருக்கல், திருவட்டார் தானுபிள்ளை, சிவசங்கரபிள்ளை, ஆர்.பி.அய்யர், பாஸ்கரன். சேகர் போன்றவ்ர்கள் கம்யூனிஸ்ட் லீக் ஒன்றை அமைத்தனர். தோழர்கள் பி கிருஷ்ணபிள்ளை, இ எம் எஸ், கே தாமோதரன் , என் சி சேகர் உதவியுடன் S V காட்டே கேரளாவில் கம்யூனிஸ்ட் குழு ஒன்றை அமைத்தார். 1937 முதல் இக்குழு இரகசியமாக செயல்படதுவங்கியது. வெளியில் காங்கிரசினராக, காங்கிரஸ் சோசலிஸ்ட்களாக கம்யூனிஸ்ட்கள் செயல்படும் சூழல் இருந்தது. 1939 டிசம்பரில் பினராயி, தெல்லிசேரியில் 90 தோழர்கள் கூடி கம்யூனிஸ்ட்

கட்சியை உருவாக்கினார்கள். ஜனவரி 1940ல் சுவர் விளம்பரங்கள் மூலம் கட்சி உதயம் மக்களுக்கு தெரிவிக்கப்பட்டது.

இத்தலைவர்களில் பலர் கேரளா காங்கிரஸ் கமிட்டியில் ஆங்காங்கே முன்னணி தலைவர்களாக இருந்தனர். 1940ன் இறுதியில் மலபார் பகுதியில் விவசாய கிளர்ச்சிகள் எழுந்தன. போலீஸ் துப்பாக்கி சூடு நடந்தது. ஆரம்ப பள்ளி ஆசிரியர் ஒருவரும், பீடித்தொழிலாளி ஒருவரும் சுடப்பட்டனர். கம்யூனிசத்தின் பெயரால் நடந்த முதல் களப்பலியாக கேரளாவில் இது பார்க்கப்படுகிறது. பின்னர் 1943ல் கையூர் தோழர்களின் தியாகத்தை கேரளா கண்டது. பொதுச்செயலராக இருந்த தோழர் ஜோஷி நேரிடையாக தூக்குமேடை தியாகிகளை காணவந்து பெருமிதமாக அவர்கள் உரையாடிய நிகழ்வும் நடந்தேறியது. சாதாரண அடித்தட்டு தொழிலாளர்கள், விவசாயத் தொழிலாளர்கள், விவசாயிகளுடன் கட்சி இயக்கம் வளர்ந்தது. மலபார் பகுதியில் விவசாயிகள் இயக்கத்தை வழிகாட்டும் செயலில் இ எம் எஸ் இறங்கினார். அனைத்திந்திய கிசான் இயக்கத்தில் அவருக்கு பொறுப்பு வந்தது. 1954ல் கட்சியின் விவசாய அரங்கில் கட்சி கடமைகள் என்ற ஆவண தயாரிப்பில் இ எம் எஸ் பெரும்பங்கை வகித்தார்.

மலையாளிகள்- கேரளா தேசிய இனம் என்பது குறித்து தொடர்ந்த ஆய்வுகளை தந்தவர் நம்பூதிரிபாட். 1952ல் The National Question In Kerla என்பதை எழுதினார் . அய்க்கிய கேரளம் என்கிற இ எம் எஸ் முன்வைப்பு, விசால் ஆந்திரா பற்றி சுந்தரையா, பவானிசென் அவர்கள் வங்காளம் குறித்த ஆய்வுகள் குறித்து தனது கட்டுரை ஒன்றில் பிரகாஷ் காரத் குறிப்பிடுகிறார்.

விடுதலைக்கு பின்னர் இந்தியாவிலேயே காங்கிரஸ் அல்லாத முதல் மாநில அரசு என்பது இ எம் எஸ் தலைமையில் 1957ல் அமைந்தது. மொழிவாரி மாநிலங்கள் அடிப்படையில் கேரளா மாநிலம் நவம்பர் 1956ல் உருவாக்கப்பட்டது. 1957 மார்ச்சில் மாநில தேர்தல் நடந்தது. அரசியல் நிலைத்தன்மை, வளமான கேரளம், சமுக நீதியுடன் கூடிய பொருளாதரா மறுகட்டுமானம் என்ற முழக்கத்தில் கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிட்டது. கட்சியின் பொதுச்செயலர் அஜாய்கோஷ் சுற்றுப்பயணம் செய்து கம்யூனிஸ்ட் கட்சியால் மட்டுமே காங்கிரசை தோற்கடிக்க முடியும் என்ற நம்பிக்கையை அழுத்தமாக எடுத்துரைத்தார்.

CPI 100 இடங்களில் போட்டியிட்டு 60ல் வென்றது. காங்கிரஸ் 124ல் போட்டியிட்டு 43ல் வெற்றி பெற்றது பிரஜாசோசலிஸ்ட் PSP 62ல் போட்டியிட்டு 9, புரட்சிகர சோசலிஸ்ட் RSP 28லும் தோல்வி, முஸ்லீம்லீக் 18ல் போட்டியிட்டு 8யை பெற்றனர். சோசலிஸ்ட் கட்சியின் புகழ்வாய்ந்த பட்டம்தாணுப்பிள்ளை கம்யூனிஸ்ட்களுக்கு ஆதரவு இல்லை என அறிவித்தார். பின்னாட்களில் சோசலிஸ்ட்கள் மத்தியில் குறிப்பாக ஜே பி-

லோகியா மத்தியில் வேறுபாடுகள் ஏற்படவும் இவர் காரணமாக இருந்தார். இ எம் எஸ் தான் முதல்வராக வருவார் என 1957 மார்ச் 23 மாத்ருபூமி -அவருக்கு இருந்த திறமை, செல்வாக்கை குறிப்பிட்டு எழுதியது. மார்ச் 22, 1957ல் சி பி அய் கட்சியின் நிர்வாக குழு எர்ணாகுளத்தில் கூடி இ எம் எஸ் அவர்களை சட்டமன்றகுழு தலைவராகவும் அச்சுதமேனன் அவர்களை துணைத்தலைவராகவும் தேர்ந்தெடுத்தது.

தனிப்பட்ட மத உணர்வுகளில் கட்சி தலையிடாது, கம்யூனிச எதிர்ப்பாளர் உணர்வுகளையும் புரிந்து கொள்ளும் என்ற அறிக்கையை நம்பூதிரிபாட் வெளியிட்டார். 1957 ஏப்ரல் 5 அன்று உலகிலேயே மக்களால் இரகசிய வாக்கெடுப்பு மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் 11 தோழர்களை கொண்ட அமைச்சரவை என்கிற கம்யூனிஸ்ட்கள் ஆட்சி அதிகார மாதிரி ஒன்று உருவானது. நம்பூதிரிபாட் அப்போது 48 வ்யதில்தான் இருந்தார். மகத்தான மனிதனாக அச்சுதமேனன் கருதப்பட்டார். புகழ்வாய்ந்த நீதிமானாக வி ஆர் கிருஷ்ண அய்யர் உருவாகியிருந்தார். சுகாதார அமைச்சர் மேனன் விடுதலை போராட்ட வீரர் மட்டுமல்ல, பெரும் அறுவை சிகிட்சை நிபுணர். கல்வி அமைச்சர் பேரா ஜோசப் முண்டேசேரி ஆசிரியர் இயக்க போராளி, ஏராள புத்தகங்களின் ஆசிரியர், சமஸ்கிருதம் குறித்த விமர்சன கட்டுரைகளை எழுதியவர். சபாநாயகர் சங்கரநாராயணன்தம்பி வழக்கறிஞர், விடுதலை போராட்டவீரர் இப்படிப்பட்ட பல புகழ்வாய்ந்தவர்களின் முகமாக ஆட்சி தெரிந்தது. இந்திய அரசியல் சட்ட எல்லைக்குள் என்ற வரையறையும் புதியவர்களுக்கு இருந்தது.

முதல்வராக பதவியேற்றவுடன் தங்கள் நிலைகளை விளக்கி இ எம் எஸ் உரையாற்றினார். நாங்கள் ஆட்சி நிர்வாகத்தில் முன் அனுபவம் இல்லாதவர்கள். கடும் பிரச்சனைகள் நிலவும் மாநிலத்தை ஆள முன்வருவது என்பதே கடுமையானது. மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆதரவு குரல்கள் வருகிறது. நால்புறமும் நிற்கும் வரையறைகளுக்கு உட்பட்டு நாங்கள் பணியாற்றவேண்டும். கற்பனைக்கு எட்டாத விதிகளும் கட்டுப்பாடுகளும் உள்ள சூழல் பழக்கமாகவேண்டும். நாங்கள் தனிப்பட்ட நபர்களாக இவ்வேலையில் நுழையவில்லை. நிறுவனவகைப்பட்ட ஒன்றில் நுழைகிறோம். நாங்கள் கட்சியின் பிரதிநிதிகள் மட்டுமல்ல, மக்களின் பிரதிநிதிகளாக தேர்ந்தெடுக்கப்படுள்ளோம். .மத்திய காங்கிரஸ் அரசின் வாக்குறுதிகள் பலவற்றை முன் இருந்த காங்கிரஸ் கேரளா மாநில அரசுகள் செய்ய தவறிவிட்டன. அதை நாங்கள் செய்து முடிப்போம். சோசலிஸ்ட்கள், காங்கிரஸ்காரர்கள் ஒத்துழைப்பை கோருகிறோம். We are being elected 'Not as Representative of Party but as Representative of People' என்கிற நம்பூதிரிபாட் உரையின் வரி மகத்தான வழிகாட்டும் வரியாக தொடர்ந்து காப்பாற்றப்பட்டிருந்தால் கம்யூனிஸ்ட் கட்சிகள் மேலும் மக்களுக்கு நம்பிக்கை

தந்திடும் கட்சியாக இருந்திருக்கமுடியும். வெகுஜன இயக்கங்களிலும் பிளவுகள் தவிர்க்கப்பட்டிருக்க முடியும்.

நேரு உட்பட பலர் கம்யூனிஸ்ட் கட்சியின் வெற்றியால் அதிர்ச்சி அடைந்தனர். எர்ணாகுளம் கூட்டம் ஒன்றில் நேரு 'கம்யூனிஸ்ட்கள்' வெளிநாட்டின் செல்வாக்கில் இருப்பவர்கள், பொறுப்பற்றவர்கள் என்ற கடும் விமர்சனங்களை வைத்தார். அரசியல் அமைப்புப்படியும் மத்திய அரசு- மாநில அரசுகள் உண்மையான ஒத்துழைப்பும் இருக்கும்போதுதான் எங்களது கம்யூனிச அரசாங்க சோதனை வெற்றி பெற முடியும் என்ற கடிதத்தை ஏப்ரல் 1957லேயே நேருவிற்கு இ எம் எஸ் எழுதினார். Red Interlude in Kerala என்கிற பிரசுரத்தை கேரளா காங்கிரஸ் வெளியிட்டது. அதில் கம்யூனிஸ்ட்கள் எவ்வாறு வென்றனர் என்பதை ஆய்வு செய்தனர். பல்வேறு பத்ரிக்கைகள் கம்யூனிஸ்ட் கேடர்கள் பல கிராமங்களில் மக்களுடன் என படம் பிடித்தன. நாயர்கள், ஈழவர், தாழ்த்தப்பட்டவர்கள் வாக்குகளால்தான் வெற்றி என சிலர் தெரிவித்தனர். நியுயார்க்டைம்ஸ் பத்ரிக்கை காங்கிரஸ்காரர்களின் திறமையற்ற நிர்வாகம், ஊழல்தான் கம்யூனிஸ்ட்களை ஆட்சிக்குவர உதவியது என எழுதியது. கம்யூனிஸ்ட்களின் தியாகமும் தன்னலமற்ற தொண்டால்தான் மக்கள் ஆதரவை பெறமுடிந்தது என ஏ.கே கோபாலன் கருத்து தெரிவித்திருந்தார்.

1957 துவங்கி ஆட்சியில் இருந்த 28 மாதங்களில் 175 அசெம்பிளி அமர்வுகள் நடத்தப்பட்டன. மக்களுக்கு பயனளிக்கும் முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன.. கல்விஅறிவு பரப்புதலிலும் ஊர்தோறும் நூலக இயக்கத்திலும் ஆசிரியர்கள் முன்நின்றனர். நிலசீர்திருத்தம், குத்தகைதார் உடைமை, விவசாய தொழிலாளர் பாதுகாப்பு ஆகியவற்றிற்கும் கல்விக்குமான சட்டங்கள் மக்கள் ஆதரவை பெற்றன. ஜனநாயக போலீஸ் கொள்கை என்பதும் அறிவிக்கப்பட்டது. குறிப்பாக தொழிற்தகராறுகளில் முதலாளிகளுக்கு ஆதரவாக, நிலத்தகராறுகளில் ஜமின்களுக்கு ஆதரவாக தலையிடுவதை கட்டுபடுத்தியது, 18 தொழில்களில் குறைந்தபட்ச சம்பளம் சட்டத்தை இயற்றியது, பேறுகால சட்டம் போட்டது, மே தினம் சம்பளத்துடன் விடுமுறையானது, காண்ட்ராக் தொழிலாளர்க்கு என 42 லேபர் சொசைட்டி உருவாக்கப்பட்டது போன்றவை ஆட்சி அமுல்படுத்திய சில நல்ல திட்டங்கள். விவசாய சீர்திருத்தங்களில் கோபம் கொண்ட பிரிட்டிஷ் தோட்ட அதிபர்கள், நிலபிரபுக்கள், காங்கிரஸ், பிரஜா சோசலிஸ்ட்கள், ரோமன் கத்தோலிக் பிஷப்கள் என அணிசேர்க்கை போராட்டங்களை உருவாக்கின. மொரார்ஜி தேசாய், டி டி கே, இந்திராகாந்தி போன்றவர்கள் வெளிப்படையாக தங்கள் விமர்சனங்கள் மூலம் ஊக்கப்படுத்தினர். கேரளா சோதனை அனுமதிக்கப்பட்டால் , அந்த தொற்று (Infection) நாடு முழுவதும் பரவிவிடும் என

காங்கிரஸ் கமிட்டியில் பேசப்பட்டதாக தனது பதிவில் அஜாய் கோஷ் தெரிவிக்கிறார். நாடு முழுதும் பிரச்சாரங்கள் முடுக்கி விடப்பட்டன. கேரளாவில் வன்முறை, சட்ட ஒழுங்கை சீர்குலைக்கும் போராட்டங்கள் உருவாக்கப்பட்டன.

1959 ஜூலை31 அன்று நம்பூதிரி அவர்களின் சி பி அய் ஆட்சி 356 விதியை பயன்படுத்தி நேரு சர்க்காரால் கலைக்கப்பட்டது. மக்களின் பெரும்பான்மை பெற்ற மாநில ஆட்சி இந்திய குடியரசில் முதல் முதலாக கலைக்கப்பட்ட நிகழ்வாகவும் அதுவென அமைந்தது. இந்திய அரசியலைமைப்பு சட்டத்திற்கு எவ்வாறு கேரளா நம்பூதிரி அரசாங்கம் குந்தகம் விளவித்தது என குடியரசுதலைவர் ராஜேந்திரபிரசாத் பிரகடனத்தில் தெரிவிக்கப்படவில்லை

மார்க்சின் ஆசியவகை உற்பத்திமுறை என்ற கருத்துருவில் இந்திய மார்க்சியர்கள் பலர் நின்றாலும், இ எம் எஸ் அதிலிருந்து மெல்ல நகர்ந்துவிட்டதாக பிரபாத் பட்நாயக் தனது நம்பூதிரிபாட் குறித்த கட்டுரையில் தெரிவிக்கிறார். பண்டைய அய்ரோப்பிய சமுகம் போல் இங்கு அடிமை முறையில்லை என்பதற்கும் அவர் வருகிறார். அதே நேரத்தில் முதல் மூன்று வர்ணங்களும் நான்காவது சூத்திர வர்ணத்தாரை சுரண்டும் வர்க்கங்களாக இருந்தன என குறிப்பிடுகிறார் இ எம் எஸ். “The defeat of oppressed castes at the hands of Brahminic overlordship, of materialism by idealism, constituted the beginning of the fall of India's civilisation and culture, which in the end led to the loss of national independence” என்கிற வரலாற்று பார்வையை அவர் தந்தார்.. . செவ்வியல் முதலாளித்துவம் போல் அல்லாமல் இந்தியாவில் முதலாளித்துவம் கட்டவிரும்பிய வர்க்கம் வரலாற்றில் தாமதமாகவே நுழைந்தது. நிலபிரபுத்துவத்துடன் சமரசம் செய்துகொண்டே முதலாளித்துவ உறவுகளை சூப்பர் இம்போஸ் செய்தது என இ எம் எஸ் குறிப்பிடுகிறார். இங்கு ஏவுகணை விடும்போதும் பூஜை நடத்திதான் விடுவார்கள் என கேலி பேசினார். நில சொத்து உறவுகள், சாதி- வர்க்கம் பற்றி தோழர் இ எ ம் எஸ் ஆய்வுகளை தந்தார். 1957 முதல்வராக இருந்தபோது நிர்வாக சீரமைப்பு கமிஷனில் மேல்தட்டிற்கு சென்ற பகுதிக்கு இடஒதுக்கீடு தேவையில்லை என்ற கருத்தை அவர் கொண்டிருந்தார். தற்போது வழக்கத்தில் நிலவும் creamy Layer approach அன்றே அவரால் எடுக்கப்பட்டதாகவும் பிரகாஷ் காரத் பதிவு செய்கிறார். இதை ஒட்டிதான் மண்டல் பிரச்சனையின்போதும் சி பி எம் கட்சி நிலைப்பாடாக வந்தது.

நாடாளுமன்ற அரசியல் குறித்தும் இ எம் எஸ் தனது ஆய்வுகளை முன்வைத்தார். முதல் கம்யூனிஸ்ட் மாநில ஆட்சி அனுபவ நினைவுகளை அவர் பகிர்ந்தபோது நாடாளுமன்ற- சட்டமன்றங்களில் பெரும்பான்மை பெறுவதும் வர்க்கப்போராட்ட வடிவங்களே. அதே நேரத்தில் அவை நாடாளுமன்றத்திற்கு வெளியேயான மக்கள் திரள், வர்க்கப்போராட்டத்திற்கு கட்டுப்பட்டவையே என்ற வரையறையை அவர்

தந்தார். சிந்தா வாரஇதழில் அவர் அளித்த பதில்கள் தமிழில் மொழிமாற்றம் செய்யப்பட்டு கம்யூனிஸ்ட் இயக்கமும் நாடாளுமன்ற அரசியலும் என்ற புத்தகமாக 1981ல் வெளிவந்தது. தங்கள் சட்டமன்ற ஆட்சிகள் மூலம் போலீஸ் தொழிலாளர்களை ஒடுக்கிவந்ததை தடுக்க முடிந்ததாக தெரிவிக்கிறார். பலாத்கார புரட்சி நடத்துவதற்கு தேவையான வலுவுள்ள வெகுஜனப்படையை உருவாக்க நாடாளுமன்றம் உட்பட அனைத்து சட்டரீதியான முறைகளையும் அங்கீகரிக்க வேண்டியது பற்றி மார்க்சிசம்-லெனினிசம் வலியுறுத்துவதாகவும் அவர் குறிப்பிடுகிறார். வர்க்க எதிரி என்ற சொல் குறிப்பது உழைக்கும் வர்க்கத்திற்கு எதிரான பொருளாதார நலன்களை கொண்ட முதலாளித்துவ- நிலபிரபுத்துவ வர்க்கங்களையும் அவர்களை அண்டி நிற்பவர்களையும்தான் என விளக்கமளிக்கிறார். அதேபோல் அமைதியான முறையில் சோசலிச மாற்றம் சாத்தியமா என்ற கேள்விக்குரிய பதில் அவ்வளவு எளிதான ஒன்றல்ல என்கிறார். வாய்ப்பு மிக குறைவு. ஆனால் அப்படி எங்குமே நடக்காது எனக்கூறுவது சரியாக இருக்காது என்கிறார்.

1955-56களில் நியுஏஜ் பத்ரிக்கையில் காந்தி குறித்த கட்டுரைகள் பின்னர் 1958ல் மகாத்மாவும் இசமும் என்ற பெயரில் வெளியானது. அதில் இ எம் எஸ் அவர்கள் ஆழமாக காந்தி குறித்து தனது பார்வையை முன்வைத்திருந்தார்.. காந்தியடிகளின் பங்களிப்பும் அதே நேரத்தில் போதாமைகளும் தனிநபர் பார்வையில் மட்டும் வைக்காது தேசிய பூர்ஷ்வாக்களின் எல்லைக்குள் என்ற பார்வையில் இ எம் எஸ் அலசியிருந்தார். அவர் எழுதிய பல்வேறு கட்டுரைகளில் முதலாளித்துவ வர்க்க மேலாதிக்கத்தை அரசியல் பொருளாதார தளங்களில் மட்டுமல்லாது கலாச்சார தளங்களில் எதிர்கொள்வது குறித்தும் விவாதித்தார். கிராம்சி குறித்தும் கூட தனது பார்வையை முன்வைத்தவர் அவர்.

சோவியத்- சீனா சர்வதேச விவாதங்களை கவனித்த தோழர் இ எம் எஸ் போன்றவர்கள் அந்தந்த நாடுகளின் பிரத்யேக தன்மைக்கு ஏற்ப புரட்சிகர இயக்கங்களை கட்டுவது- சோசலிசத்திற்கான போராட்டங்களை முன்னெடுப்பது அவசியம் என்ற முடிவிற்கு வந்தனர். சோவியத்துடன் அல்லது சீனாவுடன் என்ற பார்வையிலிருந்து விடுபடுவது என்ற முடிவிற்கு வந்தனர். சம தூரம் என்ற கொள்கையை கட்சி பிளவிற்கும்- நக்சல் அனுபவத்திற்கும் பின்னர் சி பி எம் கட்சி எடுத்தது. சீனாவில் டெங்ஷியோபிங் காலத்தில் எடுக்கப்பட்ட சீர்திருத்தங்கள் எதிர்மறை விளவுகளை தரும் என்ற கருத்துடன் இ எம் எஸ் உடன்படவில்லை என்கிறார் பிரகாஷ் காரத். சோவியத் வீழ்ச்சியிலிருந்து சோசலிச கட்டுமான படிப்பினைகளை கட்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என இ எம் எஸ் தெரிவித்து வந்தார்

கேரளாவில் வெகுமக்கள் மத்தியில் அரசியல் மற்றும் தத்துவார்த்த உரையாடலை தொடர்ந்து செய்து வந்தவர் இ எம் எஸ் அவர்கள். தனது தாய்மொழியில் ஏராளம் அவர் எழுதி குவித்துள்ளதாக அறிகிறோம். 1942ல் கட்சி சட்டரீதியாக இயங்க வாய்ப்பு பெற்றது. சி பி அய் கட்சியின் முதல் காங்கிரஸ் 1943ல் நடந்தது. அதில் இ எம் எஸ் மத்திய கமிட்டிக்கு தேர்வு செய்யப்படுகிறார். 1953-54ல் நடந்த மூன்றாவது கட்சி காங்கிரசில் அவர் பொலிட்ப்யூரோ உறுப்பினராகிறார். நியுஏஜ் பத்திரிக்கை ஆசிரியராகிறார். கட்சியில் காங்கிரஸ் குறித்த அணுகுமுறை, சீன யுத்த கருத்துவேறுபாடுகள் தீவிரமாக இருந்தன. கட்சியின் 6வது காங்கிரசில் விஜயவாடாவில் மூன்று திட்ட நகல்கள் வந்தன. வலதுசாரி திரிபு- இடது வறட்டு சூத்திரவாதம் தவிர்த்த தனது மூன்றாவது நகல் என தனியான ஒன்றை இ எம் எஸ் முன்வைத்தார். இறுதியாக முடிவிற்கு வரமுடியாமல் அஜாய் சொற்பொழிவின் பொது அம்சங்கள் மட்டும் அரசியல் தீர்மானமாகியது. தோழர் அஜாய் மறைவிற்கு பின்னர் ஒன்றுபட்ட கட்சிக்கு இஎம்எஸ் பொதுச்செயலரும் ஆகிறார். டாங்கே சேர்மன் என்ற சமரசம் ஏற்பட்டது. இ எம் எஸ் ரிவிஷனிசம் எதிர்த்த போராட்டம் என்பது செக்டேரியன் பாதைக்கு கட்சியை அழைத்துசென்று விடக்கூடாது என்பதையும் பேசிவந்தார். கட்சி உடைவு தவிர்க்க முடியாதது என்பதை பல தோழர்கள் அவருடன் விவாதங்கள் நடத்தி ஏற்கவைத்தனர் என்ற பதிவு ஒன்றை தோழர் சுர்ஜித் செய்துள்ளார். கட்சியில் நிலவிய வேறுபாடுகள் காரணமாக இடதுநிலை எடுத்தவர்கள் என அறியப்பட்ட செயற்குழு உறுப்பினர்கள் ராஜினாமா செய்தனர். இ எம் எஸ் செய்யவில்லை, பொதுச்செயலராக தொடர்ந்தார். ஆனால் டாங்கேவின் அகம்பாவமான பேச்சு அவரை பாதித்தது என அவர் குறிப்பிட்டு சொல்கிறார். 'நீர் பொம்மைதான் நாங்கள்தான் கட்சி விஷயங்களை முடிவு செய்வோம்' என்ற டாங்கே பேச்சும், பொதுச்செயலராக இருந்தும் அவரது கட்டுரை ஒன்றை 'கருத்துவேறுபாடு இருக்கிறது என்ற பெயரில்' வெளியிடாத சூழலில் அவர் ராஜினாமா செய்தார். பின்னர் நடந்த தேசிய கவுன்சிலில் டாங்கே பிரிட்டிஷாருக்கு தனது விடுதலைக்கு வேண்டி எழுதிய கடிதம் சர்ச்சையானது. 32 தேசியகவுன்சில் உறுப்பினர்கள் வெளியேறினர். 1964ல் சி பி எம் கட்சி அமைக்கப்பட்டது.

சீனகட்சி சி பி எம் கட்சியை நவீன திருத்தல்வாத கட்சி என முத்திரை குத்தியது. சீனா நிலைப்பாட்டில் இருந்த சிலர் வெளியேறி நக்சல் இயக்கமான சி பி எம் எல் துவங்கினர். இந்திராவின் அவசர நிலை பிரகடன காலத்தில் சி பி எம் கட்சியில் கருத்து வேறுபாடுகள் எழுந்தன. பொதுச்செயலராக இருந்த சுந்தரையா அவர்கள் கொரில்லா போர் முறை, தலைமறைவு போராட்ட கருத்துக்களை முன்வைத்தார். கட்சியில் ஏற்பில்லாமல் போனதால் சுந்தரையா பொதுச்செயலர் பொறுப்பை ராஜினாமா செய்தார். 1977ல் நம்பூதிரி அவர்கள் சி பி எம் கட்சியின் பொதுச்

செயலராக தேர்ந்தெடுக்கப்பட்டு தொடர்ந்து 14 ஆண்டுகள் செயல்பட்டார்.. 1965 இந்திய பாகிஸ்தான் யுத்த காலத்தில் சி பி எம் கட்சியின் பிரதான பரப்புரையாளராக அவர் செயல்பட்டார். மண்டல் கமிஷன் பிரச்சனையிலும் கட்சி நிலைப்பாட்டை விளக்கி பிரசுரம் கொணர்ந்தார். Mahatma and the Ism, Nehru Ideology and Practice, Indian Freedom Struggle , கேரளா குறித்த ஆய்வுகள், இந்தியாவின் சோசலிச பாதை, கம்யூனிஸ்ட்களும் நாடாளுமன்ற ஜனநாயகமும் போன்றவை அவரின் குறிப்பிட தகுந்த முக்கிய ஆக்கங்கங்கள். ஆதிசங்கரின் தத்துவம், இந்திய விடுதலை இயக்க வர்க்கத்தன்மை, கேரளாவில் விவசாய இயக்கம், வர்க்கம்- சாதி- கட்சி, முதலாளித்துவ நீதித்துறை, கிராம்ஸி சிந்தனை போன்ற சில முக்கிய கட்டுரைகளை அவர் எழுதினார்.. அவரது முக்கிய கட்டுரைகள் ஆங்கிலத்தில் இரண்டு வால்யூம்களாக வெளியிடப்பட்டுள்ளன.

ஆரம்பநாட்களில் தோழர் ஜோஷியுடன் இ எம் எஸ்க்கு நெருக்கம் இருந்தது. பின்னர் பொதுச்செயலர் பொறுப்பிலிருந்து தோழர் ரணதிவே விடுவிக்கப்பட்டு அவர் மீது விசாரணை நடந்த கமிட்டியில் 1950ல் இ எம் எஸ் உறுப்பினராக்கப்பட்டிருந்தார். ஆந்திர கொள்கைப்படி அமைந்த மத்திய கமிட்டியிலும் அவர் உறுப்பினர். மாஸ்கோ சென்று கம்யூனிஸ்ட் தலைவர்கள் நால்வர் குழு ஆலோசனை நடத்தி வந்தது. தோழர் ரணதிவே மீது நடவடிக்கை கைவிடப்பட்டதாக இ எம் எஸ் பதிவு செய்கிறார். தோழர்கள் இ எம் எஸ் ராஜேஸ்வரராவ் இடையே கருத்துவேறுபாடுகள் நிலவினாலும் பரஸ்பர மரியாதையுடன் உறவு இருந்த்தாகவும், 1976க்கு பின்னர் இரு கட்சி அரசியல் நிலைப்பாட்டின் நெருக்கத்திற்காக, கூட்டான செயல்பாட்டிற்காக லிங் பத்திரிக்கை ஆசிரியர் இல்லத்தில் சி ஆர்- இ எம் எஸ் சந்திப்பிற்கு ஆசிரியர் எடட்டா நாராயண் ஏறபாடு செய்தார். தொடர்ந்து 6 முறை சி ஆர் அவர்கள் நம்பூதிரிபாட் இல்லம் சென்று கட்சிகளின் இணந்த செயல்பாட்டிற்கான விவாதம், உடன்பாடு வர உதவி செய்தார் என்ற பதிவையும் இ எம் எஸ் செய்துள்ளார்.

எளிய வாழ்க்கையில் நிறைவுபெற்றவராகவும், எந்நேரமும் தளர்வின்றி உழைப்பவராகவும் அவர் இருந்தார். Marxist Scholar என அவர் ஏற்கப்பட்டவராக இருந்தார். விவசாய இயக்கத்திலிருந்து தனது வர்க்கப்போராட்ட களப்பணியை துவக்கினார். காலை 4 மணிக்கே எழுந்து தனது கட்டுரைகளை எழுதும் வழக்கம் அவரிடம் இருந்தது என்பதை ராமச்சந்திரகுஹா தெரிவிக்கிறார். தனது இறுதி நாளில்கூட அவர் தனது உதவியாளரிடம் இரு கட்டுரைகளை டிக்டேட் செய்ததாக அறிகிறோம் நாட்டின் விடுதலையை அடுத்த மூன்று ஆண்டுகள் அவர் தலைமறைவு வாழ்க்கையில் இருந்தார். அவரது தலைக்கு ரூ 5000 என அறிவிக்கப்பட்டிருந்தது. 1967-69 காலத்திலும் அவருக்கு முதலமைச்சர் வாய்ப்பு

கிடைத்தது. எதிர்கட்சி தலைவராக 60-64 மற்றும் 70-77 ஆண்டுகளில் அவர் பணியாற்றினார். சி பி எம் கட்சியின் பொதுச்செயலராக அவர் 1977-92 ஆண்டுகளில் செயல்பட்டு கட்சிக்கு வழிகாட்டினார். வாழ்நாள் முழுதும் உழைத்த, சிந்தித்த தோழர் இ எம் எஸ் மார்ச் 19, 1998ல் தனது 89ஆம் வயதில் அவர் காலமானார். இந்திய மார்க்சியர் முன் வரிசையில் வரலாறு அவருக்கு இடம் கொடுத்துள்ளது.

**References:** . 1. How I Became A Communist- EMS 2. Communist Party Documents

3. Peoples Democracy Articles of Surjit, Ramachandran, Prakash Karat, Patnaik

4. FrontLine - A G Noorani

5. EMS- Syed, Pk Singh

6. Being Brahmin- The Marxist Way

7. இந்தியாவில் சோசலிச பாதை

8. நாடாளுமன்ற ஜனநாயகம்

## தோழர் ஹிரன்முகர்ஜி



ஹிரன் நவம்பர் 23, 1907ல் கல்கத்தா 24பர்கானா பகுதியில் பிறந்தவர். சகோதர சகோதரிகள் பத்துபேர் நிறைந்த பெரிய குடும்பமது. ஆரம்பகல்வி, உயர்நிலை கல்விக்கு பின்னர் கல்கத்தா பிரசிடென்சி கல்லூரியில் ஹிரன் சேர்ந்தார். பின்னர் ஆக்ஸ்போர்ட் கல்வி முடித்தார். அங்கு பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட்களுடன் தொடர்பு ஏற்பட்டது. ஹிரன் காங்கிரஸ், காங்கிரஸ் சோசலிஸ்ட் வழியாக கட்சிக்கு வந்த குறிப்பை நாடாளுமன்றம் தருகிறது.

ஹிரன் பார் அட் லா பாரிஸ்டர் பட்டம்பெற்று 1934ல் இந்தியா திரும்பினார். சர்வபள்ளி டாக்டர் ராதாகிருஷ்ணன் அறிவுரை ஏற்று ஆந்திரா பல்கலைகழகத்தில் வரலாறு அரசியல் விரிவுரையாளராக சேர்ந்தார். பிறகு கல்கத்தா சுரேந்திரநாத் கல்லூரியில் பேராசிரியராக பணிபுரியத்துவங்கினார்.. கல்கத்தா பல்கலைகழக இலாகத்துறை தலைவராக 1940ல் உயர்ந்தார்.. 1936ல் தோழர் பி சி ஜோஷி பிற நண்பர்கள் மூலம் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்கிறார். அகில இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கம், சோவியத்நண்பர்கள் அமைப்புகளில் செயல்படுகிறார். கட்சியில் வங்க மாநில கமிட்டியில் ஆரம்பத்தில் செயல்பட்டுவந்தார். பின்னர் 1958-68களில் தேசிய கவுன்சிலில் செயல்பட்டார். அவர் வங்க தொழிற்சங்க காங்கிரசில் துணைத் தலைவராகவும் இருந்துள்ளார். கல்கத்தா பல்கலைகழக செனட்டில் இருந்தார். இந்திய திட்டகமிஷன் கல்வி குழு உறுப்பினராகவும் இருந்தவர் ஹிரன்.

மார்க்சியம் சார்ந்த எழுத்துக்கள் மூலம் அயராது தோழர்களுக்கு கற்று கொடுத்த மிக முக்கிய தலைவர்களுள் ஹிரனும் ஒருவர். அவர் நடாளுமன்ற உறுப்பினராக இருந்தபோது நேரு உட்பட முக்கிய தலைவர்கள் அவரது உரையை கவனமாக கேட்டனர். அவரது சொற்செறிவும் ஆழமும் மிகுந்த ஆங்கிலம் நேருவை மிக அதிகமாக கவர்ந்தது. அவரது பெங்காலி, உருது மொழியாற்றலும் பிரமிக்க தகுந்தவை என அவரின் உரைகளை கேட்டவர்கள் பதிவு செய்துள்ளனர். நாடாளுமன்றத்தில் இடதுசாரிகளின் மனசாட்சி என அவர் கருதப்பட்டார். .மார்க்சிய மூலங்களுடன் உள்ள

பயிற்சி போலவே அவர் வேத உபநிடத ஸ்லோகங்களை சொல்லக்கூடியவராகவும் இருந்தார் என அறியமுடிகிறது.

அமர்த்யாசென் ஹிரன் படித்த அதே கல்லூரியில் படித்தவர். மாணவர் பருவம் துவங்கி ஹிரன் பற்றி அறிந்தவர். "இந்தியாவின் பின்தங்கிய ஒடுக்கப்பட்டவரின் அருகில் நின்று குரல் கொடுத்தவர் ஹிரன். எதையும் முழுமையாக காரணகாரிய அறிவுடன் பகுத்தறியும் ஆற்றல் கொண்டவர் ஹிரன். சிலநேரங்களில் தனது கட்சியுடன்கூட வேறுபட்டு நிற்கவும் சொல்லவும் தெரிந்தவர். 1947 விடுதலை பொய்யானது என்ற வரையறுப்பில் அவர் மாறுபட்டார். சமஸ்கிருதம் கற்று அதிலும் தேர்ந்தவராக இருந்தார். இந்த மூன்று அமசங்கள் எனக்கு பிடித்தவை" என அமர்த்யா சென் ஹிரன் பற்றி குறிப்பிட்டார். ஆனால் 1959 மே 5 அன்று லோக்சபா விவாதம் ஒன்றில் சமஸ்கிருதம் கட்டாயமாக்கல் என்ற கமிஷன் பரிந்துரையை கடுமையாக ஹிரன் எதிர்த்து உரையாற்றினார். அதன் வளம் என்பது வேறு. கல்விக்கூடங்களில் கட்டாய திணிப்பு வேறு என்றார். உயர்கல்வி- ஆய்வுக்கூடங்களில் பயன்படுத்துவது போதும் என்றார்.

இன்று பி ஜே பி யின் முன்னணி தலைவராகவும் அமைச்சராகவும் உள்ள வெங்கையா நாயுடு தான் விரும்பி படித்த சில புத்தகங்களில் ஒன்று தோழர் ஹிரன் முகர்ஜியின் நாடாளுமன்ற உரைகளின் தொகுப்பு என்கிறார். அதை 'ரெபரன்ஸ்' என்கிற அளவில் குறிப்பிடுகிறார். Calcutta North East என்கிற தொகுதியிலிருந்து முதல் நாடாளுமன்ற தேர்தல் துவங்கி 5வது லோக்சபா 1977வரை 25 ஆண்டுகள் ஹிரன் முகர்ஜி நாடாளுமன்ற உறுப்பினராக இருந்தவர். 1990ல் பத்மபூஷனும் 1991ல் பத்மவிபூஷனும் அவருக்கு வழங்கப்பட்டது. தோழர் சோம்நாத் சட்டர்ஜி சபாநாயகராக இருந்தபோது ஹிரன் நினைவு சொற்பொழிவு ஆண்டுதோறும் நடந்திட ஏற்பாடு செய்யப்பட்டது.அவரின் நூற்றாண்டுகொண்டாட்டத்தின்போது சீரிய அவரது நாடாளுமன்ற பங்களிப்பிற்காக நாடாளுமன்ற வரலாற்றிலேயே முதல்முறையாக நடந்த நினைவு சொற்பொழிவாக வரலாற்றில் இடம்பெற்றது . முதல் சொற்பொழிவு அமர்த்யாசென் அவர்களாலும் , தொடர்ந்து வங்கதேசத்தின் முகமது யூனஸ், பூட்டானின் பிரதமர் ஜிக்மி தின்லே ஆகியோராலும் சொற்பொழிவுகள் தரப்பட்டன.

Nationalism என்கிற கட்டுரை ஒன்றை விடுதலைக்கு முன்னர் ஹிரன் எழுதினார். தேசியத்தின் 150 ஆண்டுகால வரலாற்று தனமைகளை அதில் அவர் விளக்கினார். பிரஞ்சு தேசிய உருவாக்கம், ஜெர்மன் தேசியம், மாஜினியின் இத்தாலி, அப்போது வந்துகொண்டிருந்த நாசிகளின் புத்தகங்களில் காணப்படுபவை, அய்ரிஷ் பேராசிரியர்கள் ஹோமரை அய்ரிஷ்காரர் என நிறுவ முயற்சிப்பது, தாந்தே ஜெர்மன்காரர் என்பது, யேசு யூதர் அல்ல என்று பேசுவது போன்ற முயற்சிகளை அவர்

எடுத்துரைக்கிறார். நாம் நினக்கிறோம் அதனால் தேசியமாக இருக்கிறோம் என சொல்பவர்களும் உண்டு. தேசியம் என்பதை இயற்கையானதுபோல் கருதவேண்டியதில்லை. அது குறிப்பிட்ட சூழலில் உருவாகிறது எனில் உகந்த சூழல் இல்லயெனில் முறியவும் செய்திடும் என்றார் ஹிரன். தேசியம் குறித்த வடிவங்களும் பண்புகளும் முன்னோர்களால் வரலாற்று தன்மையில் நமக்கு வந்து சேர்கின்றன. சமுக பழக்கத்தால் நாம் அவற்றை கேள்விக்கு உட்படுத்துவதில்லை. அன்று இருந்த சூழலில் சோசலிசம் மற்றும் தேசியத்திற்கான உறவுகளை சொல்லி சோவியத் மாதிரியை சுட்டிக்காட்டி அக்கட்டுரையை அவர் முடித்திருந்தார்.

அக்காலகட்டத்தில் பல கம்யூனிஸ்ட்கள் செய்தது போலவே காந்தி குறித்த விமர்சன கட்டுரை ஒன்றை ஹிரன் கல்கத்தா ரிவ்யூவில் 1935ல் எழுதினார். அதில் காந்திக்கு பொருளாதார ஆழம் ஏதுமில்லை எனபது அவரது மைய விமர்சனம். பின்னர் 1958ல் காந்திஜி- ஓர் ஆய்வு என்ற புத்தகத்தை அவர் மீது மிகுந்த மரியாதை உணர்வுடனும் அதே போல் வேறுபடும் தன்மையுடனும் தான் எழுதியதாக அவர் குறிப்பிட்டார். இந்திய விடுதலைப் போராட்ட்டத்தில் காந்திக்கு இணையான பங்கை வேறு ஒருவர் செலுத்திவிட்டதாக சொல்லிவிடமுடியாது என்றார் ஹிரன். ஆனால் அடிப்படையான மாற்றங்களை கொண்டுவரமுடியாத அவரது தோல்விக்கு காரணம் ஒருபோதும் வன்முறை கூடாது என்ற நிலையை அவர் எடுத்ததுதான் என்கிறார். அதேபோல் ஒருமுறை 1975ல் அவர் தனது உரையின்போது காந்தியை சோசலிஸ்ட் என கூறமுடியாது. ஆனால் மனித ஏற்றத்தாழவை ஏற்காத திசையில் அவர் பயணித்தவர் என்றார்.

காங்கிரசில் இருந்த மற்ற எவரையும்விட திட்டமிட்ட பொருளதாரம் என்பதில் நேரு உறுதியாக இருந்தார். இந்தியாவில் சோசலிச சமுதாயம் கட்டவேண்டும் என்கிற இலக்கை காங்கிரஸ் தயக்கத்துடனாவது அங்கீகரித்ததில் நேருவிற்கு பெரும்பங்கு இருக்கிறது என்றார் ஹிரன். முதலாளித்துவ சமுகம் அகற்றப்படவேண்டும் என்பது மிகச் சரியே. ஆனால் அதற்கான போராட்டங்கள் சில்க் உறைகளை அணிந்து மென்மையானதாக இராது என்றார் ஹிரன். Under Crimson colors of communism , Reflections on Marxism, Gandhi Ambedkar and Extirpation of Untouchability, Bow of Burning Gold, Study on Gandhi, Nehru, Rabindranath Tagore போன்ற பல புத்தகங்களை அவர் எழுதியுள்ளார்..

கம்யூனிசம் கிரிம்சான் கலர் என்கிற புத்தகம் பல கட்டுரைகளின் தொகுப்பாக வெளிவந்தது. அதில் அவர் மார்க்ஸ், லெனின், மாவோ, ஸ்டாலின், அஜாய், ஜோஷி, புபேஷ் போன்றவர்களைப் பற்றியும், இந்தியாவில் சோசலிசம், ஜனநாயகமும் சோசலிசமும், மதம், மாணவர் இயக்கம், தலைமையும் தேச கட்டுமானமும் போன்ற கட்டுரைகளை தந்துள்ளார். மார்க்சியமும் மனிதனும் என்கிற கட்டுரை ஒன்றை

ஹிரன் எழுதினார். மகிழ்ச்சி உண்மை என்பன யாவை என அதில் விவாதிக்கிறார். மகிழ்ச்சிக்கு தடையாக இருப்பன யாவை அவற்றை அகற்றிட மார்க்சியம் என அவர் அதில் தீர்வை முன்வைக்கிறார்.

வேலை என்பது நிர்பந்தம் என்றார் மார்க்ஸ். மார்க்சின் சிந்தனைகளை இளம் மார்க்ஸ், முதிர்ந்த மார்க்ஸ் என பிரித்து பொருள் கொள்வது சரியல்ல என்பது ஹிரன் கருத்து. மாற்றம் என்பது புகழ்வாய்ந்த தனி மனிதர் சிலரால் நடைபெறவில்லை என்றும் தலைமுறை தலைமுறையாக மனிதர்களின் கூட்டான முயற்சியின் வெளிப்பாடாகத்தான் அவற்றை நாம் புரிந்து கொள்ளவேண்டும் என்கிறார் ஹிரன். ஓவியம், சிற்பம், கலை யாவும் மனிதனின் சமுகவயப்பட்ட உறவுகளால் முகிழ்த்தவை . மனிதனுடன் மனிதனுக்கு வரவேண்டிய இணக்கம் ஒத்திசைவு என்கிற பார்வையில்தான் ஹிரன் சோவியத் புரட்சியைக்கூட விளக்குகிறார். இதயத்தில் சுடராக கனன்றும், தெளிவான சித்தத்துடன் பலமாக கைஉயர்த்தி மனிதகுல மேம்பாட்டிற்காக செல்லும் இயக்கத்தில் தவறுகள் நேரலாம். கீழே விழலாம். எதிர்காலம் நோக்கிய அதன் மானுட பயணம் அவசியமானது என அறிதல் வேண்டும் என நம்பிக்கை தருகிறார் ஹிரன்.

தோழர் எங்கெல்ஸ் குறித்து ஹிரன் எழுதும்போது அவரின் தனிச்சிறப்புகளையும் அவரது பங்களிப்புகளையும் எடுத்து சொல்கிறார். கம்யூனிஸ்ட்லீக் உருவாக்கம், புரட்சிகர குழுக்களை ஒன்றிணைத்தல், கம்யூனிஸ்ட் அறிக்கை எழுதுவதில் அடிப்படையான வேலைகளை செய்தல், மார்க்சின் மறைவிற்கு பின்னர் சோசலிச இயக்கங்களுக்கு சிறந்த ஆசானாக தொடர்தல், மூலதனம் கொணர்தல் போன்ற பங்களிப்புகளை ஹிரன் வெளிப்படுத்துகிறார். எங்கெல்ஸ் தன்னையே தியாகம் செய்திராவிட்டால் மூலதன முதல்பாகம் வந்திருக்காது என மார்க்ஸ் குறிப்பிட்டதையும் அவர் சொல்கிறார்.. பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் போன்றவர்கள் தனது Freedom and Organisation நூலில் மார்க்ஸ் எங்கெல்ஸ் நட்பு குறித்து வைத்த விமர்சன பார்வையை ஏற்கமுடியாது என ஹிரன் வாதிடுகிறார். கார்ல் காட்ஸ்கிக்கு எங்கெல்ஸ் எழுதிய செப் 12, 1882 கடிதத்தில் இந்தியாவில் புரட்சி வெற்றிபெற்றால் அது நம் எல்லோருக்கும் மிக சிறந்த ஒன்றாக அமையும் என எழுதியதை ஹிரன் குறிப்பிடுகிறார். மார்க்ஸ் மறைந்தபின்பு தனக்கு தரப்படும் முக்கியத்துவம் பெருமைக்குரிய முன்னவர் மறைவிற்கு பின் அடுத்தநிலையில் இருப்பவர்க்கு கிடைப்பது போன்ற ஒன்றே. ஆனால் வரலாறு சரியானதை காட்டிவிடும் என்று மிக அடக்கமாக எங்கெல்ஸ் பேசியதாக ஹிரன் குறிப்பிடுகிறார்.

மார்க்சியர் அல்லாத புகழ்வாய்ந்த எழுத்தாளர்களை ஹிரன் கண்டிப்பாக படித்து எதிர்வினையை தரவேண்டும் என கருதுபவராகவே இருந்தார். அதற்காக பலமணிநேரம் ஒதுக்கக்கூடியவராகவும் இருந்தார். லெனின் குறித்து எச் ஜி வெல்ஸ்

பேசியது பற்றி குறிப்பிட்டுவிட்டு ஹெகல் மகத்தான மனிதர் குறித்து தந்த விளக்கத்தை ஹிரன் தருகிறார். மகத்தான மனிதன் அவன் வாழும் காலத்திற்கான விருப்ப உறுதியை வெளிப்படுத்துபவன். அதை எட்டிடுவதற்கு செயலாற்றுபவன். அதை நடைமுறையில் எட்டவும் செய்வான் . அவன் செய்வதுதான் அக்காலத்தின் இதயமாகவும் சாரமாகவும் இருக்கும். இந்த ஹெகல் கூறும் வரையறை லெனினுக்கு பொருத்தமாக இருப்பதாக ஹிரன் எடுத்துக்காட்டுகிறார்.

அரசியல் என்பது தவிப்பு மற்றும் பற்றுறுதி என கருதினார் ஹிரன். அவர் அவரது ஆங்கில புலமையில் எழுதிய வரிகள் "Politics"fundamentally speaking, calls for passion in its pursuit. And passion, in Latin and the Romance languages, has for its first as meaning `suffering' which none in true political life should wish to escape." அரசியல் லட்சக்கணக்கான ஆண், பெண்களிடமிருந்து உருவாகிறது என்பார் லெனின்.. லெனினுடன் கருத்து மாறுபட்ட ரோசாலக்சம்பர்க் கூட கிளாரா ஜெட்கினுடன் உரையாடியபோது லெனின் சிறப்புகளை மறுக்கவில்லை என்கிறார் ஹிரன். அமெரிக்க எழுத்தாளர் ஹோவர்ட்பார்சன்ஸ் லெனின் மார்க்சியமாகிவிட்டார் என குறிப்பிட்டதை ஹிரன் எடுத்து சொல்கிறார். ஜான்ரீடு லெனின் பார்க்க வசீகரமாக இல்லை. ஆனால் மக்களின் தலைவராக மிளிர்வதில் அவர் அனைவரையும் கவர்ந்துவிட்டார் என குறிப்பிட்டதையும் ஹிரன் சொல்கிறார். மார்டோவ், பிளக்கானோவ், காட்ஸ்கி போன்ற அவர் காலத்தில் தவிர்க்கமுடியாதவர்களாக கருதப்பட்டவர்களுடன் லெனின் மார்க்சியம் காக்கும் போரில் ஈடுபட தயங்கவில்லை என்கிறார் ஹிரன்.

II

மனிதன் தான் நினைத்தபடி வரலாற்றை உருவாக்கிவிடமுடியாது. அதே நேரத்தில் மனிதன் இல்லாமல் வரலாறும் உருவாவதில்லை என மிக நிதானமாக பேசியவர் ஹிரன். சோசலிசம் தவிர்க்கமுடியாது என மார்க்சியர்கள் பேசுவது மனிதகுலத்தின்பாற்பட்ட நம்பிக்கை அடிப்படையில்தான் என்கிறார் ஹிரன். தவறுகளிலிருந்து மீள்வதும், நீண்ட தொடர் போராட்டங்களையும் கொண்ட பாதையது என்கிறார். 1871ல் குகல்மேனுக்கு மார்க்ஸ் எழுதிய கடிதத்தை குறிப்பிடுகிறார் ஹிரன். தொழிலாளர்கள் 50 ஆண்டுகள்கூட சிவில் உலகயுத்தங்களை காணநேரிடும் என்றார் மார்க்ஸ்.. ரேமண்ட் ஆரன் போன்றவர் புத்திஜீவிகளுக்கு மார்க்சியம் அபின்போன்றது என கிண்டல் செய்ததை கடுமையாக விமர்சித்தார் ஹிரன். தேசவிடுதலையின் குரலாகவும் உலகளாவிய சிந்தனையாகவும் சோசலிச சிந்தனைகள் மாறியுள்ளதை அவர் சுட்டிக்காட்டினார்.

புரட்சி என்பது நேர்கோட்டு விஷயமல்ல என்பதையும், கணித வாய்ப்பாட்டு முறையுமல்ல என்றும் ஹிரன் விளக்குகிறார். ஜே டி பெர்னால் சொல்லியதை அவர் எடுத்துக்காட்டுகிறார். Get communism first and argue about it afterwards. கம்யூனிஸ்ட்

இயக்கங்கள் ஒற்றுமைக்காக பேசப்பட்ட புகழ்வாய்ந்த ஒன்றாக இதை புரிந்துகொள்ளலாம். மெர்லி பாண்டி எச்சரித்த ஒன்றையும் அவர் சொல்கிறார். Men get bored with what is constituted and completed. சோசலிச ஆட்சி வந்தால் எல்லாம் நிறைவேறிவிடும் என்கிற மொத்த தத்துவ பார்வைக்கு எச்சரிக்கையாக இது இருந்திருக்கவேண்டும்.

ஸ்டாலின் நூற்றாண்டு குறித்த கட்டுரை ஒன்றை ஹிரன் எழுதியிருந்தார். அதில் ஸ்டாலின் மேற்கோள் ஒன்றையே காட்டுகிறார். Leaders may come and go, only the people are eternal. ஸ்டாலின் மீதான விமர்சனங்கள் இருந்தாலும் அவரின் சிறந்த பங்களிப்புகளை மறைத்துவிடக்கூடாது என கருதினார் ஹிரன். வரலாற்றின் தீர்ப்புகளை மட்டுமே தான் அமுல்படுதியவனாக இருந்தேன் என ஸ்டாலின் பேசியதை அவர் சொல்கிறார். கட்சி செயலாராக இருந்தபோது பி சி ஜோஷி வேடிக்கையாக பேசியதை ஹிரன் குறிப்பிடுகிறார். லெனினுக்காக மார்க்ஸ் எழுதினார். ஸ்டாலினுக்காக லெனின் எழுதினார், நமக்காக ஸ்டாலின் எழுதியிருக்கலாம் . அனகோலி பிரான்ஸ் சொல்வார். கடவுளுக்கு சிக்கல் இருக்கிறது. அவரின் விருப்பங்களை மனிதன் மூலம் அவர் நிறைவேற்ற வேண்டியுள்ளது. ஹிரன் இது சோசலிசத்திற்கும் பொருந்தட்டுமே என்பார். எம் என் ராய் நமது காலத்தில் மகத்தான மனிதன் ஸ்டாலின் என சொல்லிவிட்டு Great man need not be Good Man என்றார். லெனினுக்கு பின்னர் சோவியத் கட்டுமானத்தில் ஸ்டாலின் தந்த பங்களிப்பை குறைத்துவிடக்கூடாது என்பதில் ஹிரன் அழுத்தம் தந்தார்.

டிராட்ஸ்கியை ஹிரன் விமர்சித்தாலும் டிராட்ஸ்கி, புகாரின் எழுத்துக்கள் வெளி உலகிற்கு கிடைக்காமல் போகிவிடக்கூடாது என கருதினார். அவர்களின் எழுத்துக்களும் கிடைக்கப் பெறவேண்டும் என்றார். **NO UNPERSONING** என்கிற அழகான பார்வையை ஹிரன் முன்வைத்தார். ஸ்டாலின் கூட்டுமுடிவுகள் என்பதிலிருந்து விலகி சென்றார் என்றபோதும் அனைத்திற்கும் ஸ்டாலினை காரணமாக்குவதையும் ஏற்கமுடியவில்லை என்றார் ஹிரன். அவ்வாறு செய்யும்போது அவரை சுற்றியிருந்தவர்கள் நடவடிக்கை பரிசீலிக்கப்படாமல் போகிவிடுகிறது என்பது அவரது கருத்தாக இருந்தது. ஸ்டாலின்தான் இன்றைய லெனின் என்கிற பேச்சை மிகோயின் தரவில்லையா என்கிறார் ஹிரன். சோசலிச சமுகம் ஸ்டாலின், மாவோவை வழிபாட்டிற்குரியவராக மாற்றியது என்பது அதன் maturity யை காட்டவில்லை என்ற விமர்சனம் ஹிரனிடம் இருந்தது. அதே நேரத்தில் வரலாற்றில் பங்களிப்பு செய்தவர்களை **unpersoning** இல்லாமல் செய்வதும் ஏற்புக்குரியதல்ல என்பதும் அவர் கருத்து.

ஜனநாயகமும் சோசலிசமும் என்கிற கட்டுரை ஒன்றை ஹிரன் எழுதினார். அறியாமைமிக்க மக்கள் கோடிக்கணக்கில் இருந்தாலும் அவர்களிடம் செயல்படும்

பொதுப்புத்தியை அவர் எடுத்துக்காட்டுகிறார். நமது நாடு 4000 ஆண்டுகளின் கலாச்சார பாரம்பரியங்களை சுமந்து நகர்கிறது என நேரு குறிப்பிட்டதை அவர் தொட்டுக்காட்டுகிறார். உழைக்கும் மக்களை ஆளும்வர்க்கமாக உயர்த்தும் புரட்சியின் முதல் நடவடிக்கை ஜனநாயகத்தின் வெற்றி என கம்யூனிஸ்ட் அறிக்கை பேசியதை அவர் குறிப்பிடுகிறார். பாராளுமன்றவாத விமர்சனம் என்பது நிறுவனங்களை ஒழிப்பதில் அல்ல அவைகளை செயற்படும் கருவியாக மாற்றுவது என்கிறார் ஹிரன். சோசலிசம் என்பது சுதந்திரத்தை கட்டுப்படுத்துவதல்ல. சுதந்திரம் என்கிற பெயரில் மனிதவிரோத செயல்கள் நடவாதவண்னம் காப்பது என்று விளக்குகிறார். மேற்கு ஜனநாயகம் பணமூட்டைகளின் அதிகார சேட்டைகளும் துஷ்பிரயோகமும் என விமர்சித்தார் ஹிரன்.

இந்தியாவில் சமத்துவ சிந்தனை மரபுகள் என்கிற கட்டுரை ஒன்றை அவர் எழுதினார். இந்தியாவில் பொருள்முதல்வாத சிந்தனை வளர்ச்சியை அதில் எடுத்துரைக்கிறார். சார்வாகர், லோகாயதம், நியாயம், வைசேசிகம், சாங்கியம், புத்தம், ஜைனம் பற்றி அவர் பேசுகிறார். இவ்வாழ்வை துறத்தல் என்பதுமட்டுமே கொண்டாடப்பட்டு அமுலாகியிருந்தால் இந்திய வரலாறு இவ்வாறு இருந்திருக்காது என்கிறார். வேதம் அன்றாட வாழ்வின் பல அமசங்களை பாடுகிறது. சூரியஉதயம், பெண்முகம், தாய்மை, சொர்க்கம், வானம், பூமி, தண்ணீர், தாவரம் செடிகள், கடவுள், பிரபஞ்சம் அனைத்திலும் அமைதி அதன் பாடுபொருட்களாக இருந்தன. உபநிடதங்களும் உலகளாவிய விஷயங்களை பேசின. உலகை துறத்தல் என்பது மட்டுமே இந்தியாவின் தனித்தன்மை என்பது சரியல்ல என விளக்குகிறார் ஹிரன்.

T.S எலியட் DAMYATA, DATTA, DAYADHWAN (Self Control, Charity, Compassion) என்பதை பிரஹதாரண்ய உபநிடத்திலிருந்து எடுத்துக்கொண்டதாக ஹிரன் தெரிவிக்கிறார். பண்டைய இந்தியாவில் pessimism passivity இல்லை என்கிறார். மகாபாரதம்கூட வறுமையை மிக மோசமாக சித்த்ரித்து death by degrees என சொல்கிறது. மார்க்கண்டேய புராணம் எனக்கு ராஜ்யமோ, சொர்க்கமோ, மறுபிறப்போ விருப்பமில்லை. அனவரின் துன்பமில்லாத வாழ்க்கைதான் விருப்பம் என்றது. ரிக்வேதம் தனக்கு மட்டும் உணவு சமைப்பவனை பாவி என்றது. வசிஷ்டர் வட்டி பாவம் என சொன்னதாக ஹிரன் குறிப்பிடுகிறார். இவற்றில் நாம் விஞ்ஞான சோசலிச சிந்தனைகளை தேடிக்கொண்டிருக்கமுடியாது எனவும் எச்சரிக்கிறார் ஹிரன்.

அமிர்குஸ்ரு, அரவிந்தர் என பலரின் மேற்கோள்களை ஹிரன் எடுத்தாள்கிறார். கதரியக்கத்தை(Ghadar party) துவங்கிய லாலா ஹர்தயால் மார்க்சை ரிஷி என அழித்து அறிமுகப்படுதியதையும் அவர் தெரிவிக்கிறார். விவேகானந்தர் Gospel of Equality பேசியது, காந்தி, தாகூர் பேசியவை என பலவற்றை சுட்டிக்காட்டுகிறார் ஹிரன். சுபாஷ் தனது Indian Struggleல் சம்யவாத் என பாசிசம்- கம்யூனிசம் கலப்பு இணைப்பு என

பேசியதையும் அவர் சொல்கிறார். நேருவின் பாபியன் சோசலிச பார்வையை விவரிக்கிறார்.

கம்யூனிஸ்ட் கட்சியின் பொன்விழா சாட்சி- சுய நம்பிக்கை என்கிற கட்டுரை ஒன்றை அவர் எழுதியிருந்தார். இந்தியாவில் மார்க்சிய சிந்தனைகள் விடுதலை இயக்க சூழலில் பரவியதை அவர் எடுத்துக்காட்டுகிறார். ஆக்ஸ்போர்ட் நண்பர்கள் செல்வாக்கும் ரஜினிபாமிதத் வகுப்புகள் கட்டுரைகளும் தங்களைப் போன்றவர்களை ஈர்த்ததையும் அவர் சுட்டிக்காட்டினார். ஹிரன்முகர்ஜி ஆந்திரா பல்கலைக்கழகம் வந்தடைந்தவுடன் அங்கு இருந்த ஏராள சோசலிச புத்தகங்களை கற்க வாய்ப்பு கிடைத்தது. டாக்டர் ராதாகிருஷ்ணன் பெருமுயற்சியால் புத்தகங்கள் வாங்கப்பட்டிருந்தன. பிறகு வந்த சி ஆர் ரெட்டி என்பார் அனைத்தும் ஆபத்தானவை என அவற்றை அப்புறப்படுத்தினார். டாக்டர் ராதாகிருஷ்ணன் தடுக்கவில்லையெனில் ஹிரன்முகர்ஜியும் வெளியேற்றப்பட்டிருப்பார்.

1964 கட்சி உடைகின்ற தருணத்தில் அதற்காக மிகவும் வேதனைப்பட்டவர்களில் ஹிரனும் ஒருவர். படிண்டா- ஜலந்தர் காலத்தில் கட்சி ஒன்றுபடவேண்டும் என்பதற்காக மெயின்ஸ்ட்ரீம் உள்ளிட்ட பத்திரிக்கைகளில் அவர் கட்டுரைகள் எழுதினார். குற்றங்களை கண்டுபிடித்து பேசுவது எளிதானது. இருவரும் கூட்டாகவோ, தனித்தனியாகவோ மக்களின் விருப்பங்களை நிறைவேற்ற எங்கே தவறிப்போனோம் என்பதை கண்டறிந்து சரி செய்துகொள்ளவேண்டும் என்றார். 1964 உடைவிற்கு பின்னரான 1967 நக்சல்உடைவு பற்றியும் அவர் குறிப்பிடுகிறார். மாவோ, செகுவாரா என்பவர்கள் பேசியதை துண்டுதுண்டாக பார்த்துக்கொண்டு எடுத்துக்காட்டி சில இளைஞர்கள் செயல்பட்டுவருவதையும் அவர் விளக்குகிறார். காங்கிரஸ், ஜனதா என்கிற அனுபவங்களையும் கணக்கில்கொண்டு இரு கட்சிகளும் தங்களை நேர் செய்துகொள்ளவேண்டும் என்கிற வேண்டுகோளை அத்தருணத்தில் ஹிரன் வைத்தார். கம்யூனிஸ்ட் கட்சிகள் ஒன்றுபட வேண்டிய அவசியத்தை அவர் வலியுறுத்தி வந்தார். இரத்த சம்பந்த சகோதரர் மத்தியில் கருத்து வேறுபாடு வரலாம், நாம் யாருக்காக போராடுகிறோமோ அவர்களின் நலனை சேர்ந்துள்ள அனுபவங்களை கணக்கில் கொண்டு மனங்களை ஒன்றிணக்க வேண்டும் என்றார் ஹிரன்.

கட்சியின் வளர்ச்சிகட்டங்களை அசைபோடுகிறார் ஹிரன். ஜோஷி போன்றவர் அக்காலங்களில் வெளியேற்றம் குறித்து வேதனைப்பட்டார் . ஜோஷி, அஜாய், புபேஷ் என்கிற மூன்று ஆளுமைகளை அவர் தனது கட்டுரைகளில் பதிவிடுகிறார். ஜோஷி எங்கு இருக்கிறாரோ அங்கு இயக்கம் தோன்றிவிடும் என்கிறார். கட்சியில் அவ்வப்போது ஏற்பட்ட மாற்றங்களை அவர் தனது மொழி ஆளுமையில் வெளியிடுகிறார். As often happens in our movement's history, swings of the policy's pendulum

were found too undialectical to bring out desired results என எழுதினார். ஜோஷி காலம் பிரில்லியண்ட் சாப்டர் என அவர் எழுதியிருந்தார். கட்சி வாழ்வில் ஏற்படும் மாற்றங்கள் தீர்ப்பிடல்கள் குறித்தும் அவர் அனுபவமொழியை பதிவிடுகிறார். Experience which involves bad judgments helps arrival at right judgment. There is never full stop to things, however, and the struggle reflects life with its anomalies, its contradictions, all to be tackled in good time, courageously but not too precipatedly… கட்சி பொறுப்பில் பணியாற்றக்கூடிய அனைவருக்கும் தேவைப்படும் அறிவுரையிது.

Reflections and Recollections 1952-77 என்பதில் : "The Left, however, for all its faults and factions and errors is no minor factor in India. There is no reason for it to fear it has reconciled to being a poor relation of the rich `vested interests' parties now dominant in the national scene" என்கிற நம்பிக்கையை அவர் எடுத்துரைத்தார். தனது 94 வயதிலும் அவர் 2002 குஜராத்படுகொலைகள் குறித்து அவர் மிகுந்த கவலையை வெளிப்படுத்தி குடியரசுத்தலைவருக்கு கடிதம் எழுதினார்.

எவர் குறித்தும் அதீத மதிப்பீடுகளை உருவாக்கி தீர்ப்பு தருவதை சரியானதாக அவர் கருதவில்லை "I hesitate to judge people too sternly: one of my favourites is the Somerset Maugham character who said he did not fancy one particular job, namely, `God's' on Judgment Day." தனக்கும் கட்சிக்கும் உள்ள உறவைப்பற்றி அவர் குறிப்பிட்டுக்கொள்ளும்போது I have made my home only as an adopted child in the Communist Party and the movement around it. I might have wandered but this has been my home என அவர் தெளிவுபடுத்தினார். கல்கத்தா மருத்துவமனை ஒன்றில் தனது 97வது வயதில் ஜூலை 30 2004ல் அவர் மறைந்தார். ஹிரனின் மார்க்சிய எழுத்துக்கள் இளம் தலைமுறையினரை சென்றடைய காத்துக்கொண்டிருக்கின்றன.

தோழர் ஜகன்னாத் சர்கார்



பீகார் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முன்னோடி தலைவர் தோழர் ஜகன்னாத். 1919ல் பிறந்து தனது 20ஆம் வயதில் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து 22 வயதிலேயே அப்பிரதேச அமைப்பு கமிட்டியின் செயலராக ஆக்கப்பட்டவர். தோழர்கள் பவானிசென், பி சி ஜோஷி, சோமநாத் லாகிரி, சர்தேசாய் ஆகியோரால் பயிற்றுவிக்கப்பட்டவர். இந்திரதீப் சின்ஹா, யோகேந்திர சர்மா, சதுரானன் மிஸ்ரா போன்றவர்களுடன் சேர்ந்து வளர்ந்தவர். பீகாரில் பல்லாண்டுகள் மாநில கமிட்டிக்கு செயலராக இருந்து இயக்கத்தை வீச்சாக வளர்த்தவர்.

ஜகன்னாத் அவர்களின் தந்தை டாக்டர் அகில்நாத் சர்கார். பாட்னா மெடிக்கல் காலேஜ் மருத்துவர். 1920 களில் ஒரிஸ்ஸா, பாட்னா மக்களுக்கு மருத்துவம் பார்த்தவர். பூரி பகுதியில் அவர் இருந்தபோது , தாய் பினாபன் பூரி ஜகன்னாதர் தேர் இழுத்து வந்த பிறகு பெற்ற மகவிற்கு ஜகன்னாத் என பெயரிட்டனர். அவர் பூரியில் செப்டம்பர் 25, 1919ல் பிறந்தார். பின்னர் குடும்பம் பாட்னா நோக்கி நகர்ந்தது . ஜகன்னாத் எம் ஏ படிக்கும்போது கம்யூனிஸ்ட் கட்சி தொடர்பு ஏற்பட்டது. படிப்பை தொடர்வதா, கட்சிக்கு போவதா என்ற குழப்பம் தெளிந்து பட்டமேற்படிப்பை விடுவிட்டு ஜோஷி அறிவுரையை ஏற்று கல்கத்தா சென்றார்.

பீகாரில் காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியில் பலர் இருந்த்னர். பின்னர் அதில் தொடர முடியாத நிலையில் 1939ல் பீகாரில் கம்யூனிஸ்ட் கட்சி துவங்கப்பட்டது. கல்கத்தாவில் பவானிசென் தோழர் ஜகன்னாத்திற்கு மார்க்சிய பயிற்சி கொடுத்தார். அங்குதான் அவர் நிருபென் சக்கரவர்த்தி போன்றவர்களுடன் பழக வாய்ப்பு கிடைக்கிறது. நிருபென் தனது சக தோழருடன் ஹிஜ்ரி சிறையிலிருந்து ஏறி குதித்து தப்பி வந்த காலமது. சோமநாத் லாகிரிதான் ஜகன்னாத் அவர்களுக்கு தலைமறைவு கட்சி வாழ்க்கையின் நுணுக்கங்களை கற்பிக்கிறார். இரண்டாம் உலகப்போர் சூழல் சோவியத் பங்கேற்பையடுத்து கட்சி நிலைப்பாடு மாறியதால் அவர்களால்

பயிற்சியை தொடரமுடியாத சூழல் ஏற்பட்டது. பீகார் திரும்பியவுடன் 1941ல் கட்சி கூடி பயிற்சி பெற்ற ஜகன்னாத்தான் பிரதேச கமிட்டி (provincial organizing Committee-POC) செயலர் என்றனர். 1942வரை இப்பொறுப்பில் அவர் இருந்தார்.

தோழர் சர்தேசாய் அவர்கள் மத்திய கமிட்டி பிரதிநிதியாக பீகார் வரும்போதெல்லாம் தொழிலாளிவர்க்க போராட்டம் அதில் பங்கேற்க வேண்டிய அவசியம் குறித்து பேசுவார். சர்தேசாயால் கவரப்பட்ட ஜகன்னாத் கிரிதி நிலக்கரி தொழிலாளர் மத்தியில் பணிபுரியத் துவங்கினார். அவர்களது வாழ்வியல் தன்மைகள், போராட்டங்களின்போது அவர்களது மனப்பாங்கு, அவர்களது மதரீதியான எண்ணங்கள் அவை இயக்கங்களில் பிரதிபலித்து கொடுத்த அனுபவங்கள் பலவற்றை பீகாரின் நிலக்கரி தொழிலாளர் இயக்கத்தில் அவர் கற்றார். தனது சில வறட்டுத்தனங்களை களைய அவை உதவியதாகவும் ஜகன்னாத் பின்னாட்களில் தெரிவிக்கிறார்.

இந்திரதீப் சின்ஹா, யோகந்தரமிஸ்ரா, சதுரானன் மிஸ்ரா, சந்திரசேகர் சிங், அலி அஷ்ரப், சுனில் முகர்ஜி போன்ற பீகாரின் புகழ்வாய்ந்த பல தலைவர்கள் அவரின் சமகாலத்தவர்களாகவும் பீகார் கம்யூனிஸ்ட் கட்சி வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றியவர்களாகவும் விளங்கினர். இந்திரதீப் பின்னாட்களில் விவசாய தொழிலாளர் இயக்கத்திலும் நியுஏஜ்ஜின் எடிட்டராகவும் உயர்ந்தவர். இந்திரதீப், யோகேந்தர், ஜகன்னாத் பீகார் குழுவினர் 1948களில் தோழர் ரணதிவே தலைமையிலான மத்திய கமிட்டியை கல்கத்தாவில் அடிக்கடி சந்தித்து ஆலோசனை பெறுவர். கட்சி அதிதீவிர நிலைப்பாடு எடுத்த ஆண்டுகள் அவை. ரயில்வே வேலைநிறுத்தம் இந்திய புரட்சிக்கான அஸ்திவாரம் என ரணதிவே இத்தோழர்களிடம் பேசியதாக அனில் ரஜிம்வாலே தெரிவிக்கிறார்.

நாடுமுழுதும் கம்யூனிஸ்ட் தலைவர்கள் கைதானது போலவே ஜகன்னாத் உட்பட கட்சித்தலைவர்கள் கைதுப்படலம் நடந்தேறுகிறது, தலைமறைவு டெக்னிக் அப்போது ஜகன்னாத்திற்கு உதவவில்லை. அவர் கழிப்பறையில் பதுங்கி உள்ளதை போலீஸ் மோப்பம் பிடித்து அவரை சிறைக்கு அனுப்புகிறது. மத்திய கட்சியில் தோழர் ராஜேஸ்வரராவ் புதிய தலைமை பீகார் கட்சியை மாற்றுகிறது. அந்நேரத்தில் பொறுப்பிலும் சிறையிலும் இருந்த ஜகன்னாத் புதிய மாற்றத்தில் இடம் பெறவில்லை. பின்னர் அஜாய் தலைமையில் மத்திய கட்சியில் மாற்றம் வருகிறது, பீகாரில் மீண்டும் மாநில செயலராக 1952-56 காலத்தில் ஜகன்னாத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அதேபோல் 1967-78 காலத்திலும் தொடர்ந்து மாநில செயலராக அவர் செயல்படுகிறார்.

காங்கிரசிற்கு பீகாரில் சோசலிஸ்ட்கள் கர்ப்பூரிதாகூர் , மண்டல் தலைமையிலும் கம்யூனிஸ்ட்கள் ஜே எஸ் (ஜகன்னாத் சர்கார் தனது சக தோழர்களால் JS என அழைக்கப்படலானார்) இந்திரதீப் தலைமையிலும் கடும் சவால்களை தந்தனர். 1967ல் காங்கிரஸ் அல்லாத கூட்டணி மந்திரிசபை பீகாரில் அமைந்தது, இந்திரதீப் அதில் வருவாய்துறை அமைச்சராக இடம் பெறுகிறார். வறட்சி பாதித்த பல்வேறு மாவட்டங்களின் நிவாரண பணிகளை அவர் முடுக்கி விடுகிறார். கட்சியின் செயலர் என்ற வகையில் கட்சி முழுமையையும் வறட்சி நிவாரண பணிகளில் ஈடுபடுத்தி மிக முக்கிய பங்களிப்பை ஜே எஸ் செய்கிறார்.

தோழர் ஜே எஸ் சிறந்த மேடை பேச்சாளர் அல்லர். ஆனால் கமிட்டிகளில் அழுத்தமாக நிதானமாக மற்றவர்கள் ஏற்க தகுந்தவாறு கருத்துக்களை முனவைப்பவர் என சக தோழர்களால் அங்கீகரிக்கப்பட்டவராக இருந்தார். இன்று கட்சியின் மார்க்சிய சிந்தனையாளராக கல்வி இலாகாவிற்கு பொறுப்பாக இருக்கும் அனில்ரஜிம்வாலே குடும்பம் ஜே எஸ் குடும்பத்திற்கு மிக நெருக்கமானது, அனில் தந்தை ரஜிம்வாலாவும் ஜே எஸ் அவர்களும் இணைந்துதான் இந்தி தினசரி ஜனசக்தியை பீகாரில் கொணர்ந்தனர். தோழர் ஜேஎஸ் அவர்களுக்கு பல்கலைகழக பேராசிரியர்களின் தொடர்பும் பாட்னா புத்திஜீவிகளின் தொடர்பும் இருந்தது. லேபர் இன்ஸ்டிட்யூட்கள், ஆய்வு மையங்கள் துவங்கிட இத்தொடர்புகள் அவருக்கு உதவின. ஜோஷி அதிகாரி ஆய்வு மையம் அமைவதில் அவர் பெரும் பங்காற்றினார்.

Science and people, Social Science Probings போன்ற ஆய்விதழ்கள் வர அவர் உத்வேகமூட்டினார். மார்க்சிய வரலாற்றறிஞர்கள் தேவிபிரசாத், ஆர் எஸ் சர்மா போன்றவர்கள் அதன் ஆசிரியர் குழுவில் இருந்தனர். அப்போது கட்சியின் மூத்த தலைவர்களுள் ஒருவராக இருந்த நீலம் ராஜசேகர ரெட்டி (குடியரசு தலைவராக இருந்த நீலம் சஞ்சீவ ரெட்டி சகோதரர்) அவர்களும் அப்பத்ரிக்கைகளை தீவிரமாக கொண்டு செல்லவேண்டிய அவசியத்தை பேசிவந்தார். இக்கட்டுரை ஆசிரியர் (பட்டாபி) ஒருநாள் முழுவதும் தோழர் ராஜசேகர் ரெட்டி அவர்களுடன் இருந்து கட்சி பத்ரிக்கைகள் party Life குறிப்பாக Social Science Probings பற்றி விவாதிக்க வாய்ப்பு கிடைத்தது. Social Science Probingsயை சி பி எம் கட்சி சார்ந்த Social scientistவிட அற்புதமாக கொண்டுவரவேண்டும் என்ற வேட்கையை தோழர் ராஜசேகர் வெளிப்படுத்தினார்.

1970 களின் மத்தியில் ஜெயபிரகாஷ் நாராயண் முழுபுரட்சி இயக்கம் பீகாரில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. கொள்கைபூர்வமாக அதை எதிர் கொள்ளவேண்டிய பொறுப்பு பெருமளவு பீகார் கட்சிக்கு வந்தது. அதை திறம்பட தனித்து நின்று கட்சி செய்து வந்தது. அதில் அப்போது மாநில செயலராக இருந்த

தோழர் சர்கார் பெரும்பங்காற்றினார். Intellectual Fora பலவற்றில் பங்கேற்று ஜேபி இயக்கத்தின் எதிர்அரசியல் அம்சங்களை சுட்டிக்காட்டி விமர்சித்து வந்தார். ஒருமுறை டெல்லி ஜவஹர்லால் பல்கலை அமர்வு ஒன்றில் 1974ல் அவர் உரையை தனிமைப்படுத்தும் முயற்சியை டிராட்ஸ்கியவாதிகள், மார்க்சிஸ்ட் கட்சியினர், ஜேபி ஆதரவாளர்கள், ஜனசங்கத்தினர் செய்தனர். ஆனாலும் ஜே எஸ் தனது கருத்துக்களை அழுத்தமாக உறுதியுடன் எடுத்து வைத்த காட்சியை அனில் ரஜிம்வாலே தனது கட்டுரை ஒன்றில் பதிவு செய்துள்ளார். அவரது நேரிய வகைப்பட்ட விவாதமுறை பின்னர் பாராட்டுகளைப் பெற்றது.

பேராசிரியர் டாக்டர் அருண்குமார் தோழர் ஜே எஸ் தெருக்களிலும், செமினார்களிலும் பேசிய ஆழமான கருத்துக்களால் தான் ஈர்க்கப்பட்டதாகவும், ஜே எஸ், இந்திரதீப் வகுப்புகளால் தனது இளமைக்காலத்தில் பயன்பெற்றதாகவும் குறிப்பிடுகின்றார். ஜேஎஸ் எங்களைப் போன்றவர்களுக்கு Comrade Intellectual ஆக இருந்தார் என்கிறார். நகைச்சுவை உணர்வுடன் பெரிதாக வாய்விட்டு சிரிக்க தெரிந்த கம்யூனிஸ்ட்டாக நண்பர்கள் மத்தியில் அவர் இருந்தார் என்கிற பதிவும் உள்ளது. இளைஞர்களுடன் தொடர்ந்து பல்வேறு புத்தகங்கள் குறித்து விவாதிப்பவராகவும், அவர்கள் மூலம் அவர்கள் அறிமுகப்படுத்தும் best sellersகளை படிப்பவராகவும் அவர் இருந்தார்.

தொழிலாளர்களும் நமது சமூகத்தில் ஓர் அங்கம்தான் – மற்றவர்களிடம் உள்ள பலம் பலவீனங்கள் அவர்களிடமும் இருக்கும் என தெரிந்து தொழிலாளி வர்க்க மத்தியில் பணிபுரியவேண்டும் என்றார். ஆரம்பத்தில் பீகாரில் சாதி குறித்த தனி கருத்தரங்கங்கள் வேண்டாம் என கருத்து அவர் தெரிவித்திருந்தபோதிலும், தனது தவறை அவ்வாறு வேண்டும் என யார் தெரிவித்தனரோ அவர்களிடம் சென்று திருத்திக்கொள்வதாக அவர் வெளிப்படையாக தெரிவித்தார். ஜே எஸ் போன்றவர்களுக்கு 1960 களின் சூழல் லோகியாவின் caste struggle என்கிற கருத்தாக்கம் எதிர்த்து Class struggle என்பதை தொழிலாளர்களிடமும் வெகுமக்கள் மத்தியிலும் கொண்டு செல்லவேண்டியிருந்தது. ஆனாலும் இந்தியாவின் சமூக எதார்த்தம் என்ற புரிதல் மார்க்சியத்திற்கு விரோதமானதல்ல என்ற கருத்திற்கு அவர் வந்தார்.

அவர் பழங்குடிகள் மத்தியில் பணியாற்றியவர். அவர்கள் குறித்து எழுதியவர். அவர்களுக்கான கோரிக்கைகள்- கூட்டங்கள்- இயக்கங்கள் கண்டவர். அவர்களுடன் விவாதித்து அவர்கள் உணர்வுகளுக்கு மதிப்பளித்து இயக்கத்தை முன்கொண்டு செல்லவேண்டும் என அறிவுறுத்தியவர். கல்கத்தா சாந்திநிகேதனில் இதற்கென பல்வேறு ஆய்வாளர்களின் அமர்வுகளுக்கு துணைநின்றவர்.

சர்கார் அவர்களை டெல்லி மையத்தில் பணியாற்ற கட்சி அழைத்தது. எப்போதும் பரபரப்பான பீகார் வெகுஜன இயக்க கட்சி சூழலிருந்து மாறுபட்ட, நிதான கதியில்

செயல்படும் கட்சி மைய சூழல் தனக்கு பொருந்தவில்லை என்றார் ஜகன்னாத். பீகாரிலும் ஜே பி இயக்கம், மண்டல் எழுச்சிகள், சோவியத் வீழ்ச்சி ஆகியவை தொடர்ந்து கட்சி பலவீனப்படத் துவங்கியது. தோழர் ஜே எஸ் ராஜேஸ்வரராவிற்கு பின்னர் பொதுச்செயலராக வருவார் என்கிற நிலை இருந்தது. அவர் நோய்வாய்பட்டு தீவிர அரசியல்பணிகளை மேற்கொள்ளமுடியாத சூழல் எழுந்தது. ஆனால் அவர் தனது அறிவுப்பயணத்தை இறுதிவரை கைவிடவில்லை. தன்னை சந்திக்க வருகின்ற தோழர்களிடம் இந்திய அரசியல் போக்குகள், கட்சியின் நிலைப்பாடுகள், சீனகட்சியில் ஏற்பட்டுவரும் மாற்றங்கள் குறித்தெல்லாம் விவாதிப்பவராக இருந்தார். நிதானமாக மற்றவர்களை ஏற்க செய்திடும் விதத்தில் அவரது கருத்துக்கள் அமையும். தேசிய கவுன்சில் கூட்டங்களில் அவர் உரையாற்றும் போது உன்னிப்பாக கவனிப்போம் என்றார் பார்வதிகிருஷ்ணன்.

தாகூர்மீது அவருக்கு ஈர்ப்பு இருந்தது. தாகூருடன் சேர்ந்து எடுத்துக்கொண்ட போட்டோ ஒன்றை தான் தவறவிட்டதற்காக அவர் வருந்தினார். சாந்தி நிகேதனில்கூட போய் இருந்துவிடலாம என்ற எண்ணம்கூட அவருக்கு இருந்ததாக அவரை அறிந்த பெர்லின் ஹம்போல்ட் பேராசியர் சுனில் சென்குப்தா தெரிவிக்கிறார். அழகியல் உணர்வுகளை ஜே எஸ் தாகூரிடமிருந்து கற்றதாக அவர் தெரிவிக்கிறார்.

II

மார்க்சிய மூல நூல்களை கற்ற கம்யூனிஸ்ட் தலைவர்களுள் ஜே எஸ் ஒருவர். கிராம்ஸியைகூட அவர் கற்றதாக அறிகிறோம். கம்யூனிஸ்ட் அல்லாதவர்களின் புத்தகங்களையும், கம்யூனிஸ்ட் எதிர்ப்பாளர்களின் புத்தகங்களையும் கூட அவர் படிக்க தவறியதில்லை. எல் கே அத்வானியின் சுயசரிதையையும் அவர் படித்தார். பீகாரின் சாதி, உபசாதி அம்சங்களை வரலாற்று பார்வையில் அவர் தெரிந்துகொண்டார். புராண இலக்கியங்களையும் அவர் படித்தார். மதுபானி ஓவியங்களுக்கு பின்னால் உள்ள சாதி, மத கண்ணீர் கதைகளை எடுத்துரைப்பவராக இருந்தார். அவரை நாங்கள் சமுகவியலராகவே பார்த்தோம் என கல்கத்தா ஸ்காட்டிஷ் கல்லூரியில் பேராசிரியராக இருந்த தருண் சன்யால் தெரிவிக்கிறார்.

பீகாரில் சி பி அய் அக்டோபர் 20, 1939ல் 19 தோழர்களுடன் துவக்கப்பட்டது. இரண்டுமாத காலத்தில் டிசம்பர் 1939ல் ஜகன்னாத் கட்சியில் இணைக்கப்படுகிறார். புகழ்வாய்ந்த மிக உயர் பதவிகளில் இருந்த தாய்வழி, தந்தைவழி குடும்ப மூத்தவர்கள் ஜகன்னாத், அவரது சகோதரர் கட்சி வாழ்க்கையினால் பெரிதும் கவலைக்கு உள்ளாயினர். அவரை ICS ஆக உயர் பதவியில் பார்த்திட தந்தை கனவு கண்டார். 200 புத்தகங்கள் இதற்காகவே தருவிக்கப்பட்டு வீட்டில் பயிற்சிக்காக வைக்கப்பட்டிருந்தன. ஆனால் மகன் ஜகன்னாத் கல்கத்தா கட்சிப்பணி என சென்றார். தாய் மனநோய்க்கு உள்ளானாதாக அறிகிறோம்.

1964ல் கட்சி பிளவின் போது சேதாரம் இல்லாமல் பீகார் கட்சியை காத்து நின்றது, கட்சியில் லட்சக்கணக்கான உறுப்பினர்களை சேர்வதற்குரிய சூழலை உருவாக்கியது 1967ல் காங்கிரஸ் அல்லாத மந்திரிசபை உருவாக்கம், 1970 நிலமீட்பு இயக்கத்தில் பல தோழர்களை கட்சி பலிகொடுத்து ஆயிரக்கணக்கான மக்கள் பயனுற நிலப்பகிர்வு, ஜேபி இயக்கம் எதிர்த்த கொள்கை போராட்டம், கட்சி திட்டத்தை மாறிவந்துள்ள உலக, இந்திய நிலைகளுக்கேற்ப மாற்றி அமைக்கவேண்டும் என்கிற உட்கட்சி போராட்டம் , பழங்குடி மக்கள் இயக்கம், புத்திஜீவிகளை கட்சிபால் கொணர்தல் போன்றவற்றில் அளப்பரிய பங்கை செலுத்தியவராக தோழர் ஜகன்னாத் சர்கார் செயல்பட்டவர். தலைவராக உயர்ந்த நிலையிலும் தன்னை தினந்தோறும் புதிய விஷயங்களில் update செய்து கொள்வது- தெரியாத விஷயங்களை தெரிந்து கொள்வது என்பதற்கு அவர் முன்னுதாரணமாக இருந்தார். Sharp scientific intellect, Marxist outlook, Comradely behaviour- இதுதான் தோழர் ஜகன்னாத் என்று எழுதினார் தோழர் பரதன்.

தோழர் ரணதிவே கட்சியின் பொதுச்செயலராக இருந்த தருணத்தில் தோழர் ஜகன்னாத்தின் ராமகிருஷ்ண மிஷன் தொடர்புகளை பி டி ஆர் கண்டித்தார். ராமகிருஷ்ண மிஷன் சார்ந்த அவ்யானந்த மகராஜ் என்பார்தான் ஜகன்னாத் அவர்களுக்கு முதலில் மார்க்சிய நூல் ஒன்றை படிக்க தந்தார் என்பது தோழர் ரணதிவேவிற்கு தெரியாது என்கிறார் ஜே எஸ். ரால்ப் பாக்ஸ் எழுதிய லெனின் குறித்த நூல் அது என தனது நினைவில் சொல்கிறார். ராஞ்சி சிறையில் ஜே எஸ் இருந்தபோது அவர் கேட்கும் புத்தகங்களை கொண்டு போய் கொடுப்பது மற்றும் சிறைகளை மாற்றியதால் குடும்பம் அனுபவித்த துயர்களை அவரது துணவியார் நிலிமா சர்கார் பகிர்ந்துகொண்டுள்ளார்.

ஜே எஸ் செவ்வியல் இந்துஸ்தானி இசைப்பிரியர். பண்டிட் ரவிசங்கர் மற்றும் உஸ்தாத் அலிகான் ஜுகல்பந்திதனை ரசித்து அவர் உரையாடுவார் என அறியமுடிகிறது. தனக்கு எவ்வளவு வேலை தொந்திரவு இருந்தாலும் தனது ஆடைகளை தானே துவைத்து உலர்த்தும் பழக்கமுள்ளவராக இருந்தார் என அவருடன் பழகிய பாலிடெக்னிக் ஒன்றின் பேராசிரியர் சுப்ரதாகோஷ் தெரிவிக்கிறார். அவரின் பொறுமை, சுயகட்டுப்பாடு எங்களை வியக்கவைக்கும் என்கிறார். லியுஷோஷியின் How to be a Good Communist என்பதன் உருவமாக அவரை நாங்கள் உணர்வோம் என்கிறார்.

அவரது துணவியாரின் சகோதரரும் இவரால் கட்சி வாழ்க்கைக்கு ஈர்க்கப்பட்டிருந்தார். அவர் மூலம் மொகித்சென் சுயசரிதை, மாவோ பற்றி அவரது டாக்டர் எழுதிய Private Life of Mao, காஸ்ட்ரோ நினைவுகள் குறித்தும் அவர் படித்து சக தோழர்களுடன் விவாதித்தார் என அறிகிறோம். 1968 செக்கோஸ்லோவியா மீதான சோவியத் படையெடுப்பை அவர் ஏற்கவில்லை.. விமர்சனம் இருந்தது என்கிறார் சமித் கோஷ்.

ஜெர்மானியர் ரசோஜின் என்பார் எழுதிய வேத இந்தியா நூல் குறித்து சக தோழர்களுடன் விவாதித்ததாக அறியமுடிகிறது. காயத்ரி மந்திரம் பற்றி ஆர்வமூட்டும் ஆய்வுப் பார்வை அவரிடம் இருந்தது. விஸ்வாமித்திரர் ஆர்யர் அல்லாதவர்களை ஆர்யர்களாக மாற்றி inclusive societyக்கு முயற்சித்ததாகவும் வசிஸ்டர் ஆரியர் தூய்மைவாதம் பேசியதாகவும் அவரது கட்டுரை பேசுகிறது. தாகூர், நஸ்ருல், ஷேக்ஸ்பியர் மேற்கோள்கைகளை அவர் உரையாடலில் பயன்படுத்துவார் என டாக்டர் அர்ஜித் தாஸ் குப்தா தெரிவிக்கிறார். டால்ஸ்டாயின் போரும் சமாதானமும் குறித்து தன்னிடம் அவர் உரையாடியதாக அவர் எழுதுகிறார்.

தோழர் S G சர்தேசாய் அவர்களுடன் ஜே எஸ் அவர்களுக்கு நெருக்கம் இருந்தது. சர்தேசாய் உறவினர் G S சர்தேசாய் என்கிற வரலாற்று அறிஞருடன் ஜே எஸ் அவர்களின் மாமா ஜாதுநாத் நெருங்கிய நண்பராக இருந்தார். குடும்ப பழக்கமாகவும் இருந்தது. சர்தேசாயும், ஜகன்னாத்தும் கட்சி விஷயங்கள் குறித்து கடித போக்குவரத்து செய்திருப்பதாக அறியமுடிகிறது அவை பராமரிக்கப்பட்டு வெளிப்பார்வைக்கு வந்தால் மேலும் இயக்க ஆய்விற்கு உதவியாக இருக்கலாம். ஜே எ ஸ் சர்தேசாயின் கடிதம் ஒன்றை (ஜனவரி 29, 1989) சுட்டிக்கட்டுகிறார். சர்தேசாய் சோவியத் நிலை குறித்தும் கம்யூனிஸ்ட் இயக்கம் குறித்தும் அப்போது மெயின்ஸ்ட்ரீமில் கட்டுரைகள் எழுதிவந்தார். அக்கடிதத்தில் அவர் வெளிப்படையாக விமர்சனம் வைத்துக் கொண்டதை நம்மால் பார்க்க முடிகிறது. “During the Emergency, Dange once referred to Indira as revolutionary democrat in a meeting of the National council, and not one of us got up to protest against such nonsense” என்றும் அதே போல் EMS காங்கிரஸ் எதிர்ப்பில் எந்த சாத்தானுடனும் கூட்டு என பேசிவந்ததை விமர்சித்தும் அக்கடிதம் முடிகிறது.

ஆங்கில பேராசிரியை அர்ஜித் அவர்களுக்கு ஜேஎஸ் ஒருமுறை பேட்டி அளித்தார். அதில் வங்க கம்யூனிஸ்ட் (அவரது சமகால) முன்னோடிகள் ஜோதிபாசு, புபேஷ்குப்தா, இந்திரஜித் குப்தா ஆகியோர் லண்டனில் பிரிட்டிஷ் தலைவர்கள் ஹாரிபாலிட், பென்பிராட்லி, ரஜினிபாமித்த் செல்வாக்கில் கம்யூனிஸ்ட்களாக மாறி வந்ததை குறிப்பிடுகிறார். அவர்களிடத்து ஹாரால்ட் லாஸ்கியின் செல்வாக்கும் இருந்தது என்கிறார். தனக்கு பின்னர் அடுத்த ஆண்டில் 1940ல் ஜோதிபாசு கட்சிக்கு வந்ததாக தெரிவிக்கிறார். நிருபன், ஜகன்னாத் போன்ற நாங்கள் லண்டன் செல்வாக்கில் இல்லாமல் இங்கு பவானி, லாஹிரி செல்வாக்கில் மார்க்சியம் கற்றதாக தெரிவிக்கிறார்.

கட்சி பிளவு குறித்த கேள்விக்கு ஜோதிபாசு அதற்காக பெருமளவு இறங்கி வேலை செய்யவில்லை என்றும் அஜாய், புபேஷ், ஜோதி மூவரும் மற்றவர்களை Convince செய்துவிடலாம் என்றே பேசி வந்தனர் என்கிறார். ஆனால் 1964 சி பி எம்

உருவானபோது ஜோதிபாசு அதன் பொலிட்ப்யூரோவில் இடம் பெற்றது irony முரண் என்கிறார். ஜோதிபாசு மறைவுடன் சகாப்தம் ஒன்று முடிவுற்றதாக கருதமுடியுமா என கேட்டபோது அவர் almost (ஏறக்குறைய) என ஒரு வார்த்தையில் பதில் தருகிறார். ஜோதிபாசு அவர்களின் நிலசீர்திருத்த நடவடிக்கைகள் குறித்து பாராட்டுக்களை அவர் தெரிவித்தார்.

ஜே எஸ் நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் எழுதியதாக அறிகிறோம். அவற்றில் பல தொகுக்கப்படவில்லை என்கிறார்கள் சில முக்கிய கட்டுரைகளை தொகுத்து Selected Essays கொணர்ந்துள்ளனர். விடுதலை போராட்டத்தின் பன்முகம், இந்திய விடுதலை 50 ஆண்டுகள், காந்தி, நேரு, சோசலிசம், சோசலிச மார்க்கம், மதசார்பின்மை, இஸ்லாம், வங்க விடுதலை, சாதியின் வேர்கள், பழங்குடிகள், தேசபக்தி, ஜனநாயகம், மத்தியத்துவ ஜனநாயகம், பீகாரில் கம்யூனிஸ்ட் இயக்கம், நக்சலைட் இயக்கம், ஜேபி இயக்கம், காயத்ரி மந்திரம், நிலக்கரி தொழிலாளர் இயக்க அனுபவம், தோழர்கள் டிமிட்ரோவ், சர்தேசாய், ராஜேஸ்வரராவ் போன்றவை சில முக்கிய கட்டுரைகள்.

காந்தி குறித்த பார்வையில் கம்யூனிஸ்ட்களின் தவறு குறித்த சுயவிமர்சனத்தை அவர் முன்வக்கிறார். காந்தியடிகளின் உயிர்த்தியாக 50 ஆண்டுகள் ஒட்டி 1998ல் அவர் கட்டுரை ஒன்றை எழுதுகிறார். பிரிட்டிஷாரை பின்வாங்க செய்து வெளியேற்றும் போராட்டத்தில் -அகிம்சை முறையில் மக்களை திரட்டிய போராட்டத்தில் அவர் உறுதியாக இருந்தார் என்கிறார். He never surrendered to British rule. Inch by inch he made the rulers to retreat. That was that Indian people saw. And the understanding of the communist in this regard was rather puerile - கம்யூனிஸ்ட்கள் புரிதல் சிறுபிள்ளைத்தனமாக இருந்தது என கடும் சுயவிமர்சனத்தை வைக்கிறார். அவரின் அகிம்சை , ஒத்துழையாமை எனும் ஆயுதங்கள் இன்றும் பொருத்தமானவை என்கிறார்.

நேரு அவர்களின் நூற்றாண்டு ஒட்டி 1989ல் கட்டுரை ஒன்றை அவர் எழுதினார். இந்துஸ்தான் டைம்ஸ் வெளியிட்டது. நேரு இந்திய விடுதலைப்போரை பரந்த ஏகாதிபத்திய எதிர்ப்பு போராட்டமாகவும் புரிந்துகொண்டவர். நமது உயர் கலாச்சாரம் குறித்து கொண்டாடும் அதே நேரம் வழக்கொழிந்தவைகளை விமர்சித்தவராகவும் அவர் இருந்தார். அரசியல் விடுதலை என்பது பொருளாதார விடுதலையாக மாறும்போது தான் வெகுமக்கள் முன்னேற்றம் என்பதையும் அவர் புரிந்தவராக இருந்தார். தனது கொள்கைகள் மூலம் சோசலிசம் என அவர் பேசினாலும் வளர்ந்தது முதலாளித்துவம்தான் என ஜே எஸ் நிதான பார்வையுடன் நேருவை அணுகுகிறார். காங்கிரசின் வலதுசாரி பிரிவிற்கு அவர் சில நேரங்களில் பணிந்துபோனார் என்ற பலவீனத்தையும் ஜே எஸ் எடுத்து வைக்கிறார். நேரு மதசார்பின்மை, ஜனநாயக நிறுவனங்களை தூக்கிப்பிடிப்பவராக பொதுவாக இருந்தார் என்ற மதிப்பீட்டையும்

வைக்கிறார். இன்று அவை சோதனைக்கு உள்ளாகி வருகின்றன என்கிற கவலையையும் அக்கட்டுரையில் பதிவு செய்திருந்தார்.

வங்கதேச விடுதலையை அவர் வரவேற்றார். அதே நேரத்தில் தனது எச்சரிக்கையையும் அவர் வெளியிட தவறவில்லை. ஒருநாட்டில் ஜனநாயகம் என்பதை பிற நாடு ஒன்றின் படையெடுப்பின் மூலம் கொணரமுடியாது. அங்குள்ள மக்களின் உணர்வுகள் மூலம் ஜனநாயகம் கட்டப்படவேண்டும் என்றார். பாகிஸ்தான் இஸ்லாமிய ஜனநாயகம் என பேசியபோது அது குறித்து தனது கருத்தை அவர் வெளியிட்டார். Theocracy மதஅடிப்படையிலான என்பதை theo- democracy ( democracy limited by the words of God) கடவுளின் வார்த்தைக்குள் நின்று அடங்கும் ஜனநாயகம் என்பதாக அவர்கள் பேசிவருகின்றனர் என்றார்.

இந்தியாவானாலும், உலகில் எந்த நாடாக இருந்தாலும் மதத்தின் பெயரால் ஆட்சி என்றால் முதலில் அங்கு பலியாவது மக்களின் இறையாண்மையும் ஜனநாயகமும்தான் என்றார். மதசார்பற்ற அரசு என்பதை அவர் உயர்த்தி பிடித்தார். மதம் மக்களை மீட்பதற்கு பதில் அவர்களது மூளையில் முறிவை உருவாக்கிவிடுகிறது என்றார். மதத்தில் அதன் நம்பிக்கைதான் ஆக உயர்ந்தது. உலகியல் வாழ்வில் சட்டங்கள்தான் மேலானது. ஆனால் எங்கள் மதநம்பிக்கைக்கு சட்டங்கள் கட்டுப்படவேண்டும் எனும்போது சமுகம் பதட்டம் அடைவதாக அவர் கருதினார்.

பேராசிரியர் வாசி அகமது என்பாருக்கு அவர் இந்தியாவில் சாதிகளின் வேர்கள் குறித்து எழுதினார். வேத உபநிடதங்கள், புத்தம், மனு, பகவத்கீதை, மாக்ஸ்முல்லர் என மேற்கோள்களை காட்டுகிறார். அவரின் புரிதல் விரிவை நாம் உணரமுடிகிறது. புத்தம் வளர்ந்தபோதிலும் சாதிபழக்கம் முறியடிக்கப்படவில்லை. சைதன்யர் போன்றவர்களை பற்றியும் அவர் அதில் குறிப்பிடுகிறார். இந்திய சமூக சூழலில் கம்யூனிஸ்ட்கள் நடத்திய போராட்டங்களை அவர் தெரிவிக்கிறார். இந்திய அரசியல் சட்டம் பல தடைகளை உடைத்திருந்தாலும் சாதியின் சமுக தாக்கம் செல்வாக்குடன் நிற்கிறது என்றார்.

கர்பூரிதாகூர் முன்மொழிவுகள் பிற்பட்ட வகுப்பாரை கைதூக்கி சமுகத்தில் சமநிலைக்கு உயர்த்திடத்தான். புதிய சாதி ஒன்றின் மேலாதிக்கத்திற்கு அல்ல என அவர் தெளிவு படுத்தினார். முஸ்லீம்கள் சிலர் பீகாரில் பிற்பட்ட முஸ்லீம் மோர்ச்சா என துவங்கியபோது அவர்களுக்கு அறிவுரை நல்கினார். இஸ்லாமில் இல்லாத சாதி பழக்கத்தில் சிக்கி தங்களது ஒற்றுமையை சிதைத்துவிடக் கூடாதென்றார். இதற்காக குரானின் பல பகுதிகளை அவர் மேற்கோள் காட்டினார்.

வளர்ச்சி குறித்தும் பழங்குடிகள் அதை எவ்வாறு பார்க்கிறார்கள் என்பது குறித்தும் அவர் கட்டுரைகள் தந்தார். அவர்களின் காலம் காலமான வாழிடம் , காடுகளின் பொருளாதாரம் , பழக்கங்கள் ஆகியவற்றின் அழிவாக வரும் வளர்ச்சியை அவர்கள் எதிர்ப்பதை நாம் புரிந்து கொள்ளவேண்டும் என்றார் ஜே எஸ். அவர்கள் சமுகத்தில் தனிசொத்துரிமை, அதன் அடிப்படையில் உற்பத்தி, சந்தை பொருளாதாரம் என்பதெல்லாம் கிடையாது என்பதையும் நாம் உணரவேண்டும் என்கிறார்.

கிரிட்டிக் எனும் இதழில் 2001ல் சோவியத் வீழ்ச்சி, சோசலிச கருத்தாக்கம் குறித்து அவர் நீண்ட கட்டுரை எழுதினார். ”In earlier times, the communists of india thought a non peaceful path or civil war unavoidable. The second congress of CPI in 1948 reiterated this path. But experiences of this path proved its fruitlessness and the communists slowly reoriented themselves for such transmission thro peaceful path. Emergence of CPI as the second largest party in the parliament in 1952 and its securing majority in Kerla in 1957 strngthened confidence in peaceful path" வன்முறை இல்லாத அமைதி வழியில் மாற்றத்தின் சாத்தியப்பாடு பற்றி பேசுகிரார்.

நக்சல் இயக்கம் பற்றி பேசும்போது “A group of communists broke away from the mainstream communist movement and dogmatically advocated non peaceful path and civil wars. They advanced slogans like power flows thro the barrel of Gun, Not by ballots but by bullets. They tried to build liberated areas" என்கிற விமர்சன் பார்வையை வைக்கிறார். அரசின் அங்கங்கள் எனப்படும் ராணுவம், அதிகாரவர்க்கம், போலீஸ் மற்றும் பலபடியிலான நிர்வாகம் போன்றவை மக்கள் நலனுக்கு உகந்த வகையில் பயன்படுத்தப்படவேண்டிய அவசியம் குறித்து விவாதிக்கிறார். இடதுசாரி ஜனநாயக மாற்று அரசாங்கம்- அரசியல் அமைப்பு சட்டத்தில் உரிய மாற்றங்களுடன் என்பது குறித்தும் சொல்கிறார்.

1990ல் அவர் எழுதிய கட்டுரை ஒன்றில் வெளிப்படையாக கட்சி செய்து கொள்ளவேண்டிய மாற்றம் குறித்து விவாதிக்கிறார். ஜனநாயக மத்தியத்துவம் என்பதை அவர் விவாதத்திற்கு எடுத்துக் கொள்கிறார். “ If we relax the existing rule of democratic centralization and permit the minority to express its views publicly, it will facilitate such discussion on a very wide scale. If the CPI relaxes the rules in the aforesaid manner, it may encourage other parties based on Marxism to do likewise. In a way it will help such parties to come close leading to ultimate unity of the communist movement, a goal that we cherish. The rigidities of the existing rules obstruct the process” என சோதிக்கப்படவேண்டிய மாற்றம் ஒன்றை கட்சியில் கோரினார் ஜே எஸ்.சிறுபான்மை கருத்துடையவர்களுக்கான இடம் என்பதை அவர் வற்புறுத்தினார்.

உடல்நிலை பாதிக்கப்பட்ட நிலையில் ஜகன்னாத் சர்கார் அவர்கள் ஏப்ரல் 8 2011 அன்று பாட்னாவில் மறைந்தார்.

Ref:

Articles by Various Professors and Party Leaders about Jagannath sarkar

Selected Essays of Jagannath

# விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்



வங்கத்தின் அர்பலியா கிராமத்தில் 24 பர்கானா மாவட்டத்தில் மார்ச் 21 1887ல் பிறந்தவர் எம் என் ராய். தந்தை தீனபந்து பட்டாசார்யா- தாய் வசந்திகுமாரிதேவி. மாணவர் பருவத்தில் விவேகானந்தா எழுத்துக்களால் ராய் ஈர்க்கப்படுகிறார். பின்னர் இரகசிய புரட்சிகர நடவடிக்கைகளில் இருந்த பிரம்பந்த உபாத்யாய், வங்கப்பிரிவினை இயக்கம், அனுசீலன் சமிதி பர்ன் கோஷ் போன்றவர்களின் தொடர்பு ஏற்பட்டது. அவர் புரட்சிகர இயக்கம் நோக்கி நகர்ந்தார்.. அனுசீலன் சமிதியில் அரவிந்த கோஷ் உடன் நட்பு ஏற்பட்டது.

1906ல் ஜதின்முகர்ஜியை தனது அரசியல் குருவாக ராய் ஏற்கிறார். புரட்சியாளர்களுக்கு ஆயுதம் பெறுவதற்கும் குண்டு தயாரிப்பதற்கும் நிதி பெரும் பிரச்சனையாக இருந்ததால் அவர்கள் கஜானா கொள்ளை என்பதில் ஈடுபட்டனர். நரேந்திரநாத்தாக இருந்த ராய் 1907 டிசம்பரில் முதல் அரசியல் நிதி கொள்ளையில் சங்கிரிபோடா எனும் இடத்தில் ஈடுபட்டார். அப்போது அவர் தேசிய கல்லூரி மாணவர். கைது செய்யப்பட்டாலும் அவர் விடுவிக்கப்பட்டார்.1 908-09ல் ஜதினால் உருவாக்கப்பட்ட ஜுகாந்தர் குழுவில் அவர் முக்கிய இடத்தைப் பெற்றார். 1910-15 ஆண்டுகளில் தொடர்ந்த அரசியல் கொள்ளைகளில் ஈடுபட்டார். 1915ல் பெலியகட்டா கொள்ளையில் கைதாகி பிணையில் இருந்தபோது தலைமறைவானார்.

பெர்லின் புரட்சிகர குழு மூலமாக இந்திய புரட்சியாளர்களுக்கு ஆயுதம் வழங்க ஜெர்மனி ஏற்பாடு செய்யும் என்ற செய்தி பரவுகிறது. நரேன் ஏப்ரல் 1915ல் ஜாவா செல்கிறார். அங்கு தன்னை சி ஏ மார்டின் என பெயரிட்டு கொள்கிறார். அங்கிருந்து இரண்டே மாதங்களில் பயன் ஏதுமில்லாததால் இந்தியா திரும்பிவிடுகிறார். பிறகு ஜப்பான் சென்று ராஷ்பிஹாரி போஸை சந்திக்கிறார். அந்த சந்திப்பும் தனக்கு பயனளிக்கவில்லை என்ற நிலையில் டோக்கியோவில் சன்யாட்சனை சந்திக்க முயற்சிக்கிறார். ஜெர்மன் தூதுவர் மூலம் பீகிங்கில் நிதியை ஒப்படைக்க முடிந்தால் ஆயுதங்கள் தரமுடியும் என சன்யாட்சென் தெரிவித்தார்.

1915 செப்டம்பரில் பலாசோர் பகுதியில் போலீசார் மோதலில் ஜதின் கொல்லப்படுகிறார் என்பதை ராய் அறிகிறார். அவரது ஆயுத பரிமாற்றப் பயணமும் வெற்றி பெறாத

நிலையில் அவர் மார்டின் என்ற மத ஆய்வாளர் வேடத்தில் 1916ல் சான்பிராசிஸ்கோ செல்கிறார். அங்கிருந்து கலிபோர்னியா செல்கிறார். அங்கு ஸ்டான்போர்ட் பல்கலைகழகத்தில் தனது ஜுகாந்தர் குழு தோழரின் சகோதரர் தனகோபால் முகர்ஜியை சந்திக்கிறார்.. அங்குதான் தனகோபால் அவருக்கு மனபேந்திரநாத் ராய்(எம் என் ராய்) என நாமகரணம் சூட்டுகிறார். அப்பெயர் வரலாற்றில் நிலைத்தது. பின்னாட்களில் தனது துணவியாக வரப்போகிற அப்போது மாணவியாக படித்துவந்த எவ்லின் ட்ரெண்ட் அறிமுகமாகிறார். இருவரும் நியுயார்க் செல்கின்றனர். மணம் புரிகின்றனர், 1926வரை சேர்ந்து செயல்படுகின்றனர்.

நியுயார்க்கில் சோசலிஸ்ட்கள் கூட்டம் ஒன்றில் லாலா லஜ்பத்ராய் பேசுகிறார் என்பதை தெரிந்து எம் என் ராய் அக்கூட்டத்தில் பங்கேற்கிறார். லாலா லஜ்பத் உரை ராய்க்கு நிறைவைத் தரவில்லை. ஆனாலும் உறவுகளை வளர்த்துக் கொண்டார். நியுயார்க் பொது நூலகத்தில் மார்க்ஸ் புத்தகங்களை படிக்க துவங்கினார். அமெரிக்க அதிபர் வில்சனுக்கு ராய் எழுதிய பகிரங்க கடிதம் அவருக்கு பாராட்டை தந்தது. போரின் பொருளாதார விளைவுகள் குறித்து ராய் பேசியிருந்தார். கொலம்பியா பல்கலைகழக வளாகத்தில் ராய் கைதாகும் நிலை ஏற்படுகிறது. அவர் தப்பி மெக்சிகோ செல்கிறார்.

மெக்சிகோ அரசியல் சூழல்களை பார்த்து பத்திரிக்கைகளில் கட்டுரைகள் எழுதினார். மார்க்சிய செல்வாக்கு முழுமையாக அவரிடம் பற்றாத சூழலில் ஸ்பானிஷ் மொழியில் இந்தியா குறித்த பிரசுரங்கங்களை 1918-19களில் கொணர்ந்தார். பின்னர் அங்கிருந்த இடதுசாரிகளுடன் இணைந்து எல் சோசலிஸ்டா என்கிற பத்திரிக்கை துவங்கப்படுகிறது. மெக்சிகோ அரசாங்கத்திடம் ஏற்பட்ட நல்லுறவு அப்போது மெக்சிகோ அதிபராக இருந்த கரான்சா நட்பு வட்டத்திற்கு ராயை அழைத்துச் சென்றது. எல் ஹெரால்டொ எனும் பத்திரிக்கையின் ஆங்கில பதிப்பில் அவரது கட்டுரைகள் வெளியாயின. அவர் மெக்சிகோ சோசலிஸ்ட் கட்சியின் பொதுச் செயலராகிறார். கம்யூனிஸ்ட் அகிலத்தின் பிரதிநிதியாக 1919ல் மெக்சிகோ வந்த மிஷேல் பரோடின் ராயின் நண்பராகிரார். ஹெகலிய தத்துவங்களை பரோடின் ராயிற்கு அறிமுகப்படுத்துகிறார். கம்யூனிஸ்ட் அகிலம் (மூன்றாவது அகிலம்) துவக்க மாநாட்டின் முடிவுப்படி சோசலிஸ்ட்கள் கட்சிப்பெயரை கம்யூனிஸ்ட் கட்சி என மாற்றி செயல்படுவது என்பதை ஏற்று மெக்சிகன் கட்சியும் மெக்சிகன் கம்யூனிஸ்ட் கட்சியாகிறது. ராய் அதை அகிலத்துடன் இணைக்கிறார்

போல்ஷ்விக் புரட்சிக்குப் பின்னர் அமையப்பெற்ற முதல் கம்யூனிஸ்ட் கட்சியாக மெக்சிகோ கட்சி வரலாற்றில் இடம் பெற்றது. மெக்சிகோவில் சோசலிஸ்ட் குழுக்கள் மத்தியில் கடும் கருத்து வேறுபாடுகள் நிலவின. ராய் 1919 நவம்பரில் எவ்லினுடன் ஸ்பெயின் சென்றார். மாஸ்கோவில் கோமிண்டர்ண் எனப்படுகின்ற அகிலத்தின் 2வது

காங்கிரசில் மெக்சிகன் பிரதிந்தியாக ராய் பங்கேற்றார். பெர்லினில் ராய் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலர் அகஸ்ட் தால்ஹைமரை சந்திக்கிறார். விடுதலைக்கு போராடும் மக்களுக்கு அகிலம் உதவுவதற்கு ராய் முன்முயற்சி எடுக்க வேண்டும் என தோழர்கள் சிலர் கருத்து தெரிவிக்கின்றனர். ஜெர்மனியில் தங்கியிருந்த மாதங்களில் அவர் எட்வர்ட் பெர்ன்ஸ்டெயின், கார்ல் காட்ஸ்கி, ஹில்பெர்டிங் போன்ற புகழ் வாய்ந்த மார்க்சியர்களை சந்திக்கிறார். எர்னஸ்ட் மேயர், தால்ஹைமர், கிளரா ஜெட்கின், பால் லெவி போன்றவர்களுடன் தோழமை கொள்கிறார்.

ரோசா லக்ஸம்பர்க் ஆதரவாளர்கள் ஜெர்மன் டச்சு கம்யூனிஸ்ட்கள் சிலரின் பழக்கம் அவரை மார்க்சியத்தில் உறுதிப்படுத்தியது. தேசியவாதம் சுயநிர்ணய உரிமை போன்றவற்றில் நம்பிக்கையின்மையை அவர்கள் வெளிப்படுத்தி வந்தனர். ரோசா-லெனின் வேறுபாடுகளையும் அவர்கள் தெரிவித்து வந்தனர். ராய்- லெனின் விவாதம் வந்தபோது ராய்தான் கம்யூனிஸ்ட்- லெனின் தேசியவாதி என்றெல்லாம் அவர்கள் ராயை ஆதரித்து ஏற்றிப் பேசினர்.

முதன்முதலாக இந்திய நிலைமைகள் குறித்து ராய் தான் புரிந்துகொண்ட மார்க்சிய அடிப்படையில் அறிக்கை ஒன்றை தயாரித்திருந்தார். காங்கிரஸின் அணுகுமுறை முதலாளித்துவ ஜனநாயகத்திற்கானது ஆனால் புரட்சிகரவாதிகள் உழைக்கும் மக்களின் பொருளாதார விடுதலைக்காக போராடுகிறோம் என ராய் எழுதினார். அவருக்கு இந்தியாவுடன் நேரிடையான களத்தொடர்பு ஏதுமில்லை. கோமிண்டர்ண் இரண்டாவது மாநாடு 1920 ஜூலை-ஆகஸ்டில் நடந்தது. அதில் தேசிய காலனிய பிரச்சனை குறித்த லெனின் ஆய்வறிக்கையுடன் ராயின் அறிக்கையும் விவாதத்திற்கு வைக்கப்பட்டது. ஆசிய மையப்படுத்த அறிக்கையை லெனின் ஏற்கவில்லை. அய்ரோப்பிய புரட்சிகளின் வெற்றிக்கே கூட ஆசிய புரட்சிகளின் அவசியம் குறித்து ராய் பேசினார். காலனிய நாடுகளில் உள்ள பாட்டாளி வர்க்கத்தின் பலவீன நிலைதனையும் முதலாளித்துவ வர்க்கத்தின் தலைமை பாத்திரத்தையும் லெனின் குறிப்பிட்டார். ராய் மிக அதிக தூரம் சென்றுவிட்டார் என லெனின் மதிப்பிட்டார். காலனி நாடுகளின் பூர்ஷ்வா தலைமையுடன் முழுமையாக அய்க்கியமாகிவிடாமல் அவர்களுடன் இணைந்த போராட்டங்களை மேற்கொள்ளவேண்டும் என அறிவுறுத்தினார் லெனின். ராய் தொழிலாளர் விவசாயி வர்க்க அணியை கட்டுவதற்கு இந்நாடுகளில் கம்யூனிஸ்ட் கட்சிகளை உடன் அமைக்க வேண்டும்- அதற்கு கோமிண்டர்ன் உதவவேண்டும் என வாதிட்டார்.

முதலாளித்துவ என்ற கட்டத்தை எட்டாமலேயே சோவியத் முறைக்கு பின்னடைந்த நாடுகள் வளர்ந்த நாடுகளின் பாட்டாளிவர்க்க துணையுடன் போகமுடியும் என லெனின்-ராய் அறிக்கைகளை அகிலம் சமரசப்படுத்திக்கொண்டது. லெனின் ஆய்வறிக்கைக்கு துணை செய்பவையாக சீன, இந்திய பிரதிநிதிகளின் அறிக்கைகள்

இருந்ததாக ஸ்டாலின் குறிப்பிட்டார். காலனி நாடுகளில் தொழிலாளர் விவசாயிகளை திரட்டும் நமது முயற்சிகளுக்கு அங்குள்ள பூர்ஷ்வா வர்க்கம் தடை ஏற்படுத்தாத சூழலில் அவர்களுடன் சேர்ந்து செயலாற்ற வேண்டும் என்றார் லெனின். அவ்வாறு இல்லாத சூழல் எனில் எதிர்த்து போராடவேண்டும் எனவும் லெனின் தனது நிலையை தெளிவுபடுத்தி வந்தார். .

ராய் இந்திய நிலைகளில் தொழிலாளர்- விவசாயி வர்க்க உணர்வை மிகையாக மதிப்பிட்டிருந்தாலும், அவர்களை வர்க்க உணர்வுடன் திரட்டும் கருவி சொந்த நாட்டில் தேவை என்று மதிப்பிட்டது வரவேற்க தகுந்த ஆய்வாக அகிலத்தில் இருந்தது. மக்களை திரட்டி போராடும் காந்தியை லெனின் புரட்சிகரவாதி என மதிப்பிட்டதை ராய் ஏற்கவில்லை. காந்தி அரசியல்ரீதியாக புரட்சிகரமானவராகவும்- சமுக அம்சங்களில் பிற்போக்களாராகவும் இருக்கிறார் என ராய் மதிப்பிட்டார். இதில் ராய் பிளக்கானோவின் கருத்தாக்கத்தை எடுத்துக்கொண்டார். லெனின் பூர்ஷ்வாக்கள் உள்ளிட்ட தொழிலாளர், விவசாயி, குட்டிமுதலாளித்துவ வர்க்க சேர்க்கை குறித்து பேசினார். ராய் முதலாளித்துவாதிகள் நீங்கலான வர்க்க சேர்க்கை என பேசினார்.

தாஷ்கண்டில் நூற்றுக்கணக்கான முஹாஜிர்களுக்கு இராணுவ மார்க்சிய பயிற்சிப்பள்ளி ஒன்றில் ராய் சில மாதங்கள் கவனம் செலுத்தினார். இச்சமயத்தில் தாஷ்கண்டில் அக்டோபர் 17, 1920ல் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி நிறுவப்பட்டதாக அறிவித்தனர். கம்யூனிஸ்ட் கட்சியை ராய், எவ்லின், அபானி, ரோசாபிடின், மொகமது அலி, சாபிக் சித்திக், ஆச்சார்யா துவங்கினர். பின்னாட்களில் வெளிநாட்டில் இப்படி கட்சி ஆரம்பித்ததால் பெரிதாக ஒன்றும் நடக்கவில்லை என குறிப்பிடுகிறார். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் எதிர்ப்பால் இப்பள்ளியை மூடவேண்டியதானது. பின்னர் ஆசிய புரட்சியாளர்களுக்கு பயிற்சி தரும் வகையில் கீழைதேய கம்யூனிஸ்ட் பல்கலைகழகம் ஒன்று மாஸ்கோவில் நிறுவப்பட்டது. 1921 மத்தியில் ராய் இதற்கான முயற்சி எடுத்தார்.

பெர்லின் புரட்சிகர கமிட்டிக்கும் ராய் குழுவிற்கும் கருத்து வேறுபாடுகள் இருந்தன. பெர்லின் குழுவில் சட்டோபாத்யாயுடன், அவரது துணைவியார் அக்னெஸ் ஸ்மெட்லி, பி என் தத்தா, நளினிகுப்தா, லுகானி கான்கோஜ் இருந்தனர். லெனின் உட்பட சோவியத் தலைவர்களுடன் ராய்க்கு இருந்த நெருக்கம் பெர்லின் புரட்சியாளர்களுக்கு கோபத்தை மூட்டியது. அகிலத்தின் மூன்றாவது மாநாட்டில் இந்தியா குறித்து பேசுவதற்கான அதிகார பிரதிநிதிகள் தாங்கள்தான் என கோரினர். ராய்-அபர்னி முகர்ஜியை ஒற்றர்கள் என பெர்லின் விரேந்திரநாத் சட்டோபத்யாய் குழுவினரும், ஜெர்மன் ஏஜண்ட்கள் என ராய் குழுவினரும் விமர்சித்துக் கொண்டனர். சட்டோபத்யாய குழுவினர் தாஷ்கண்டில் உருவாக்கப்பட்டதாக சொல்லும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி கலைக்கப்படவேண்டும் என்றனர். புது கமிட்டி ஒன்றில் பணியாற்ற தயார் எனவும், கட்சியை கலைப்பதாக தான்

ஏற்றுக்கொண்டாலும் தன்னோடு உருவாக்கியவர்கள் ஏற்பார்களா எனத் தெரியாது என ராய் வாதாடினார். இந்தியாவிலுள்ள, வெளிநாடுகளிலுள்ள புரட்சியாளர்களுக்கு உதவி செய்து ஏகாதிபத்தியத்தை தூக்கி எறிவதுதான் முதல் கடமையாக இருக்க வேண்டும்- பின்னர்தான் கம்யூனிசம் உருவாக்குதல் என சாட்டோ வாதடினார். கோமிண்டார்ன் கம்யூனிஸ்ட் கட்சிகளை நிறுவுதல் வளர்வதற்கு உதவி செய்தல் தங்கள் கடமை என முடிவெடுத்ததால் பெர்லின் குழுவினர் வெளியேறினர்.

II

1919 இந்திய அரசாங்க சட்டத்திற்கு ஒத்துழைப்பு என்ற வகையில் காந்தி, மதன்மோகன் மாளவியாவும் எதிர்ப்பு என்ற வகையில் சி ஆர் தாஸ் போன்றவர்களும் செயல்பட்டனர். பின்னர் நிலைமை மாறியது . காந்தி ஒத்துழையாமையை அறிவிக்கிறார். சி ஆர் தாஸ் ஒத்துழையாமைக்கு ஒத்துழைப்பதில்லை என செயல்படுகிறார். சுயராஜ்யம் என்பதை விளக்குவதில் கருத்து வேறுபாடு காங்கிரஸ் தலைவர்கள் மத்தியில் இருந்தது. கிலாபத்தையும் ஒத்துழையாமையையும் காந்தி இணைத்தார். 1921 வேல்ஸ் இளவரசர் வருகையின் போது போராட்டங்கள் தீவிரமாயின. தாஸ், நேருக்கள், லஜ்பத், மௌலான போன்றவர்கள் கைது செய்யப்பட்டனர்.

முதல் உலகப்போர் பாதிப்பால் சம்பள வீழ்ச்சி எதிர்த்தும் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களை எதிர்த்தும் மில் தொழிலாளர்கள், ரயில்வே அஞ்சல் போராட்டங்கள் எழுந்தன. 1920ல் மட்டும் 200 வேலை நிறுத்தங்கள் நடந்ததாக ராயல் கமிஷன் பதிவு செய்தது. 1920ல் AITUC உருவானது. முதல் அமர்விற்கு லஜ்பத்ராய் தலைமை தாங்கினார். காந்தியின் சம்பரான் இயக்கம் தொடர்ந்து கிராமப்புறங்களில் விவசாய இயக்கங்கள் எழலாயின. அரசாங்கத்திற்கு வரிகொடா இயக்கம் என்றார் காந்தியார். அதேநேரம் ஜமின்தார்- விவசாயிகள் உறவுகள் சீர்குலையாமல் இருக்கவும் விரும்பினார். ஆனால் விவசாயிகளுக்கு கண்ணெதிரே நடக்கும் மண்ணின் கொடுமைகளே அரசு கொடுமைகளைவிட அதிகம் தெரிபவனவாக இருந்தன. வெளிநாட்டில் இருந்த ராய் போன்றவர்கள் நிலங்கள் தேச உடைமை- விவசாயிகளுக்கு பிரித்து வழங்குதல் என பேசிக்கொண்டிருந்தனர். பிரிட்டிஷ் எவ்வளவு தடுக்க நினைத்தாலும் மீறி சோவியத் புரட்சியின் தாக்கம் இளைஞர்களிடம் கவ்வி பிடிக்கத் துவங்கியது. சோவியத் குறித்த செய்திகளை பத்திரிக்கைகள் வெளியிடலாயின

அரசியல் பொருளாதார கட்டுமானம் குறித்த செயல் திட்டம் கொள்கை அறிக்கை ஏதும் இல்லாமல் தேசிய இயக்கம் செயல்படுவதாக ராய் கருதினார். 1921 அகமதாபத்தில் காங்கிரஸ் கூடுகிறது என அறிந்து ராயும் அபானியும் கையெழுத்திட்ட

அறிக்கை ஒன்றை லெனின் ஸ்டாலின் ஏற்புடன் அனுப்புகின்றனர். சி ஆர் தாஸ் தலைவர் என்பதால் செல்வாக்கு செலுத்தமுடியும் என ராய் கருதியிருக்கலாம். மக்களின் உணர்வுகளை தட்டி எழுப்பி போராட வைப்பதின் மூலம் மட்டுமே சுயராஜ்யம் என அறிக்கை பேசியது. ஆனால் அறிக்கைதனை தலைவர் தாஸ் அவர்களிடம் உரிய நேரத்தில் சேர்ப்பிக்கப்பட முடியவில்லை. வேறு சார்பாளர்கள் கையெழுத்துடன் அவ்வறிக்கை விநியோகிக்கப்பட்டது. ஹஸ்ரத் மொகானி முழு சுதந்திரம் தீர்மானத்தை கொணர்ந்தார். காந்தி ஏற்க மறுத்து ஆபத்தில் முடியும் என நிராகரித்தார். ஒத்துழயாமை இயக்கம் கைவிடப்பட்டதால் கிலாபத் இயக்கமும் பாதித்ததாக அலிகார் மாணவர்கள் கருதினர். காந்தியின் கைதும் காங்கிரசை பலவீனப்படுத்தியது.

அகிலத்தின் மூன்றாம் மாநாட்டில் டிராட்ஸ்கி வைத்த உலக நிலைமைகள் குறித்த அறிக்கையின் மீது ராய் கருத்து தெரிவித்தார். முதல் உலகப்போருக்குப் பின்னர் மேற்கு உலகம் அமெரிக்கா தலைமையிலும் கிழக்குலகு இங்கிலாந்து தலைமையிலும் உள்ளன. போருக்குப்பின்னர் தனது எந்திர பாகங்களுக்கு சந்தை தேவை என்பதால் காலனி நாடுகளை தொழில்மயமாக்க துவங்கியது என்றார் ராய். காலனி நாடுகள்தான் இங்கிலாந்தின் நீடித்த முதலாளித்துவ வளர்ச்சிக்கு உதவுகின்றன என்றார். எனவே இங்கிலாந்திற்கு தொடர்ந்து இந்த வாய்ப்பை நல்காமல் சோசலிசத்தின் ஆதாரத்தளங்களாக காலனிநாடுகள் புரட்சிகர இயக்கங்கள் மூலம் மாற்றப்படவேண்டும் என்றார் ராய். புரட்சிகர மக்கள் பக்கம் காந்தி நிற்கப்போகிறாரா இல்லையேல் காலனியத்தன்மையை காக்கும் பூர்ஷ்வா சீர்திருத்தவாதிகளுடன் நிற்கப்போகிறாரா என்பதை தெளிவுபடுத்த வேண்டும் என்றார் ராய். கீழை நாடுகளின் அரசியல் சமுக பொருளாதரா இயக்கங்கள் மேற்கு இயக்கங்கள் போல் ஒத்த தன்மை கொண்டவையல்ல எனவும் ராய் கருத்து வெளியிட்டார்

1922ன் மத்தியில். பெர்லினுக்கு கட்சியின் தலைமையகத்தை மாற்றி வேன்கார்டு பத்திரிக்கையை ராய் கொணரத் துவங்கினார். India in Transition, India's problem and solution, What we want போன்ற பிரசுரங்கள் சுற்றுக்கு வந்தன. டாங்கேவால் கொணரப்பட்ட socialist பத்ரிக்கைக்கு மதிப்புரையை அக்டோபர் 1922ல் ராய் எழுதினார். பிரிட்டிஷ் கம்யூனிஸ்டான சார்லஸ் அஸ்லேவை டாங்கே, முசாபர் ஆகியோரை சந்திக்க ராய் அனுப்பினார். கம்யூனிஸ்ட் குழுக்கள் அமைய இச்சந்திப்பும் ராயுடனான தொடர்பும் உதவின. இந்தியா முழுவதும் ஒருங்கிணைப்பை டாங்கே கொணரமுடியும் என்ற நம்பிக்கை சார்லஸிற்கு வந்தது. பெஷாவர், மெட்ராஸ், பம்பாய், கல்கத்தா, அகமதாபாத் பகுதிகளில் கட்சி அமைப்புகள் உருவாகிவிட்டதாக கோமிண்டர்னுக்கு ராய் தெரிவித்தார்.

சி ஆர் தாஸ் ருஷ்யாவிற்கும், மார்க்சியத்திற்கும் எதிராக கருத்துக்களை வெளியிட்டார். கயா காங்கிரஸிற்கு ராய் அனுப்பிய 'இந்திய தேசிய காங்கிரசிற்கான திட்டம்' என்பதை ராய்ட்டர் போல்ஷ்விக் சதி என வர்ணித்தது. தேசிய இயக்கத்தை தீவிரப்படுத்துதல் என்கிற தனது நடவடிக்கைகள் வெற்றி பெறாமை குறித்து ராய் சோர்வடைந்தார். கயா காங்கிரஸிற்கு பிறகு மோதிலால், தாஸ் போன்றவர்கள் சுயராஜ்ய கட்சியை உருவாக்கி மத்திய சட்டமன்றத்திற்கு சென்றனர். 1924ல் லேபர்கட்சி பிரிட்டனில் ஆட்சிக்கு வருகிறது. காந்தி விடுதலை செய்யப்படுகிறார்.

சிங்காரவேலர், டாங்கே போன்றவர்கள் அய்ரோப்பா வரவேண்டும் என ராய் விரும்பினார். அகிலத்தின் 4வது மாநாட்டில் இந்தியாவிலிருந்து பிரதிநிதிகள் வரவில்லை என்ற வருத்தம் ராய்க்கு இருந்தது. 1923 ஏப்ரலில் சிங்காரவேலர் சென்னையில் கூட்டிய லேபர் கிசான் மாநாட்டில் டாங்கே பங்கேற்கவில்லை. அவ்வமைப்பு சார்பில் முதல் மேதினத்தையும் சிங்காரவேலர் கொண்டாடினார். சிங்காரவேலரின் வேண்டுகோளை ஏற்று அவரது அமைப்பை மையமாக கொண்டு முசாபர், டாங்கே குழுக்கள் அதற்கு கிளையாகவும் செயல்படவேண்டும் என ராய் நினைத்தார். ஆனால் போல்ஷ்விசம் குறித்து சிங்காரவேலர் மாறுபட்ட கருத்து வைத்திருந்தால் கோமிண்டர்ன் ஆதரவு இருக்காது என்பதையும் ராய் தெளிவுபடுத்தினார். கான்பூர் சதி வழக்கில் கம்யூனிஸ்ட் இளந்தலைவர்கள் கைதாகின்றனர்.

1924ன் மத்தியில் ராய் தனது செயல்பாடுகளை பாரிசிலிருந்து நடத்தி வந்தார். ஆனால் பிரஞ்சு அரசாங்கம் வேன்கார்டு கொணர்வதில் தடை ஏற்படுத்தியது. பாரிசிலிருந்து அவர் வெளியேறவேண்டிய நிலை ஏற்பட்டது. இந்தியாவில் கான்பூர் சதி வழக்கால் தொடர்புகள் கடினமாயின. கான்பூரில் உஸ்மானி கைதிற்கு பின்னால் சத்யபக்தா முன்முயற்சி எடுத்தார். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை 50 நபர்களுடன் 1924 நவம்பரில் தான் துவங்கிவிட்டதாக பேசிவந்தார். இந்த செய்தி ராயை எட்டவில்லை. ஆனால் சத்யபக்தாவுடன் தொடர்புடைய ஜானகி பிரசாத் பாகர்கட்டா என்பார் ராயுடன் தொடர்புகளை ஏற்படுத்திக்கொண்டு இருந்தார். டிசம்பர் 1924ல் பெல்காமில் நடைபெறும் காங்கிரஸ் மாநாட்டில் விநியோகிக்க 'தேசியவாதிகளுக்கு வேண்டுகோள்' என்ற அறிக்கையை பாகர்கட்டா மூலம் ராய் அனுப்ப முயற்சித்தார்.

காங்கிரஸ் தலைவர்கள் கருத்துவேறுபாடுகளை சரி செய்துகொண்டு ஒன்றுபட்ட செயல்பாடு என பெல்காமில் முடிவெடுத்தனர். ராயின் தீவிர புரட்சிகர தேசியம் ஆதரவு பெறாமல் போனது. எழும்பிய முழுவிடுதலை தீர்மான முயற்சியும் காந்தியடிகளால் அவசியமற்றது என ஒதுக்கப்பட்டது. 1926ல் மாளவியா லஜ்பத்ராய் ஆதரவுடன் சுயராஜ்ய கட்சியிலிருந்து வெளியேறி சுயேட்சை காங்கிரஸ் கட்சி மேலும் வலதுசாரி சரிவுடன் கூடிய அமைப்பை ஒன்றை துவங்கினார். முப்பதாண்டுகளுக்கு மேலாக

அரசாங்கத்துடன் ஒத்துழைப்பு- ஒராண்டு ஒத்துழையாமை கட்சியாக காங்கிரஸ் மாறிவிட்டது என்கிற விமர்சனங்கள் எழத்துவங்கின.

Masses என்கிற பத்திரிக்கை துவங்கி காங்கிரசை கடுமையாக விமர்சித்து ராய் எழுதிவந்தார். இந்து-முஸ்லீம் வேற்றுமைகளும் அதிகரித்து வருவதாக ராய் தெரிவித்தார். அனைத்து வகுப்புவாத அமைப்புகளையும் உடன் கலைக்கவேண்டும் என ராய் வேண்டுகோள் விடுத்தார். சி ஆர் தாஸ் மீதான நம்பிக்கையும் பொய்த்துவிட்டதாக ராய் கருதினார். இந்தியாவில் கம்யூனிஸ்ட்கள் வலிமை குறித்து அதிதமாகவே மாஸ்கோவிற்கு தெரிவித்து வந்தார் என்றும் அதனால்தான் நிதி உதவியை அவரால் பெறமுடிந்தது என்கிற விமர்சனம் ராய் மீது எழத்துவங்கியது.

1925ல் பஞ்சாலைத் தொழிலாளர்கள், ரயில்வே தொழிலாளர்கள் ஆயிரக்கணக்கில் திரண்டு போராட்டங்களில் இறங்கினர். வடமேற்கு ரயில்வே தொழிலாளர்கள் முதன்முதலாக தங்கள் பகுதியில் செங்கொடி ஏற்றினர். 1924ல் அகிலத்தின் 5வது மாநாடு கம்யூனிஸ்ட்கள் தொழிற்சங்கங்களில் தீவிரமாக பணியாற்றவேண்டும்- மோதிலால், லஜ்பத்ராய் செல்வாக்கிலிருந்து விடுபடவேண்டும் என்ற வழிகாட்டுதலை தந்திருந்தது. 'சிவப்பு விவசாயிகள் அகிலம்' இந்திய விவசாயிகள் அமைப்புடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள விழைந்தது. இந்திய தேசியவாதிகள் குறித்த ராயின் தொடர்ந்த எதிர்மறை பார்வையை அகிலத்தில் ஜினோவீவ் போன்றவர்கள் ஏற்க மறுத்தனர். இந்தியாவில் வளர்ந்துவரும் முதலாளித்துவத்தால் அங்குள்ள மக்கள் பிரச்சனைகள் போராட்டங்கள் பொருளாதார காரணிகள் கொண்டவை தவிர தேசியத்தன்மையால் அல்ல என் ராய் பிடிவாதமாக வாதிட்டு வந்தர். பிரிட்டிஷ் லேபர் அரசாங்கத்தை எதிர்த்து பிரிட்டன் கம்யூனிஸ்ட் கட்சி ஏதும் செய்யவில்லை என்ற குற்றசாட்டையும் ராய் எழுப்பினார். ஆனாலும் அகிலத்தின் மார்ச் 1925 செயற்குழு கம்யூனிஸ்ட்கள் காங்கிரசிலும் சுயராஜ்ய கட்சியிலும் செயல்படவேண்டும் என்ற வழிகாட்டுதலை தந்தது.

1925ன் துவக்கத்தில் பிரிட்டன் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து அனுப்பப்பட்ட கிலேடிங் இந்தியாவில் தங்கி கம்யூனிஸ்ட் இளந்தலைவர்களை சந்தித்த பின்னர் இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சி என ஏதுமில்லை என்ற செய்தியை அனுப்பினார். அப்போது நாடளுமன்றத்தில் இருந்த தோழர் சக்லத்வாலா மூலம் தொழிற்சங்கத்லைவர்கள் சமன்லால், கோசாமி, என் எம் ஜோஷி போன்றவர்கள் தொடர்பு கொள்ளப்பட்டு ஆம்ஸ்டர்டாமில் கீழைத்தேய மாநாடு ஒன்றிற்கு முயற்சி எடுக்கப்பட்டது. ராய் அதற்கு அழைக்கப்பட்டார். கம்யூனிஸ்ட் குழுக்கள் இருப்பதை கிலேடிங் கண்டறியவில்லை என ராய் விமர்சித்தார். கிளேடிங்கை தொடர்ந்து 1926-28 ஆண்டுகளில் ஜார்ஜ் அல்லிசன், பிலிப் ஸ்பிராட், பெஞ்சமின் பிராட்லி போன்றவர்கள்

அனுப்பப்பட்டனர். ராயின் செல்வாக்கு கோமிண்டர்ன், இந்திய கம்யூனிஸ்ட்கள் மத்தியில் சரியத்துவங்கியது.

ஸ்டாலின் சக்திமிக்கவராக மாறத்துவங்கியிருந்தார். விடுதலைப் போராட்ட நாடுகளில் சுயேச்சையான கம்யூனிஸ்ட் கட்சி, பூர்ஷ்வாக்களில் முற்போக்கு புரட்சிகரசக்திகளுடன் ஒத்துழைப்பு என பேசத்துவங்கினார். 1926 நவம்பரில் அகிலத்தின் தலைமை ஜினோவீவிடமிருந்து புகாரினுக்கு மாற்றப்பட்டது. கீழை கமிஷனுக்கு ராய் பொறுப்பாக்கப்பட்டார். சீன நிலைமைகள் என்பது தீவிர விவாத நிரலில் இடம் பெற்றது. கோமிண்டர்னின் இம்ரிகார் பத்ரிக்கையின் ஆசிரியர்குழுவில் ராய்க்கு இடம் கிடைத்தது. 1927ல் ராய் சீன கட்சிக்கு உதவிட அனுப்பப்பட்டார்.

இந்தியாவில் வெளிப்படையான புரட்சிகர தொழிலாளர் விவசாய கட்சியைத்தான் பலப்படுத்தவேண்டும் என ராய் வலியுறுத்தி வந்தார். ஆனால் 1925ல் துவங்கப்பட்ட கம்யூனிஸ்ட்கட்சியை தொடர்வது என இளம் கம்யூனிஸ்ட்கள் முடிவெடுத்தனர். சத்யபக்தா கோமிண்டர்ன் இணைப்பு இல்லை என பேசிவந்தார். மொகானி, பாகர்கட்டா ராய் ஆலோசனைப்படி ரிபப்ளிகன் கட்சி என பேசினர். கம்யூனிஸ்ட் குழுக்களின் மாநாடு என சிறையிலிருந்த டாங்கே ஆலோசனை தந்தார். கான்பூர் காங்கிரஸ் சூழலில் டிசம்பர் 26-28, 1925ல் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி உருவாக்கப்பட்டது. அப்போதும் சத்யபக்தா தேசிய கம்யூனிஸ்ட் கட்சி என்றே பேசிவந்தார். பிரிட்டிஷ் உளவாளி ராய் என்ற கண்டனக் குரலை சத்யபக்தா எழுப்பினார். பின்னர் தான் முன்முயற்சி எடுத்த கட்சியிலிருந்து வெளியேறினார். பாகர்கட்டா, முசாபர், ஜோலேகர் போன்றவர்கள் கட்சிப்பணியை தொடர்ந்தனர்.

1927ல் கோமிண்டர்ன் முன்முயற்சியில் பிரஸ்ஸல்சில் நடந்த ஏகாதிபத்திய எதிர்ப்பு மாநாட்டில் காங்கிரஸ் பிரதிநிதியாக ஜவஹர் பங்கேற்றார். அதன் செயற்குழுவிலும் இடம் பெற்றார். சோவியத் தாக்கத்தில் அவர் பல்வேறு தீர்மானங்களை சென்னை காங்கிரஸ் அமர்வில் நிறைவேற செய்தார். இந்த பின்னணியில் 'சைமன் கமிஷன் திரும்பி போ' பெரும் இயக்கமாக மாறியது. லாகூர் ஊர்வலத்தில் லஜ்பத்ராய் தாக்கப்பட்டு பின்னர் மரணித்த சூழல் புரட்சிகர தேசிய இயக்கம் வளரவும் உதவியது. இளைஞர்களின் புரட்சிகர அமைப்புகள் உருவாக்கப்பட்டு சோசலிச புரட்சியை பேசத்துவங்கின. தொடர் நிகழ்வுகள் பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் உயிர்த்தியாகம்வரை சென்றன. சென்னை அமர்வில் பிலிப்ஸ்ப்ராட், பிராட்லி பங்கேற்றனர். கம்யூனிஸ்ட் கட்சியை, தொழிற்சங்க இயக்கங்களை வலுப்படுத்துதல் என்பதில் அவர்கள் அழுத்தம் கொடுத்து வந்தனர். ராய் சைமன்கமிஷன் விவகாரத்தில் பகிஷ்கரிப்பு என்கிற எதிர்மறை நிலைப்பாட்டைவிட அரசியல் அமைப்பு அசெம்பளி என்கிற நேர்மறையான கோரிக்கை தேவை எனக்கருதினார்.

தொழிலாளர் வேலைநிறுத்தங்கள் போலவே விவசாயிகள் பர்தோலி வரிகொடா இயக்கம் வல்லபாய் தலைமையில் தீவிரமானது. அரசின் அடக்குமுறைகள் இருந்தாலும் பின்னர் அரசாங்கம் பணிய நேர்ந்தது. 1928 AITUC ஜாரியாவில் பழிவாங்கப்பட்ட ரயில்வே தலைவர் குல்கர்னியை நேருவிற்கு எதிராக தலைமைக்கு கம்யூனிஸ்ட்கள் ஆதரித்தனர். நேரு வெற்றி பெற்றார். கம்யூனிஸ்ட்கள் ரெட் இண்டெர்னேஷனல் என்றும், சமன்லால், என் எம் ஜோஷி , கிரி போன்றவர் பிரிட்டிஷ் லேபர் TUC இணைப்பு என்றும் பிரிந்து நின்றனர். ஏகாதிபத்திய எதிர்ப்பு லீகுடன் இணைப்பு என்பதில் கம்யூனிஸ்ட்கள் வெற்றிபெற முடிந்தது. இந்த சூழலில் மோதிலால் தலைமையில் நடந்த கல்கத்தா காங்கிரசில் உழைப்போர்கள் 50000க்கும் மேற்பட்டோர் பெரும் ஊர்வலமாக பந்தலுக்கு வந்து உடன்விடுதலை என்கிற தீர்மானத்திற்கான முழக்கமிட்டனர். ராய் இவ்வெழுச்சி குறித்து பெருமிதமாக பிரஞ்சு புரட்சியுடன் ஒப்பிட்டு எழுதினார்.

அகிலத்தின் ஆறாவது மாநாட்டில் 6 இந்திய பிரதிநிதிகள் பங்கேற்றனர். சௌமேந்திரநாத் தாகூர் பிரிட்டன் முன்புபோல் இல்லாமல் தேசிய முதலாளிகளின் தொழிலை ஊக்கப்படுத்தி வருகிறது என குறிப்பிட்டார். சௌகத் உஸ்மானி கடந்த 10 ஆண்டுகளாக இங்கே தங்கியிருந்தவர்கள் இருட்டிலேயே உழன்றுள்ளனர் என ராய்க்கு எதிராக பேசினார். அகிலம் காங்கிரசின் சீர்திருத்த முகத்தை அம்பலப்படுத்துவது, தொழிலாளிவர்க்க கட்சியை வலுப்படுத்துவது என்ற வழிகாட்டுதலை தந்தது. சீனாவிலிருந்து திரும்பிய ராய் காலனிமய நீக்கம் என்ற விவாதத்தில் பங்கேற்றார். புகாரின் பயன்படுத்திய சொல்லாட்சி என்றாலும் இந்தியாவில் வளர்ந்துவரும் தொழிற்மயத்தை ராய் சுட்டிக்காட்டினார். பண்டைய கம்பெனி முறையில் பிரிட்டிஷ் நடந்து கொள்ளமுடியாது- உள்நாட்டு முதலாளிகளை ஊக்கப்படுத்தாமல் இருக்கமுடியாது என்றார். இதன் பொருள் ஏகாதிபத்தியமே காலனிமய நீக்கத்தை தானாக செய்துவிடும் என்பதல்ல என ராய் தனது நிலையை தெளிவுபடுத்தினார்.

1928பிப்ரவரியில் ராய் பெர்லின் சென்றார். அங்கு தால்ஹைமென், ஹெய்ன்ரிச் பிராட்லெர் போன்றவர்களின் குழுவுடன் நட்பு பாராட்டிவந்தார். சில மாதங்கள் அகிலத்தின் நிலைப்பாடு குறித்து கருத்து தெரிவிக்காமல் இருந்தார். ஜெர்மனியில் கம்யூனிச விரோத பத்திரிக்கை ஒன்றில் அகிலத்தின் நெருக்கடிகள் குறித்து கட்டுரை எழுதினார். குசினென் போன்றவர்க்கு ராயை ஒழித்துக்கட்டுவதற்கு நல்வாய்ப்பு கிடைக்கப்பெற்றது. 1929 ஜூலை பிளினத்தில் ராய் குறித்த கடும் விமர்சனங்கள் எழுந்தன. கம்யூனிஸ்ட்களுக்கு எதிரான பொதுபாதுகாப்பு மசோதாவிற்கு(பகத்சிங் குண்டெறிந்தது) ஆதரவு தந்த சுயராஜ்ய கட்சியினரை ராய் பாராட்டிவருகிறார் என்கிற விமர்சனத்தை குசினென் முன்வைத்தார். ராயிடம் மென்ஷ்விக்குகள் மணம் வீசுகிறது

என்ற தாக்குதலும் வந்தது. 1929 செப்டம்பரில் ராய் அகிலத்திலிருந்து நீக்கப்பட்டார். 1929 டிசம்பரில் இது உறுதி செய்யப்பட்டது.

முதலில் பெர்லின் குழுவினர் எனப்பட்ட சட்டோ, புபன் தத்தா குழுவினர் லெனினிடம் ராய் குறித்த எதிர்ப்புகளை பதிவுசெய்து வந்தனர். ஆரம்பத்தில் ராயுடன் நின்ற அபானிமுகர்ஜி சட்டா குழுவினருடனும், மகேந்திர பிரதாப் குழுவினருடனும் சேர்ந்து ராயை எதிர்க்க துவங்கினார். இந்தியாவிலும் கூட சிங்காரவேலர், மணிலால் போன்றவர்களுடன் அபானிக்கு தொடர்பு இருந்தது. பிரிட்டன் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆர் பி தத், சக்லத்வாலா பொறுப்பில் ராயின் நேரடி இந்திய தலையீடு மட்டுப்படுத்தப்பட்டது. அதேபோல் நளினி குப்தா, சௌமியா தாகூர் போன்றவர்களும் ராயின் செல்வாக்கு வீழ காரணமாயினர். நிதிபகிர்வு குற்றாசாட்டுக்களும் தோழர்கள் மத்தியில் எழுந்தன. புகாரினுடன் ராய் நின்றதும் ஸ்டாலினிடமிருந்து ராயை தள்ளிப்போகவைத்தது. இந்தியாவில் வெளித்தெரியும் மக்கள் கட்சி, இரகசிய கம்யூனிஸ்ட் கட்சி என்கிற ராயின் வழிகாட்டுதல் ஏற்கப்படவில்லை. .

இந்தியாவில் செயல்படும் வெளிநாட்டு கம்யூனிஸ்ட்களை வெளியேற்றத்தான் பொதுபாதுகாப்பு சட்டத்தை பிரிட்டிஷ் கொணர்கிறது என தெரிவித்த ராயின் கடிதம் அசெம்பிளி கடிதம் என பெயர் பெற்றது. இதில் மோதிலால், லாலாலஜ்பத், தாகூர்தாஸ் போன்றவர்கள் ஒன்றுபட்டு நின்றனர். பென்பிராட்லி, பிலிப் ஸ்பிராட் இருப்பதால்தான் வேலைநிறுத்தங்கள் அதிகரித்தன என்பது அபத்தமானது என்றார் மோதிலால். அவர்களால்தான் ஆபத்து எனில் பிரிட்டிஷ் ஏன் அவர்களை இந்தியாவிற்கு வரவிட்டது என்ற கேள்வியை ஶ்ரீநிவாச அய்யங்கார் எழுப்பினார். இத்தாலி போன்ற பாசிச சர்க்காரில்தான் இத்தகைய சட்டங்கள் நிலவமுடியும் என்று கேலி செய்தார் லஜ்பத். உழைக்கும் மக்களுக்கு ஆதரவாக நிற்கும் கொள்கைகளை பரவவிடாது தடுக்கத்தான் இச்சட்டம் என என எம் ஜோஷி தெரிவித்தார். ஏப்ரல் 8 1929ல் ஹிந்துஸ்தான் சோசலிச குடியரசு கட்சி சார்பில் பகத்சிங்கும் பதுகேஸ்வர் தத்தும் குண்டு வீசினர். கம்யூனிஸ்ட்கள் எதிர்ப்பு சட்டத்தை சுயராஜ்ய கட்சியினர் எதிர்த்து போராடினர் என்ற ராயின் கருத்து அகிலத்தில் விமர்சிக்கப்பட்டது. முன்னதாக மார்ச்சில் 30க்கும் மேற்பட்ட கம்யூனிஸ்ட் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். மோதிலால் இதன்மீது விவாதம் எழுப்ப மத்திய சட்டமன்றத்தில் அனுமதிக்கப்படவில்லை. மீரத் வழக்கு ஜனவரி 1930ல் துவங்கி மூன்று ஆண்டுகள் நடைபெற்றது.

III

லாகூரில் கவுன்சில் அரசியலுக்கு மாறுபட்டு ஒத்துழையாமை இயக்கத்தை முன்னெடுத்து செல்ல உதவும் தலைமை காங்கிரசிற்கு தேவை எனக் கருதி ஜவஹர்லாலை தலைமைக்கு காந்தி கொணர்ந்தார். டொமினியன் அந்தஸ்து

விவாதத்தில் இருந்த நேரத்தில் ஜவஹர் தனது தலைமை உரையில் முழு விடுதலை என பேசினார். 1921லிருந்து தடுக்கப்பட்ட அதற்கான தீர்மானமும் நிறைவேறியது.

1931ல் ஏகாதிபத்திய எதிர்ப்பு லீகிலிருந்து ஜவஹர் ஒதுங்கினார். லீகும் அவரை கமிட்டியிலிருந்து வெளியேற்றியது. ராய் முழுவிடுதலைக்கு அரசியல் அமைப்பு அசெம்பிளி என்ற கோரிக்கையுடன் தனது அறிக்கையை வெளியிட்டார். ராய் நேரு-சுபாஷ் ஆகிய அனைவரையும் கம்யூனிஸ்ட்கள் விமர்சிக்க துவங்கினர். சோவியத்தான் சரியான முழக்கம் என்றனர். அகிலத்தின் தவறான வழிகாட்டுதலைக் கொண்டு சரியான கம்யூனிஸ்ட் கட்சியை இந்தியாவில் நிறுவ முடியாது என பேசத்துவங்கினார் ராய்.

லெனினையும் துணைக்கு அழைத்து பிரஞ்சு புரட்சி தாக்கத்தின் ஜாகோபியனிசம் என்றார் ராய். பல்வர்க்க தலைமை (Multi class leadership) என்றார். தொழிலாளர் தலைமையில் விவசாயிகளுடன் குட்டி முதலாளித்துவாதிகளை இணைத்து தேசிய ஜனநாயக புரட்சி என முன்வைத்தார். பம்பாயில் 1930ல் பத்து நண்பர்கள் துணையால் ராய் குரூப் துவங்கப்பட்டது. டாக்டர் மக்மூது என்ற பெயரில் பல்வேறு அரசியல் விவாதங்களை ராய் நடத்த துவங்கினார். பம்பாயில் ராயிஸ்ட்கள் மராத்தியில் காம்கிரஞ்ச லால் பவதா மற்றும் 'மக்கள்' என்ற ஆங்கில பத்திரிக்கைகளை துவங்கினர். மும்பையில் தங்கியிருந்தபோது வல்லபாய் படேல், என் எம் ஜோஷி, அம்பேத்கார் போன்ற தலைவர்களை ராய் சந்தித்தார். ராயின் நடமாட்டம் அறிந்த போலீசார் தேடத்துவங்கினர். பின்னர் உ பி பகுதிகளுக்கு பானர்ஜி என்ற பெயரில் சென்றார் ராய். அங்கு நேருவை சந்திக்கிறார். தனது தோழர் கபாடியை அனுப்பி மீரத் வழக்கில் சிறையிலிருந்த டாங்கேவை சந்திக்க வைக்கிறார். கராச்சி காங்கிரஸ் மாநாட்டில் சுபாஷை சந்திக்கிறார். மாநாட்டில் ராய் தங்கியிருந்த பகுதிக்கு நேரு வந்து காந்தியின் திட்டத்தை ஏற்பதற்கில்லை மேலும் கூடுதலாக தீவிர திட்டம் ஒன்றிற்கு ஆலோசனை பெறப்பட்டதாக ராய் ஆதரவாளர்கள் தெரிவித்தனர். ராயின் கருத்துக்களில் சில நேருவின் தீர்மானத்தில் இடம் பெற்றதாகவும் சொல்லப்பட்டது. பின்னர் புனே சென்று தென்னிந்திய சுற்றுப்பயணம் மேற்கொள்ள ராய் விரும்பினார். ஆனால் ஜூலை 1931ல் அவர் கைது செய்யப்படுகிறார்.

பரேலி சிறையில் கக்கோரி வழக்கு புரட்சியாளர்களை சந்திக்கிறார். இக்காலத்தில் சோமநாத் லாகிரி, டாக்டர் அனாதி பாதுரி, ரஜானி முகர்ஜி போன்றவர்கள் ராய்க்கு நெருக்கமாயினர். கல்கத்தாவில் சிறிய குழு ஒன்று ராய்க்கு ஆதரவாக இருந்து வேன்கார்ட், யங் சோசலிஸ்ட் பத்திரிக்கைகளை கொணர்ந்தது. 1934ல் இக்குழு காந்தி பகிஷ்கரிப்பு கமிட்டி என்ற ஒன்றையும் தொடங்கினர். ராயின் ஆதரவாளர்களை இணைக்கும் வகையில் இந்திய தொழிலாளிவர்க்க புரட்சிகர அமைப்பு என்ற ஒன்றும் துவங்கப்படுகிறது.

விவசாயிகள் பிரச்சனையில் காந்தியால் போதுமான வெற்றியை கொணரமுடியவில்லை என இடதுசாரி பிரிவினர் கருதினர். வரிகொடா இயக்கம் வேகமாக பரவியது. குத்தகையாளருக்கும் நிலச்சுவான்தாரர்களுக்குமான மோதல் எழக்கூடாது என காந்தி கருதினார். ராய் விவசாயிகள் இயக்கம் மேலும் தீவிரமாக எழவேண்டும் என விரும்பினார். அலகாபாத் மாவட்டத்தில் துப்பாக்கி சூடு நடந்தது. நேரு இப்போராட்டம் இறுதி போராட்டம் ஆகட்டும் என பேசிக்கொண்டிருந்தார்.

AITUC தொழிற்சங்கங்களிலும் ராய் ஆதரவாளர்கள் செல்வாக்கு செலுத்திட பெரும் முயற்சி எடுத்தனர். ராய்கர், முகுந்தலால் சர்க்கார், நிம்ப்கர், ஹரிஹர சாஸ்த்ரி போன்றவர்கள் இதற்கு துணை நின்றனர். AIRF லும் 1933ல் நாக்பூரில் நடந்த ரயில்வே மாநாட்டில் தோழர் ரணதிவே ஆதரவாளர்களின் செல்வாக்கை குறைப்பதில் ராயிஸ்ட்கள் பணியாற்றினர். ராய் முன்வைத்த Platform for Unity என்பதை கம்யூனிஸ்ட்கள் ஓடுகாலி திட்டம் என்ற பார்வையில் நிராகரித்தனர். தொழிலாளி வர்க்கத்தை அதன் புரட்சிகர பாதையில் பாதியிலேயே நிறுத்த ராய் சதி என கடுமையான விமர்சனங்களை கம்யூனிஸ்ட்கள் முன்வைத்தனர். AITUCலிருந்து வெளியேறி ரெட் தொழிற்சங்கம் துவங்கினர். இதில் ரணதிவே, சோம்நாத்லாகிரி, ஜமாலதீன் புகாரி , பங்கிம் முகர்ஜி போன்றவர் முன்நின்றனர்.

1933ல் காட்டே, மிராஜ்கர், நிம்ப்கர் போன்ற மீரத் வழக்கில் சிக்க வைக்கப்பட்டவர்கள் விடுவிக்கப்பட்டனர். வேலைநிறுத்தங்கள் ராயினரையும் கம்யூனிஸ்ட்களையும் சற்று நெருங்க வைத்தது. நாட்டில் பார்த்த யதார்த்த நிலைகள் ராயை நிதானப்படுத்தின. அவர் முன்பு எழுதியவைகளின் பொருத்தப்பாடுகள் குறித்தும் அவரை சிந்திக்க வைத்தன. பிரிட்டிஷ் அரசு ஆகஸ்ட் 1934ல் சி பி அய் உள்ளிட்ட அமைப்புகளை தடை செய்தது. AITUC கல்கத்தா அமர்விற்கு மிராஜ்கர் வந்தார். ரெட் தொழிற்சங்கத்தை கலைக்க வேண்டும் என்பதை ராய் ஆதரவாளர்கள் கோரினர். இதை கம்யூனிஸ்ட்கள் ஏற்றுக்கொண்டு 1935ல் AITUCக்கு திரும்பினர்.

ஏகாதிபத்திய எதிர்ப்பு லீகில் செயல்பட்ட விரேந்திர சட்டோ புரட்சிகர இயக்கத்திற்கும் காங்கிரசிற்கும் இடையில்தான் போராட்டம் என பேசத்துவங்கினார். நாஜிகளின் செல்வாக்கு ஜெர்மனியில் உயர்ந்த சூழலில் கோமிண்டர்னின் 7வது மாநாட்டில் டிமிட்ராவ் ஐக்கிய முண்ணனி தந்திரம் என்பதை முன்வைத்தார். காலனி நாடுகளில் ஏகாதிபத்திய எதிர்ப்பு மக்கள் முன்னணி என்ற முழக்கம் வைக்கப்பட்டது. இந்தியாவில் கம்யூனிஸ்ட்களுக்கு தத்-பிராட்லி (Dutt - -Bradley Thesis) அறிக்கை மூலம் அகிலத்தின் பார்வை தெளிவுபடுத்தப்பட்டது, காங்கிரசையே/ காங்கிரஸ் சோசலிஸ்ட் மேடையையே ஏகாதிபத்திய எதிர்ப்பு மேடையாக மாற்ற முடிவானது. வளர்ந்துவரும் பாசிச அபாயம் கம்யூனிஸ்ட்களையும் சமுக ஜனநாயகவாதிகளையும் நெருங்க செய்யும் என ராய் கருதினார். கோமிண்டர்ன் தலைமைக்கு காங்கிரசை மேடையாக

மாற்றுங்கள் என்ற கடிதமும் எழுதினார். தான் மீண்டும் அகிலத்திற்கு அழைக்கப்படவேண்டும் என்று விரும்பினார். மக்கள் எங்கு இருக்கிறார்களோ அங்கு புரட்சிகரவாதிகள் இருக்க வேண்டும் என்ற லெனின் அறிவுரையை ராய் வற்புறுத்தினார். ஆறாவது அகிலத்திற்கு பின்னர் ஓடுகாலி என முத்திரை குத்தப்பட்ட ராய் 7வது அகில முடிவில் உடன்பட்டிருந்தாலும் அவருடன் எந்த தொடர்பையும் அகிலம் வைக்கவில்லை..

ராயிஸ்ட்கள் மக்களின் உடனடி தீர்விற்குரிய கோரிக்கைகள் என வலியுறுத்தியபோது வர்க்கப்பார்வையில் கோரிக்கைகள் என்று கம்யூனிஸ்ட்கள் வேறுபட்டனர். Constituent Assembly என ராயிஸ்ட்கள் எழுப்பியதும் வேறுபாட்டை உருவாக்கியது. அரசியல் சட்ட அமைப்பையும் நாடாளுமன்றத்தையும் கம்யூனிஸ்ட்கள் குழப்பிக் கொள்வதாக ராயிஸ்ட்கள் விமர்சித்தனர். நேரு இரண்டாவது முறையும் காங்கிரஸ் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியினராக செயல்பட்ட நரேந்திரதேவ், ஜெயபிரகாஷ், பட்வர்த்தன் ஆகியோரை செயற்குழுவில் இணைத்தார்.

காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சிக்குள்ளும் சோசலிஸ்ட்கள், கம்யூனிஸ்ட்கள், ராயிஸ்ட்கள் என்ற பிரிவுகள் இயங்கின. தனிநபர் துதி - கொள்கை பலவீனங்களுடன் இந்த இடதுகள் செயல்படுவதாக ராய் விமர்சிக்க துவங்கினார். சோசலிச முழக்கம் மூலம் காங்கிரஸ் தலைமையை கைப்பற்றுவது கடினம், வலதுசாரிகள் பலம் பெறுகிறார்கள் என உணர்ந்த ராய் தேசிய ஜனநாயக ஏகாதிபத்திய எதிர்ப்பு போராட்டம், புரட்சி என்ற முழக்கங்களை வற்புறுத்தினார். சுபாஷ் அவர்களும் தனது ஹரிபுரா காங்கிரஸ் தலைமையுரையில் ஏகாதிபத்திய எதிர்ப்பு என்கிற இடதுநிலைதான், சோசலிசமல்ல என்ற கருத்திற்கு வந்திருந்தார். இந்திய நிலைமைகள் போல்ஷ்விசத்திற்கு கனியவில்லை என்ற தெளிவான பார்வைக்கு ராய் வந்திருந்தார். CSPல் பிளவுவேலை செய்கிறார் ராய் என்ற குற்றசாட்டை எம் ஆர் மசானி போன்றவர்கள் சொல்லத் துவங்கினர். 1936 CSP ஃபைஸ்பூர் மாநாட்டில் ராய் கலந்துகொண்டார். தீர்மானங்களும் ஒருமனதாகவே நிறைவேற்றப்பட்டன. இருப்பினும் தொடர்ந்த கருத்து வேறுபாடுகளால் 1937ல் ராய் குழுவினர் வெளியேறினர். 1940 ராம்கார் காங்கிரஸ்வரை கம்யூனிஸ்ட்கள் CSPல் தொடர்ந்தனர். காங்கிரஸ்சோசலிஸ்ட் இயக்கத்தில் சோசலிஸ்ட்களுக்கும் கம்யூனிஸ்ட்களுக்கும் மோதல்கள் தொடர்ந்தன. ராம்கர் மாநாடு கம்யூனிஸ்ட்களை வெளியேற்றியது,

IV

டேராடூன் சிறையிலிருந்து 1936 நவம்பரில் வெளிவந்தது முதல் ராய் உடனடி அவசியம் நாட்டின் விடுதலைதான் சோசலிசமல்ல என பேசத்துவங்கினார். காங்கிரசில் கவனம் செலுத்தி அவ்வியக்கத்தை கூடுதல் ஜனநாயகப்படுத்துவதும் திட்டங்களை தீவிரப்படுத்துவது என்பதில் கவனம் செலுத்திட ராய் முடிவெடுத்தார்.

1936 ஃபைசபூர் மாநாட்டில்தான் காந்தியை அவர் சந்திக்கிறார். ராஜேந்திரபிரசாத், வல்லபாய் படேல் போன்றவர்களுடன் விவாதிக்கிறார். ராஜேந்திரபிரசாத்தும் ராயை சதகத் ஆசிரமத்திற்கு அழைக்கிறார். நேருவின் இடத்திற்கு நீங்கள்தான் என ராயை சந்தித்து சில காங்கிரஸ் தலைவர்கள் கூறியதாகவும் செய்திகள் வந்தன. காங்கிரசில் வலதுசாரி தலைவர்கள் ராய் பக்கம் பேசுவது போன்ற காட்சிகள் தெரிந்தன. காந்தியிடம் ராய் தனது சோசலிசம் குறித்த பார்வையை விளக்கும்போது விடுதலைதான் முதல் குறிக்கோள், காங்கிரசை பலப்படுத்துவது குறித்து தாங்கள் குறிப்பு தந்தால் அதை செயற்குழு ஏற்க செய்து தீர்மானம் ஆக்கிட தான் உதவ முடியும் என்றார் காந்தி. தனது பிரார்த்தனை (Prayer) கூட்டத்திற்கு ராய் வரவேண்டும் என்றார் காந்தி. ராயின் தயக்கம் அறிந்த காந்தி தனக்கு அது எவ்வளவு தேவையாக முக்கியமாக இருக்கிறது என்பதை விளக்கினார்.

தனது வாரப்பத்திரிக்கை நடத்திட நிதி உதவி தேவை என ராய் கோரியபோது, காந்தி முதலில் நாடு முழுக்க சுற்றி வாருங்கள் என்றார். ஃபைஸ்பூர் மாநாட்டில் ராஜேந்திர பிரசாத்தால் அரசியல் அமைப்புசட்ட அசெம்பிளி தீர்மானம் கொணரப்பட்டது. டாங்கே சோவியத், பிரான்ஸ் நடைமுறைகளை சுட்டிக்காட்டி நமது விடுதலை போராட்டம் வெற்றிக்கு பின்னர் அரசியல் அமைப்பு அசெம்பிளி (CA) என்றார். ஜெயபிரகாஷ் நாரயணன் டாங்கேவிற்கு ஆதரவு தெரிவித்தார். ராய் அவர்கள் சி ஏ அவசியம் குறித்து உரையாற்றினார். ஃபைஸ்பூர் காங்கிரஸ் இதற்காக தேசிய கன்வென்ஷன் ஒன்றை கூட்ட முடிவெடுத்தது. ராய் காட்ஸ்கி ஆகிவிட்டார் என்ற விமர்சனத்தை கம்யூனிஸ்ட்கள் வைத்தனர். நரேந்திரதேவ் புரட்சிகர கருத்து என ராயை பாராட்டினார். லோகியாவும் நம் கையில் கிடைக்கும் சிறந்த ஆயுதம் என்றார். இப்படி இடதுசாரிகளாக செயல்பட்டவர்கள் யார் எப்பக்கம் என்பது ஒவ்வொருமுறையும் கணிக்க முடியாமல் இருந்தது.

இந்திய அரசாங்க சட்டம் 1935 அடிப்படையில் 1937 தேர்தல்கள் முடிந்தவுடன் கவர்னர்கள் மந்திரிசபையின் அன்றாட செயல்பாட்டில் தலையிடக்கூடாது என்பது வற்புறுத்தப்பட்டது. ஏகாதிபத்திய எதிர்ப்பு அமைப்பு என்ற அளவிலாவது காங்கிரஸ் தனது தொளதொளப்பை விட்டு பலவீனங்களை களைந்து புரட்சிகர அமைப்பாக எழவேண்டும் என ராய் வற்புறுத்தினார். மக்கள் தொடர்பு கமிட்டி ஒன்றை ராஜேந்திர பிரசாத், ஜெயபிரகாஷ், தௌலத்ராம் கொண்டு காங்கிரஸ் அமைத்தது. காங்கிரஸ் அமைப்பு சட்ட திருத்தமும் நிகழ்ச்சிநிரல் ஆக்கப்பட்டது. வலது பிரிவினர் தனிநபர்களை உறுப்பினர்களாக வைக்கலாம் ஆனால் அமைப்புகளை கார்ப்பரேட் உறுப்பினர்களாக கூடாது என்றனர். இதில் கம்யூனிஸ்ட்கள் காங்கிரஸ் சோசலிஸ்ட்களின் கருத்து ஏற்கப்படவில்லை. முதலில் ராய் Collective Affiliation என்கிற கருத்திற்கு ஏற்புடையவராக இருந்தாலும் பின்னர் தனது நிலையை அவர்

மாற்றிக்கொண்டார். வர்க்க அமைப்புகளை முழுமையாக காங்கிரஸ் கட்டுப்பாட்டிற்கு கொண்டு செல்வது சரியல்ல என பேசினார். ஒவ்வொரு வர்க்க ஸ்தாபன உறுப்பினரையும் தனி உறுப்பினர் என்ற முறையில் காங்கிரஸ் உறுப்பினராக ஏற்கலாம் என்றார் ராய். 1935 சட்டப்படி அமைச்சரவை பங்கேற்பு குறித்தும் விவாதம் இருந்தது. நேரு போன்றவர்களுக்கு கூட தயக்கம் இருந்தது. ராய் பங்கேற்பை ஆதரித்தார். அரசுக்குள் அரசாக (State within state) செயல்படுவதற்கான வலுவை காங்கிரஸ் பங்கேற்பு தரும் என ராய் கருதினார்.

விவசாய அமைப்புகள் அவ்வப்போது ஏற்படுத்தும் கிளர்ச்சிகள் புரட்சியாகாது- அவர்களால் தனித்து புரட்சி உருவாக்கவும் இயலாது என ராய் கருதினார். அதே நேரத்தில் நில சொத்துரிமை என்பதில் தீவிர மாற்றங்கள் உருவாக்கப்படவேண்டும் என விரும்பினார். தேசிய இயக்கங்களின் முழு வெற்றி என்பது விவசாய பிரச்சனை தீர்வில் இருக்கிறது என்றார். .

பல்வேறு பிரிவுகளாக செயல்பட்டாலும் இடதுசாரி சிந்தனை தேசிய இயக்கங்களில் வளரத்துவங்கியது. இடது தேசியம் என்பதின் குரலாக சுபாஷ் போசை காங்கிரஸ் தலைவராக்கிட முயற்சிகள் நடந்தன. இடது பார்வையை கொள்கை பூர்வமாக முன்வைக்காமல் மேலெழுந்தவாரியாக போஸ் பேசுகிறார் என்ற குற்ற சாட்டை நேரு வைத்தார். காந்தியின் மனநிலைக்கு எதிராக நேரு செயல்பட தயாராக இல்லாதது இடதுசாரிகளை பலவீனமாக்கியது. திரிபுரா காங்கிரசில் 1939ல் காங்கிரசில் காந்தியின் உயர்நிலையை அங்கீகரிக்காது போட்டி என போஸ் நிற்பேன் என்றார். போஸ் நிலைப்பாட்டை பட்டேல் தலைமையில் வலது பிரிவு எதிர்க்க முடிவு செய்தது. பட்டாபிசீதாராமையாவை நிற்கவைத்தது. பட்டாபிசீதராமையா தோல்வியை தன் தோல்வியாக கருதி வெளிப்படையாக காந்தி பேசினார். காந்தி என்ற ஒற்றை தலைமை போல் இடதுசாரிகளுக்கு என ஒற்றை தலைமை இல்லாதது குறைதான் என சுபாஷ் கருத்து தெரிவித்தார். ஜெயபிரகாஷ்நாரயண் காந்திக்கும் சுபாஷிற்கும் இடையில் இணக்கம் உருவாக்க முயற்சித்தும் அது சாத்தியமாகவில்லை. பரத்வாஜ் போன்ற கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் காந்தியின் விருப்பம் ஏற்கப்படவேண்டும் என்றாலும் போஸின் தலைமை என்பதையும் வலியுறுத்தினர். காங்கிரசை தீவிரப்படுத்தவேண்டும் என்பதற்கு ராய் காட்டிய அவசரத்தை நேரு ஏற்க மறுத்தார். கம்யூனிஸ்ட்கள் சோசலிஸ்ட்கள் ஆகிய இருபக்கத்தினரும் ராயை தனிமைப்படுத்துவதில் முனைப்பாக இருந்ததாக ராயிஸ்ட்கள் குற்றம் சாட்டினர்.

போஸ் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் கமிட்டியில் விலகுவதாக அறிவித்தார். தனது 4 ஆதரளவாளர்களாவது கமிட்டியில் என்பதற்கு காந்தி இரண்டுதான் என்றதும் தான் அனுப்பிய பெயர்களில் ஒருவரை மட்டும் காந்தி ஏற்றதும் போஸிற்கு ஏற்கனவே இருந்த அதிருப்தியை அதிகப்படுத்தியது. போஸ் விலகல் சீர்குலைவு வேலைகளை

அதிகரித்துவிடும் என ஜெயபிரகாஷ் எச்சரித்தார். ராயிஸ்ட்கள் காங்கிரஸ் தலைவரை பொம்மையாக வைத்துக்கொண்டு காரியமாற்றுவது சரியல்ல எனவே போஸ் ராஜினாமா சரியானதே என விவாதித்தனர். ராய் போஸ் அணியுடன் நெருக்கம்போன்ற காட்சி வரத்துவங்கியது. ஆனால் போஸ் ஒத்துழைப்பை கோரவில்லை என்ற வருத்தமும் ராயினருக்கு இருந்தது.

பிப் 1939ல் ராய் ஆதரவாளர்கள், கம்யூனிஸ்ட்கள், போஸ் அணியினர், சோசலிஸ்ட்கள் என அனைத்து இடது தரப்பினரும் பங்கேற்ற மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. இந்த ஒற்றுமை மாநாட்டை தொடர்ந்து நீட்டிக்கமுடியவில்லை. மே மாதம் பார்வார்ட் பிளாக் உருவாக்கத்தை போஸ் அறிவித்தார். ஜெயபிரகாஷ், ஜோஷி போன்றவர்கள் அனைத்திந்திய இடதுசாரிகளின் ஒருங்கிணைப்புக்குழுவை பலப்படுத்த வேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தினர். போஸ் அழைப்பை ஏற்று பார்வார்ட் பிளாக்கில் சேர்வது என்பதை கம்யூனிஸ்ட்கள் சோசலிஸ்ட்கள் ஏற்கவில்லை. Left Consolidation Committte (LCC) Left Radical Congressmen (LRC) போன்றவைகளுக்கு ராய் முக்கியத்துவம் தந்தார். அக்கூட்டங்களிலும் நான்கு வகையினராக செயல்பட்ட இடதுசாரிகளின் வேறுபாடுகளை குறைக்க முடியவில்லை. போஸ் கொள்கைபூர்வமான போராட்டங்களைவிட தனது முக்கியத்துவத்திற்காக போராடுகிறார் என்ற எண்ணம் ராயிடம் வரத்துவங்கியது.

சோசலிஸ்ட்களின் செயற்குழுவிலிருந்து ஜூலயில் லோகியா, மசானி, பட்வர்தன் போன்றவர்கள் விலகுவதாக முடிவெடுத்தனர். LCC என்ற பெயரில் காங்கிரஸை பலவீனப்படுத்துவதை ஏற்பதற்கில்லை என்பது அவர்களின் குற்றசாட்டாக இருந்தது. கொள்கையற்று சீர்குலைவு வேலைகளை செய்வதாக ராயினரை கம்யூனிஸ்ட்கள் தாக்கினர். போஸ் கம்யூனிஸ்ட்களின் செயல்பாடுகளை பதிலுக்கு விமர்சித்தார். டிசம்பர் 1939 பார்வர்ட் பிளாக் கூட்டத்தில் கம்யூனிஸ்ட்களுடன் உறவுமுறிவு என அறிவித்தார். LRCயை மக்கள் திரள் இயக்கமாக மாற்ற ராய் விழைந்தார். மாவட்டந்தோறும் குறைந்தது 5 தீவிர களப்பணியாளர்களாவது வேண்டும் என கருதினார்.

ராம்கர் மாநாட்டில் காங்கிரஸ் தலைமைக்கு ராய் பெயர் எழுப்பப்பட்டபோது ஒருமித்த கருத்து இல்லையெனில் தனது பெயரால் பிளவு தேவையில்லை என தெரிவித்தார். போஸ், கம்யூனிஸ்ட்கள், சோசலிஸ்ட்கள் மத்தியில் ஆதரவு எழவில்லை என்பதையும் ராய் அறிந்திருந்தார். ராயுடன் வேறுபாடுகள் இருந்தபோதினும் அவர் மதிக்க தகுந்த வேட்பாளர் என ஜெயபிரகாஷ் தெரிவித்தார். ராய் புரட்சிகரவாதியல்ல, சீர்குலைவுவாதி அவருக்கு ஆசாத் வேட்பாளர் என்பது எவ்வளவோ மேலானது என கம்யூனிஸ்ட்கள் தெரிவித்தனர். ராய் காங்கிரஸ் தலைவருக்கு நின்று படுதோல்வி அடைந்தார். மௌலானாஆசாத் 1854 வாக்குகளையும், ராய் 183 வாக்குகளையும்

பெற்றனர். ராம்காரில் தேர்தலிலும் தீர்மானங்கள் நிறைவேற்றத்திலும் இடதுசாரிகள் பல்வேறு நிலைபாடுகளை எடுத்தனர்.

V

உலகப்போர் மூலக்கூடாது என்பதை காங்கிரஸ் 1927முதலே பேசத்துவங்கியது. பிரிட்டிஷ் எதிர்ப்பில் காங்கிரசின் ஊசாலாட்ட அணுகுமுறை குறித்து இடதுசாரிகளின் 4 பிரிவுகளுக்கும் விமர்சனம் இருந்து வந்தது. காங்கிரசின் வலது பிரிவு ஒத்துழையாமை என பேசிவந்தது. 1939ல் காங்கிரசின் மத்திய செயற்குழு முடிவை அமைச்சர்கள் ஏற்க நேர்ந்தது. அனைவரும் அமைச்சரவையிலிருந்து விலகி கொண்டனர். ராய் பாசிச ஜெர்மனி எதிர்த்த பிரிட்டிஷ் யுத்தம் என ஆதரவு தெரிவித்தார். யுத்தத்தின் போக்கை பார்த்து நடுநிலைமை நியூட்ரல் நிலை என பேசத்துவங்கினார். காங்கிரஸ் அமைச்சரவை விலகல் என்பதையும் அவர் ஏற்கவில்லை. மக்களை காக்கும் பொறுப்பிலிருந்து காங்கிரஸ் அரசாங்கம் விலகக்கூடாது. அதே நேரத்தில் விடுதலைக்கான இறுதி போராட்டத்திற்கான வாய்ப்பாக யுத்த சூழலை பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்றார். பலவீனப்படுத்தப்பட்ட அமைச்சரவையால் மக்களின் சிவிலுரிமைகளை காக்கமுடியாது என ராயிடம் காந்தி தெரிவித்துவிட்டார்.

காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் யுத்தத்திற்கு எதிரான தீர்மானங்களை நிறைவேற்றினர். யுத்த எதிர்ப்பு என்பதில் உறுதியாக இருக்க வேண்டும் என்றனர். அமைச்சரவை ராஜினாமா சரியானதே என்றனர். காந்தியடிகள் அறைகூவலுக்கு காத்திருப்பது, அவசியமெனில் சத்தியாக்கிரக போராட்ட அறைகூவலை சோசலிஸ்ட்கள் சார்பில் அறிவிப்பது என்ற முடிவையும் அவர்கள் எடுத்தனர். ஏகாதிபத்தியம் எதிர்த்த தேசிய போராட்டம் என்றார் ஜெயபிரகாஷ். யுத்த காலத்தில் நடுநிலை என்பது சரியல்ல, நெருக்கடியை பயன்படுத்திக்கொண்டு சூழலை புரட்சிகரமாக மாற்றவேண்டும். வேலைநிறுத்தங்கள், வரிகொடா இயக்கம், மக்கள் போராட்டங்களை காங்கிரஸ் கட்ட முன்வரவேண்டும். பார்வார்டுபிளாக், காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் தனியாக கொடுக்கும் அறைகூவல் மக்கள் ஈர்ப்பு போராட்டமாக அமையாது என்று கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் ஜோஷி அறிக்கை வெளியிட்டார். 1940-42 கம்யூனிஸ்ட் தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர் லெனின், முசோலினி இருவருமே கொண்டாடப்படக் கூடியவர்கள் என்ற கருத்திலிருந்தார் சுபாஷ்போஸ். சோசலிசம்- பாசிசம் ஒத்திசைவு உருவாக்கம் குறித்து பேசி. வந்தார். செப்டம்பர் 8 1939 வார்தா கூட்டதிற்கு போஸ் அழைப்பாளராக வந்தார். காங்கிரஸ் அமைச்சரவை தானாக விலகியிருக்கக்கூடாது, கலைக்கப்பட வைத்திருக்கவேண்டும். அதுதான் சரியான போராட்ட தந்திரமாக இருந்திருக்கும் என்றார். யுத்த நெருக்கடி அற்புதமான விடுதலை போராட்ட வாய்ப்பை நல்கியிருக்கிறது. காங்கிரஸ் முடிவெடுக்காவிட்டால் பார்வர்ட்பிளாக் தனது

பாதையை தேர்ந்தெடுக்கும் என்றார். கம்யூனிஸ்ட்கள், சோசலிஸ்ட்கள் போலவே ஆட்சிஅதிகாரம் வந்தபின்னர் அரசியல் அமைப்பு அசெம்பிளி என்றார். கம்யூனிஸ்ட்கள் போஸ் அணியினரை விமர்சித்தனர். இடது போல முழங்கினாலும் ஒற்றுமைக்கு குந்தகம் விளைவிக்கும் சீர்குலைவு வேலைகளை செய்கிறார்கள் என்றனர். போருக்கு பின்னர் ஏகாதிபத்தியம் நீர்த்து வலுவிழக்கும் என்ற ராயின் கருத்தை போஸ் விமர்சித்தார்.

நேரு இடதுசாரிகளுடன் சேர்ந்து உடனடி சிவில் ஒத்துழையாமை என பேசினார். படேல், பிரசாத், ராஜாஜி ஒத்துழையாமைக்கு நாடு தயாராகவில்லை என்ற காந்தியின் கருத்தை பிரதிபலித்தனர். இந்த காலத்தில் முஸ்லீம் லீக் தனது பாகிஸ்தான் தனிநாடு கோரிக்கையை நிறைவேற்றி தீவிரப்படுத்திக் கொண்டிருந்தது. வைஸ்ராய் லின்லித்கௌ காந்தியுடனும் ஜின்னாவுடனும் பேச்சுவார்த்தை நடத்தினார். பாகிஸ்தான் என்பதில் எந்தவித சமரமும் இல்லை என ஜின்னா அறிவித்தார். இடைக்கால அரசாங்கம் என்பது ஏற்கப்பட்டால் நாட்டின் பாதுகாப்பு என்பதில் முழு கவனத்தையும் செலுத்த முடியும் என காங்கிரஸ் செயற்குழு தீர்மானித்தது. வைஸ்ராய் கவுன்சில் என்பதை ஜின்னா ஏற்கலாம் என்றார். இந்துமகாசபாவும் ஏற்கலாம் என்றது. காந்தி நிராகரித்தார். இந்திய பிரதிநிதிகள், மன்னர்கள் பிரதிநிதிகள் கொண்ட யுத்த ஆலோசனை குழு என்பதையும் வைஸ்ராய் முன்மொழிந்தார்.

யுத்தம் தொடர்பாக சமாதானம்- அமைதி உள்ளிட்ட கருத்துக்களை பேசிட சுதந்திரம் இல்லையேல் சத்தியாக்கிரக போராட்டம் என காந்தி பேசினார். உடனடி கோரிக்கை விடுதலையல்ல பேச்சுரிமை என்றார் காந்தி. ஜூன் 1941 கணக்கின்படி 20ஆயிரத்திற்கும் மேற்பட்ட காங்கிரசார்கள் கைதாகினர். போருக்கு எதிராக என்ற புரிதலில் போராட்டத்திற்கு ஆதரவு குறைவது போல் காந்தி உணர்ந்ததால் அக்டோபரில் போராட்டத்தை விலக்கி கொண்டார். சத்தியாகிரகம் மக்கள்திரள் ஒத்துழையாமையாக மாறாததில் ராய் ஏமாற்றமடைந்தார். கம்யூனிஸ்ட்களும், போசிஸ்ட்களும் சிறைநிரப்ப ஆர்வப்படுவதுபோல் தங்களால் முடியாது என்றார். காங்கிரசை லட்சக்கணக்கான பெயரளவு உறுப்பினர்கள் கட்சி என்பதிலிருந்து கேடர்கள் கட்சியாக மாறிடவேண்டும் என பேசத்துவங்கினார். பாசிச எதிர்ப்பு போரிலே வெற்றிபெற சர்ச்சில் தலைமையில் அமைந்த புதிய பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழைக்கவேண்டும் என்றார். தான் ஆர்வமாக செயல்பட்ட LRCயை RDP என்கிற தீவிர ஜனநாயக கட்சியாக 1940 டிசம்பரில் பெயர் மாற்றம் செய்தார். NDU National Democratic Union என்கிற பரந்த மேடை அமைத்து அதில் இந்துமகாசபா, சுயராஜ்யகட்சியினர், செட்யூல்டு பட்டியல் சம்மேளனம் போன்றவை வந்து சேரவேண்டும் என்ற வேண்டுகோள் விடுத்தார். ராயின் முயற்சிகள் பலனளிக்காதது மட்டுமின்றி அவர் நடைமுறை அரசியலுக்கு லாயக்கற்றவர் என்ற கருத்தும் பரவியது.

AITUC அமைப்பிலும் ஏற்பட்ட கருத்து மோதல்களால் பாசிச எதிர்ப்பு தொழிற்சங்க கவுன்சில் என்ற ஒன்றை ராய்குழுவினர் அமைத்தனர். 1941நவம்பரில் இந்தியன் பெடரேஷன் ஆப் லேபர் உருவாக்கினர். காங்கிரஸ் மற்றும் முஸ்லீம் லீக் மத்தியில் உறவுகளை பலப்படுத்த பாகிஸ்தான் கோரிக்கையை கொள்கை அளவில் பரிசீலிக்கலாம், ராய் கூறுவது போல ராஜ்ய அரசாங்கங்களை புதுப்பிக்கலாம் என்ற கருத்தை ராஜாஜி தெரிவித்தார். 1942 ஏப்ரலில் காங்கிரஸ் ராஜாஜியின் கருத்தை நிராகரித்தது. அவர் கட்சியிலிருந்து விலகினார். ஜெர்மனியின் சோவியத் தாக்குதலுக்கு பின்னர் பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சி தனது நிலைப்பாட்டை மாற்றிக்கொண்டது. இந்தியாவில் கைதாகி சிறையிலிருந்த தலைவர்களுக்கும் வெளியிலிருந்த தலைவர்களுக்கும் புரிதலில் கருத்துவேறுபாடு இருந்தது. சோவியத்திற்கு ஆதரவு என்பதையும் பிரிட்டிஷ் எதிர்ப்பு விடுதலை போராட்டம் என்பதையும் ஒரே நேரத்தில் நடத்தவேண்டும் என்ற கருத்து இருந்தது. 1942 துவக்கத்தில் Foreword to Freedom கட்டுரையில் P C ஜோஷி தேசிய அரசாங்கம் என்பதை தெரிவித்தார். நிலைமை மக்கள் யுத்தமாக மாறிவிட்டது என்பதும் தெரிவிக்கப்பட்டிருந்தது. ராயை பிரிட்டிஷ் ஏஜெண்ட் எனவும் வர்ணித்தது. காந்தியைவிட நேரு- ஆசாத்தை பிரிட்டிஷ் ஜனநாயகவாதிகள் நம்பலாம் என்றும் தெரிவிக்கப்பட்டது.

வெள்ளையனே வெளியேறு தீர்மானம் குறித்தும் கம்யூனிஸ்ட்கள் காங்கிரஸ் கமிட்டியில் நாட்டை பலவீனப்படுத்தும் முயற்சி என்றனர். பாசிச ஆபத்தை முறியடிக்க தேசத்தில் அனைவரின் ஒற்றுமை என்ற முழக்கத்தை வைத்தனர், சோவியத் மீதான தாக்குதல் என்பதாலேயே யுத்தத்தின் தன்மை மாறிவிடாது என்று காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் கம்யூனிஸ்ட்களை விமர்சித்தனர். ஜனநாயகத்திற்கும் பாசிசத்திற்கும் ஆன பிரச்சனைதான் யுத்தம் என ராய் கூறியதையும் முட்டாள்தனமானது என சோசலிஸ்ட்கள் விமர்சித்தனர். ருஷ்யா வந்ததாலேயே ஏகாதிபத்திய யுத்தம் மக்கள் யுத்தமாக மாறிவிடாது என்றனர்.. பிரிட்டிஷார் வெளியேறட்டும் இந்தியாவின் தலைவிதியை நாம் முடிவுசெய்துகொள்ளலாம் என நரேந்திரதேவ் முழங்கினார்.

பாசிச எதிர்ப்பில் சோவியத்தின் பங்குபாத்திரம் மிக முக்கியமானது என்பதை தொடர்ந்து சொல்லி வந்தார் ராய். பிரிட்டன் சோவியத்துடன் அணிசேர்ந்துள்ள நிலையில் பிரிட்டனுடன் ஒத்துழைக்கமுடியாது என்ற நிலை எடுப்பது சரியல்ல என்றார் ராய். அகிலம் தன்னை அங்கீகரிக்கவில்லை என தெரிந்தபோதும் தனது சோவியத் ஆதரவு நிலைப்பாட்டை தெரிவித்து செய்தி அனுப்பினார். தான் மீண்டும் சோவியத்தால் அங்கீகரிக்கப்படலாம் என்ற அவர் நம்பிக்கைக்கு பலன்கிட்டவில்லை. சோவியத் வழிகாட்டுதல் கம்யூனிஸ்ட்களை மக்கள் யுத்த முழக்கத்திற்கு

கொணர்ந்தது. பாசிச எதிர்ப்பு முன்னணிக்கு நேரு தலைமை தாங்கவேண்டும் என ராய் வேண்டுகோள் விடுத்தார், வெள்ளையனே வெளியேறு சூடுபிடித்தது. ராய் குழுவினரும், கம்யூனிஸ்ட்களும் பங்கேற்கவில்லை. சோசலிஸ்ட்கள் அவ்வியக்கத்தில் தங்களை நாயகர்களாக மாற்றிக்கொண்டனர்.

போஸ் 1941 துவக்கத்திலேயே இந்தியாவை விட்டு வெளியேறினார். கிரிப்ஸ் தூதை நிராகரிக்க வற்புறுத்தினார். போஸ் அமைத்த ஆசாத் ஹிந்த் அரசாங்கம் ராயின் ஜப்பான் அய்யப்பாடுகளை அதிகரித்தது. நேரு கிரிப்ஸ் முன்மொழிவுகளை விவாதித்து முடிவிற்கு வரவேண்டும் என ராய் அணியினர் வற்புறுத்தினர். நேரு, ஜின்னா, ராஜாஜி, அம்பேத்கார், ராய் ஆகியோரை கொண்ட யுத்தகால தற்காலிக அரசாங்கம் அமைக்கலாம் என்ற ஆலோசனையை ராய் அணித்தலைவர் தார்குண்டே தெரிவித்தார். அவரது ஆலோசனை ஏற்கப்படவில்லை.

1942ன் இறுதியில் நடந்த தங்கள் ஆர்டிபி(RDP) கட்சி மாநாட்டில் அரசியல் அமைப்பு சட்டப்படி சுதந்திர இந்தியா, நுகர்வோர் கூட்டுறவு இயக்கம், சிறந்த வகையிலான தொழிற்சங்கங்க நடவடிக்கை போன்ற திட்டங்களுடன் மக்கள் சந்திப்பு இயக்கம் என ராய் அணியினர் முடிவெடுத்தனர். தேசிய ஜனநாயக புரட்சி பொருத்தமில்லாதது என ராய் பேசிவந்தார். தொழிலாளர்- விவசாயிகளுக்கான சமூக திட்டம்தான் இனி மையமாக இருக்கவேண்டும் என்றார் ராய். பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் என்பதை ராய் கைவிட்டாலும் பாராளுமன்ற ஜனநாயகம் என்பது குறித்தும் அவருக்கு விமர்சன பார்வை இருந்தது. அனைவருக்கும் வாக்குரிமை, தல அரசாங்கம், கூட்டுறவு இயக்கம், ஊரக வளர்ச்சிதிட்டம், கிராமங்களில் கலாச்சார கல்வி மேம்பாடு போன்றவற்றை மக்களிடம் எடுத்துசெல்ல ஆதரவு திரட்ட பொருத்தமான மக்கள் கமிட்டி அமைப்புகளை வலுப்படுத்துதல் என ராய் முன்மொழிந்தார். ஆரம்ப ஆண்டுகளில் கொடியில் காணப்பட்ட அரிவாள் சுத்தியல் என்பதையும் அவர் எடுத்துவிட்டார். Flaming Torch என்பதை பொறிக்க துவங்கினார்.

## VI

யுத்தத்திற்கு பிந்தியுள்ள நிலைமைகளை சீர்படுத்திட 1944 ஜாரியா கட்சி மாநாட்டில் மக்கள் திட்டம் என ராய் முன்மொழிந்தார். ஏழை விவசாயிகள், கைத்தொழிலாளர், நுகர்வோர் பங்கேற்கும் மக்கள் கூட்டுறவுகள் என அத்திட்டம் பேசியது. நாட்டின் 70 சத கிராமப்புற மக்களின் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்த விவசாய புரட்சி என அத்திட்டம் தெரிவித்தது. ருஷ்யாவிலிருந்து சில முழக்கங்கள் கடன் வாங்கப்பட்டன. வாலண்டரி கலெக்டிவிஷேசன்(Collectivisation) என்ற நில சீர்திருத்தம் முன்மொழியப்பட்டது. விடுதலை இந்தியாவிற்கான அரசியல் அமைப்பு சட்டம் என்கிற கான்ஸ்டிட்யூஷன் நகல் ஒன்றை ராய் தயாரித்தார். காங்கிரஸ் அதை ஏற்றுக்கொண்டால் மக்களை

திரட்டும் பணியில் காங்கிரஸ் பின்னால் வருவோம் என ராய் அறிவித்தார். தங்கள் கட்சியில் 1940-1944 4 ஆண்டுகளில் 3500 லிருந்து லட்சம் உறுப்பினர்களுக்கு மேல் உயர்ந்துவிட்டதாக ராயினர் தெரிவித்தனர். இதில் ஆலைத்தொழிலாளர்கள் 15சதம், படித்த மத்தியதர வர்க்கம் 20 சதம் என்றனர். 1943ல் AITUC விட தங்கள் IFL தொழிற்சங்கத்தில் அதிக சங்கங்கங்களும் உறுப்பினர்களும் இணைந்துவிட்டதாக தெரிவித்தனர். ரயில்வே தொழிற்சங்க தலைமை பதவிக்கு தங்கள் ஆதரவுடன் ஜம்னதாஸ்மேத்தாவை என் எம் ஜோஷிக்கு எதிராக நிறுத்தி வெற்றிபெற வைத்தனர். 1945ல் பாரிசில் WFTU துவக்க நிகழ்விற்கு AITUC மற்றும் ராயின் IFLஆகிய இரு அமைப்புகளும் பங்கேற்றன. ஆரம்ப நாட்களில் கம்யூனிஸ்ட்களுடன் மிக நெருக்கமாக செயலாற்றி வந்த பிலிப் ஸ்பிராட் ராயுடன் இணைந்தார்.

போருக்குப் பின்னர் லேபர் கட்சி ஆட்சியை கைப்பற்றும், பிரிட்டன் முழுமையாக இடது பக்கம் திரும்பும் என ராய் கருதினார். வின்ஸ்டன் சர்ச்சிலை விமர்சித்தும் வந்தார். பிரிட்டனில் செல்வாக்கு பெற லண்டனில் கட்சி அலுவலகம் ஒன்றையும் ராய் நிறுவினார். ஆனால் லேபர் கட்சியின் மீது தான் கொண்டிருந்தது மாயை என பின்னர் உணர ஆரம்பித்தார். 1945 ஜூனில் வேவல் தற்காலிக அரசாங்க திட்டம் குறித்த மாநாடு ஒன்றை சிம்லாவில் கூட்டினார்.. அதில் எந்த இடது பிரிவிற்கும் இடமில்லை. வேவல் திட்டம் மக்களுக்கு துரோகம் என ராய் விமர்சித்தார். காங்கிரஸ் முஸ்லீம் லீக் மத்தியில் இருந்த வேற்றுமையால் பலனின்றி முடிந்தது அம்மாநாடு. 1945 ஜூலையில் அட்லி லேபர் சர்க்கார் பதவிக்கு வந்தது.

INA முக்கிய வீரர்கள் விடுதலை, RIN போராட்டம் ஆகியவற்றால் காங்கிரசின் மதிப்பும் செல்வாக்கும் பெருகியிருந்தது. ரின் எழுச்சியில் கம்யூனிஸ்ட்களும் அருணாஆசப்அலி போன்ற சோசலிஸ்ட்களும் தலையாய பங்கை வகித்தனர். புரட்சியாளர்கள் காங்கிரஸ் கம்யூனிஸ்ட் லீக் என மூன்று கொடிகளையும் உயர்த்தினர். பிரிட்டிஷ் வீரர்களுக்கும் இந்திய வீரர்களுக்கும் கடும் சண்டை நடந்தது. பம்பாய் மக்கள் ஆதரவும் பெருகியது. ஆனால் படேல் இதனை கலகம் என கடுமையாக கண்டித்தார். உடனடியாக வாபஸ் பெற வற்புறுத்தினார். நேரு போராட்டத்தை ஆதரவுடன் பார்த்தாலும் தவறான தந்திரம் என்றார். காங்கிரஸ் தலைவர் ஆசாத் ராணுவ வீரர்களின் நேரடி போராட்டம் என்பது தவறானது, அறிவிற்கு உகந்த செயல் அல்ல என்றார். 200க்கும் மேற்பட்டவர்கள் மடிந்தனர். ஆயிரக்கணக்கானவர் படுகாயம் அடைந்தனர். இதுபோன்ற குறுகியகால எழுச்சிக்கு ஆதரவு தரக்கூடாது என்ற நிலையை எம் என் ராய் எடுத்தார். பிரிட்டிஷார் ஆட்சி மாற்றம் செய்யப்போவதற்கான சூழலில் அரசியல் போராட்ட இயக்கங்கள்தான் தேவை- இதுபோன்ற அமைதியற்ற ராணுவ நடவடிக்கைகள் கூடாது என ராய் குழுவினர் கருதினர். அஞ்சல் ஊழியர்களின் 1946 ஜூலை வேலைநிறுத்தத்தில் கம்யூனிஸ்ட்கள் முக்கிய பங்காற்றினர்.

அப்போராட்டத்திற்கு ராய் தனது ஆதரவை நல்கினார். அதேபோல் ஆரம்பபள்ளி ஆசிரியர்கள், கராச்சி கப்பல் தள தொழிலாளர்கள் போராடினர். ஆங்காங்கே ஜமீன்தாரர்களுக்கு எதிராக நடந்த விவசாயிகளின் போராட்டத்திலும் ராய் கட்சியினர் பங்கேற்றனர்.

பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் அட்லி இந்தியாவிற்கு அதிகார மாற்றம் 1948 ஜூனிற்கு முன்பாக செய்யப்படும் என அறிவித்தார். ஒன்றுபட்ட இந்தியா என்பதற்கு லீக் தலைவர்களை ஏற்க வைக்க யாராலும் முடியவில்லை. பிரிட்டன் வெளியேற்றத்திற்கான முழு பொறுப்பும் மெளண்ட்பேட்டனிடம் கொடுக்கப்பட்டது. இரு இறையாண்மை நாடுகள், ஆகஸ்ட் 15, 1947ல் என்ற அறிவிப்பை மெளண்ட்பேட்டன் ஜூன் 3 1947ல் அறிவித்தார். மதவழியில் பிரச்சனையை பிரிட்டிஷ் அதிகப்படுத்துகிறது என்ற விமர்சனத்தை ராய் வைத்தார். மைனாரிட்டிகளுக்கு நம்பிக்கை உண்டாக்கவேண்டியது பெரும்பான்மையினரின் கடமை. அதில் காங்கிரஸ் தவறிவிட்டது என்றார் ராய்.

மையப்படுத்தப்பட்ட அதிகாரமிக்க மத்திய அரசு என்பது பல்வேறு வேறுபட்ட தன்மையிலான நமது நாட்டில் சுதந்திரம், தன்னாட்சி என்பதை இல்லாமல் ஆக்கிவிடும். இந்திய சம்மேளனம் என்ற ஆட்சிமுறை தேவை என ராய் பேசினார். திராவிடஸ்தான் என்பதைக்கூட அவர் ஆதரிக்க துவங்கினார். ஜெயப்ரகாஷ்நாரயண் நாட்டின் பிரிவினையை கடுமையாக எதிர்த்தார். ராஜாஜி மக்களிடம் உண்மையை சொல்லத் தவறுகிறார் என அவர் விமர்சித்தார். 1947 மார்ச்சில் நடந்த தங்கள் கான்பூர் மாநாட்டில் காங்கிரஸ் சோசலிஸ்ட்கள் அதிகார மாற்றம் உழைப்போர் கையில்வரவேண்டும் என தீர்மானம் இயற்றியது. அதிகார மாற்ற விவாதங்களில் அதற்கு எந்த பங்கையும் காங்கிரஸ் தலைமை தரப்போவதில்லை என்ற ராயின் எச்சரிக்கையை அவர்களால் அப்போதுதான் உணரமுடிந்தது. கம்யூனிஸ்ட் கட்சி விவசாயிகளின் எழுச்சியில் தெபகா, தெலங்கானா போராட்டங்களில் தீவிர பங்காற்றியது.

இடதுசாரிகள் ஒன்றுபட்டு நிற்கவில்லையெனில் அரசியல் சட்ட அசெம்பிளி முற்றிலுமாக சொத்துரிமைக்காரர்கள் வசமாகிவிடும் என ராய் தனது கவலையை தெரிவித்தார். ராயின் குரல் எடுபடவில்லை. மார்க்சியத்தின் மீதான நம்பிக்கை இழப்பு அவரிடம் பற்றியது. தீவிர அரசியலிருந்து ஒதுங்கிவிடலாமா என்கிற எண்ணத்தை கடிதம் மூலம் நண்பர்களிடம் பகிர்ந்து கொள்ளத்துவங்கினார். அவரின் ஆதரவாளர்களுக்கு ராயின் விரக்தி அதிர்ச்சியை தந்தது. 1946 இறுதியில் தனது தீவிர ஜனநாயகத்திற்கான (Radical Democracy) 22 ஆய்வுகள் என்பதை முன்வைத்தார். அதிகார அரசியல் என்ற தீவிரத்திலிருந்து தத்துவ தேடல் நோக்கி அவர் திரும்பினார். Renaissance, Radical Humanism என்பதை முன்வைக்க துவங்கினார்.

ராயின் விடுதலைக்கு முன்னரான அரசியல் பயணம் குறித்த சில முக்கிய கட்டங்கள் மேலே பதிவிடப்பட்டுள்ளது. அவர் 1887ல் நரேந்திரநாத் பட்டாசார்யாவாக பிறந்து ஆரம்ப நாட்களில் பயங்கரவாத சதி சாகச அரசியல் கொள்ளை இயக்கங்களிலிருந்து மார்க்சியம் வர்க்க போராட்ட அரசியல் திசைக்கு திரும்பினார். லெனின், ஸ்டாலின், புகாரின் போன்றவர்கள் மட்டுமல்லாது மாவோ, பிரிட்டிஷ் கட்சித்தலைவர்கள், ஜெர்மானிய தலைவர்கள் ஆகியோருக்கு இணையான முக்கியத்துவம் பெற்று கம்யூனிஸ்ட் அகிலத்தில் பணியாற்றி, இந்திய இயக்க முன்னோடி தலைவர்கள் சிங்காரவேலர், டாங்கே, காட்டே என பலருக்கும் வழிகாட்டிய நிலைக்கு உயர்ந்திருந்தார், அகிலத்தின் தலைமையிடம் நம்பிக்கையிழப்பை பெற்ற பின்னர் இந்திய கம்யூனிஸ்ட் தலைவர்களிடமும் மோதல் ராய்க்கு முற்றியது. இந்திய விடுதலை இயக்க முன்னோடி தலைவர்களாக இருந்த காந்தி, நேரு, போஸ் போன்றவர்களுடன் நல்லுறவு, வேறுபாடுகள் என தான் எடுத்த முயற்சிகளில் பல தோல்விகளை கண்டார். காங்கிரஸ் தலைவராக முடியாமல் படுதோல்வி அடைந்தார். காங்கிரஸ் சோசலிச தலைவர்களுடனும் இதே நிலையைத்தான் அவரால் அனுபவமாக்கிக் கொள்ளமுடிந்தது. வாழ்நாளில் மக்களால் பெருமளவு ஏற்கப்பட்ட பெருந்தலைவராக ராயால் பரிணமிக்க முடியவில்லை. ராய், ஜெயபிரகாஷ் போன்றவர்கள் கட்சிகளற்ற அரசியல் என பின்னாட்களில் பேசத்துவங்கினர்.

தனக்கான ஆதரவாளர்களுடன் உச்சம் செல்வதும் எழுவதும் வீழ்வதுமாக அவரது அரசியல் பயணம் அமைந்தது. விடுதலைக்கு பின்னர் அவர் சில ஆண்டுகளே உயிர் வாழ்ந்தார். 1952 ஜூனில் மலைசரிவு ஒன்றில் 50 அடி கீழே விழுந்த விபத்தால் அவர் உடல்நலம் பெரிதும் பாதிக்கப்பட்டது. தனது 67ஆம் வயதில் சில மாதங்கள் நோய்வாய்பட்ட நிலயில் டேராடூன் இல்லத்தில் ஜனவரி 25, 1954 இரவில் மறைந்தார். விடுதலைக்கு பின்னர் மிக முக்கிய அவரது பெரிய அளவிலான படைப்பான Reason Romanticism and Revoultion யை கொணர்ந்தார்.. ஜனவரி 24 1954ல் அவர் மறைவிற்கு முதல் நாள் கூட தீவிர மனிதாபிமானம் பற்றிய தனது கட்டுரை ஒன்றை தனது துணைவியாருக்கு வாய்மொழியாக சொல்லி எழுத பணித்துக் கொண்டிருந்தார். வாழ்நாள் முழுதும் தனது ஆளுமையை சிந்தை திறனை மட்டுமே நம்பி பயணப்பட்டவர் ராய். தான் சரி என கருதியதற்காக தோல்விகளை கண்டு துவளாமல் ஓயாமல் தீவிரமாக உழைத்த சிந்தனையாளர் ராய்.

Reference:

M N Roy and Indian Politics by S M Ganguly

https://sreenivasaraos.com/category/m n roy

Lohiatoday-MN roy